**<u>நூல் விபரம்</u>**

நூலின் பெயர்- துறையூர் பதிவுகள்

நூலின் வகை- வரலாற்று ஆவணம்

தொகுப்பாளர்- துறையூர் காசி

வெளியீடு இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியம் (பிரான்ஸ்)

பதிப்புரிமை- வெளியீட்டாளர்களுக்கு

முக அட்டைப்பட வடிவமைப்பு- யோ.இன்பரூபன் -

அச்சுப்பதிவு-

பக்கங்கள்-

முதற்பதிப்பு- புரட்டாதி 2014

உள்ளடக்கம்

.



## ஆசியுரை

பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்

நற்றவ வானிலும் நனி சிறந்தனவே

வேலணை துறையூர் கிராமத்தின் அபிவிருத்தியினை முன் நோக்காக்க கொண்ட இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தின் பெரு முயற்சியில் எமது சிறு நிலமாகிய வேலணை துறையூர் கிராமத்தையொட்டிய வரலாற்று குறிப்புக்களை உள்ளடக்கமாக கொண்டு வெளிவருகின்ற துறையூர் பதிவுகள் என்ற தலைப்பிலான ஆவணப்பதிவேட்டிற்கு ஆசியுரை வழங்குவதில் பெரு மகிழ்ச்சியடைகின்றேன்

வேலணை கிராமத்தின் தென் பகுதியில் அமைந்திருக்க்க கூடிய துறையூர்க் கிராமத்தின் சமூக வரலாற்றினை முடிந்த மட்டில் விரிவாக பதிவு செய்து

« துறையூர் பதிவுகள் » என்ற தலைப்பிலான நூலாக வடிவமைத்து எங்கள் கிராமத்து மக்கள் கைகளிலே தந்திட கடினமான முயற்சிகளை மேற்கொண்ட எனது காலத்திய இளம் சமூக அக்கறையாளனும் எனது சகோதரனுமான அன்புத்தம்பி (துறையூர் காசி (செல்லத்துரை காசிலிங்கம் உட்பட்ட இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்திற்கும் அதன கீழான குறித்த நூல் வெளியீட்டு குழுவினருக்கும் எனது மேலான வாழ்த்துக்களை வெளிப்படுத்துவதில் பெருமையடைகின்றேன்

இந்த வரலாற்றுக் குறிப்பு எமது மக்களது அறிதலுக்கு அவர்கள் இதுவரை அறிந்திராத நமது சமூகம் பற்றிய பல தகவல்களை தன்னகத்தே கொண்டிருக்கின்றது என்பதால் இந்நூலினை ஒரு பெறுமானமிக்க ஒரு ஆவணமாகவே நான் பார்க்கின்றேன்

இந்த அரும் பெரும் முயற்சியில் ஈடுபட்ட அதைது தரப்பினரின் நல்லெண்ணங்கள் முளுமையான சமூகப்பயன்பாடுள்ளதாக அமைய கிராமத்தின் மூத்த தொண்டர்களில் ஒருவன் என்ற வகையில் எனது ஆசியினையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கின்றேன்

என்றென்றும் சமூநலன் விரும்பும்

நாகமுத்து ஐயம்பிள்ளை(கிராமத்தின் மூத்த தொண்டர்)

வேலணை தெற்கு 6ம் வட்டாரம்

துறையூர்



**வாழ்த்துரை**

வேலணை துறையூர் கிராமத்தின் வரலாற்று ஆவணமொன்று வெளியிடப்படுவதை எண்ணி பெருமகிழ்ச்சியடைகின்றேன்

கல்வி கலை மற்றும் விளையாட்டுத்துறைகளில் ஓங்கி வளர்ந்து சாதனைகள் பல நிகழ்த்திய - நிகழ்த்திக் கொண்டிருக்கின்ற வீரம செறிந்த பூமியாகும் எங்கள் துறையூர்

சமகாலத்து துறையூர் மக்களுக்கு அவர்களுக்கு முந்திய காலத்து சமூக அமைப்பின் வடிவத்தை விரித்து சொல்ல வேண்டியது மிக அவசியதமானதென்றே என நான் உணர்கின்றேன்

துறையூர் கிராமத்துக்கு பெருமை சேர்த்த சமயப் பெரியோர்கள் கல்விமான்கள் கலைஞர்கள் விளையாட்டு வீரர்கள் போன்றவர்கள பற்றிய குறிப்கபுக்களும் பிரதான நிகழ்வுகளும் உள்ளடங்கிய ஆக்கங்கள் இந்நூலின் பிரதான பொருளடக்கமாக இருப்பது இந்நூலின் சிறப்பமசமாகும்

இந்த பெரு முயற்சியினை மேற்கொண்டிருக்கும் எங்கள் துறையூர் மகன் காசி அவர்களின் தலைமையிலான துறையூர் மக்கள் உள்ளடங்கிய அமைப்பான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்திற்கும் இந்த மலர் வெளியீட்டுக் குழுவினருக்கும் மனப்பூர்வமான எனது வாழ்த்துக்களை தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்

நன்றி

அன்புடன்

சின்னத்தம்மபி கார்த்திகேசு

அகில இலங்கை சமாதான நீதவான்

உபதலைவர் பிரதேச சபை -வேலணை

துறையூர்



**வாழ்த்துரை**

நமது முன்னோர்களது ஆளுமையில் கீழ் நமது துறையூர் சமூகத்தின் ,யக்கப் போக்கு எவ்வாறாக இருந்தது அதன் கட்டமைப்பு எந்தமாதிரியான வடிவமைப்பில் காணப்பட்டது அதனை முன்னின்று முன்னோக்கி நகர்த்திய முன்னோடிகள் யார்? என்பன போன்ற சங்கதிகளை சமகால மற்றும் எதிர்கால சந்ததியினரின் அறிதலுக்காக வைக்க வேண்டுமென்ற நோக்கோடு துறையூர் பதிவுகள் என்ற நூலானது வெளிக்கொண்டுவரப்படுவதையிட்டு மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.

எனது வாழ்நாளில் ஏதொ ஒரு வகையில் துறையூர் சமூகத்தின் முன்னெடுப்பு நடவடிக்கைகளில் சம்பந்தப்பட்டவன் என்ற வகையிலும் சமூகத்தின் ஒருமைப்பாட்டை நேசிப்பவன் என்ற வகையிலும் குறித்த நூல் வெளிக்கொண்டுவரப்படுவதை முழுமனதுடன் வரவேற்கின்றேன்.

கடினமானதும் புதியதுமான ,ந்த முயற்சியில் ஈடுபட்ட எனது சமூகத்தின் உறவுகள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக்கொள்கின்றேன். காலத்துக்கு காலம் ,து போன்ற பதிவு ஆவணங்கள் வெளிக்கொண்டுவரப்படவேண்டும் என்ற எனது பேரவாவினை வெளிப்படுத்துவதுடன் எனது துறையூர் சமூகம் சார்ந்த ,ப்பதிவேட்டில் எனது வாழ்த்துச்செய்தியினை பதிவு செய்ய வாய்ப்பு கிடைத்தமையினையிட்டு பெருமகிழ்ச்சியடைகின்றேன்

,றுதியாக துறையூர் பதிவு என்னும் ,ந்நூலானது சமூகப்பயனுள்ள ஆவணமாக அமையட்டும் என மன நிறைவோடு வாழ்த்துகின்றேன்

நன்றியுடன்

ஆ. செல்வராசா

ஐயனார் ஆலய பரிபாலன சபை உறுப்பினர்



**வாழ்த்துரை**

நமது வேலணைத்துறையூர் கிராமத்தின் முந்திய வரலாற்று நிகழ்வுகள் தொகுக்கப்பட்டு அழகான வடிவத்தில் துறையூர் பதிவுகள் என்னும் தலைப்பிலான ஒரு நூல் வெளிக் கொண்டு வரப்படுவதையிட்டு மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.

நமது சிற்றூரான துறையூரில் வாழவாங்கு வாழ்ந்த நமது முன்னோர்களது சமூக ஈடுபாடுகள் அதன் பொருளாதாரம் மற்றும் கலை கல்வி விளையாட்டுத் துறைகளின் முன்னேற்றத்தின் மீதான அவர்களது அக்கறை, அதற்காக அவர்கள் மேற்கோண்ட முயற்சிகள் ஈட்டிய வெற்றிகள் போன்றவை தொடர்பான தகவல்கள் ஓரளவேனும் திரட்டி சமகால மற்றும் எதிர் கால சந்ததியினரது அறிதலுக்கு ஆவணமாக தரப்பட்டிருக்கின்றது. இந்த ஆவணப் பதிவேட்டின் வெளியீட்டினை ஒரு புதிய பயன்தரு முயற்சியாகவே நான் கருதுகின்றேன்

சமூக நிகழ்வுகள் ஆவணப்படுத்தப்படுவதன் அவசியத்தினை உணர்ந்து இந்நூலினை வெளியிட்ட பிரான்ஸ் மற்றும் ஐரோப்பிய அமெரிக்க வாழ் துறையூரவர்களது அமைப்பான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தின் இந்த உயர்வான முயற்சியினை மகிழ்வுடன் வரவேற்று வாழ்த்துகின்றேன்

அத்துடன் இம்முயற்சியில் ஒத்தாசை வழங்கி ஊக்குவிக்கும் அனைத்து புலம் பெயர்ந்து வாழ் நமது துறையூரவர்கள் அனைவருக்கும் குறித்த நூல் வெளியீட்டுக் குழுவினருக்கும் எனது நன்றிகளும் வாழ்த்துக்களும் உரித்தாகட்டும்

நன்றி

என்றும் நல்லாசிகளுடன்

ஐயம்பிள்ளை தனஞ்செயன்

வேலணை மேற்கு

6ம் வட்டாரம் துறையூர்



## வாழ்த்துரை

வேலணைக் கிராமத்தின் சிற்றூரான துறையூர் பகுதிக் கிராமம் தொடர்பான நமக்கு முற்படட் காலத்திய வரலாற்று நிகழ்வுகளை உள்ளடக்கி வெளிவருகின்ற துறையூர் பதிவுகள் என்னும் நூலிற்கு வாழ்த்துரை எழுதம் அரிய வாய்ப்பு கிடைத்தமையிட்டு மிகவும் பெருமையடைகின்றேன்

துறையூர் பகுதிக்கிராமத்தின் உரிமைக்கார்ரகளில் ஒருவன் என்ற வகையிலும் அக்கிராமத்தின் வரலாற்றுச்சான்றாக எழுந்து நிற்கின்ற எமது அரிகர புத்திர ஐயனார் ஆலய பரிபாலன சபையின் நீண்டட கால உறுப்பினன் என்ற வகையிலும் இந்த

துறையூர் பதிவுகள் என்ற நூலின் அவசியத்தை நன்றாகவே விளங்கிக் கொண்டு அதனை மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றேன்.

இதுவரை காலமும் எவராலுமே உணரப்படாத மாபெரும கைங்கரியத்தினை செய்து முடித்த எமது பிரதேச சமூக அக்கறையாளர்களது ஒன்றியமான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தினரது அரும் பெரும் முயற்சியினை மனம் திறந்து பாராட்டுகின்றேன். வரவேற்கின்றேன்

துறையுர் சமூகத்தின் சமூக நிகழ்வுப்போக்குகள்- அதனோடு தொடரபுடைய சமூக அக்கறையாளர்கள்- சமூக வளர்ச்சிப் போக்கில் அவர்கள் ஆற்றிய பணிகள் உடபட இன்னோரன்ன சமூகம் சார் சம்பவங்களை நமது அறிதலுக்காக ஆவண வடிவில் வெளிவந்திருக்கும் இந்நூலினை வெளியிடுவதில் கடினமான முயற்சிகளை மேற்கொண்ட அனைத்து உறவுகளுக்கும் கனத்த நன்றிகளையும் வாழ்த்துக்களையும் சமர்ப்பிக்கின்றேன்.

நுன்றியுடன்

முருகேசு முத்தையா

செயற்குழ உறுப்பினர்

துறையூர் அரிகர புத்திர ஐயனார் ஆலயம்



**வாழ்த்துச் செய்தி**

துறையூர் கிராமத்தின் முன்திய கட்டமைப்புக்கள் தொடர்பான தகவல்கள் அடங்கிய ‘‘துறையூர் பதிவுகள்’’ எனும் ஆவணம் வெளியிடப்படுவதையடுத்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

துறையூர் சமூக முன்னேற்ற செயற்பாடுகளில் சிறிதளவேனும் அக்கறையுடையவர் என்ற வகையில் இந்நூலினை வெளிக்கொண்டுவருவதில் பெருமுயற்சி மேற்கொண்ட அனைத்து உள்ளங்களையும் மனதார பாராட்ட வாய்ப்புக்கிடைத்தமையிட்டு மகிழ்ச்சியடைவதுடன், அவர்களது பெருமுயற்சி சமூக பயன்பாடுள்ளதாக அமைய எனது மேலான வாழ்த்துக்களை தெரிவிப்பதில் பெருமடைகின்றேன்.

நன்றியுடன்

ஆறுமுகம் கனகசபை

உப தலைவர்- துறையூர் கிராம அபிவிருத்திச் சங்கம்

தலைவர் துறையூர் கடற்றொழிலாளர் கூட்டுறவுச் சங்கம்



வாழ்த்தி மகிழ்கின்றேன்

நமது சமூகத்தில் நமக்கு முந்திய சமூக வடிவமைப்பினையும், அதன் வளர்ச்சிப் போக்கினையும் சமகால, மற்றும் எதிர்கால சந்ததியினருக்கு விரிவாக எடுத்துரைக்கின்ற துறையூர் பதிவு என்னும் சமூகம் சார்ந்த ஆவணத்தினை எமது புலம்பெயர் உறவுகளின் அமைப்பான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியம் வெளியிடுவதையிட்டு மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.

ஏதோ ஒரு வழியில் துறையூர் சமூக வளர்ச்சி நடவடிக்கைகளோடும் , சமூக நலன்சார்ந்த பொது அமைப்புக்களோடும் தொடர்புபட்டவன் என்ற வகையில் குறித்த துறையூர் பதிவு என்னும் நூல் வெளியிடப்படுவதை பெரு மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றேன் இப்பெரு முயற்சியில் முன்னின்று அருமபாடுபட்ட தம்பி துறையூர் காசி அவர்களுக்கும், அவருடன் இணைந்து பணியாற்றிய அனைத்து உறவுகளுக்கும் மகிழ்ச்சி கலந்த நன்றியினையும் வாழ்த்துக்களையும் தெரிவிப்பதோடு இம்முயற்சியானது பெரு வெற்றி பெற எல்லாம் வல்ல துறையூர் அரிகரபுத்திர ஐயனார் பெருந்துணை புரிவாராக

தோன்றின் புகழுடன் தோன்றுக அஃது இலார்
தோன்றலின் தோன்றாமை நன்று
நன்றியுடன

சின்னதம்பி பாலச்சந்திரன
தலைவர்
துறையூர் அரிகர புத்திர ஐயனார் ஆலயம
வேலணை தெற்கு- துறையூர.



***வாழ்த்துச் செய்தி***

*துறையூர் கிராமத்தின் முந்திய காலத்திய சமூக நிகழ்வுகள் மற்றும் சமூகத்தினை வளப்படுத்துவதில் பங்காற்றிய முன்னோடிகள் அவர்களது அர்ப்பணிப்புக்கள் தொடர்பான சங்கதிகளை உள்ளடக்கி வெளிவருகின்ற துறையூர் பதிவு என்னும் நூலுக்கு வாழ்த்துச் செய்தி எழுதுவதற்கு வாய்ப்பு கிடைத்தமையிட்டு பெருமகிழ்ச்சி அடைகின்றேன். சமகால மற்றும் எதிர்கால சந்ததியினருக்கு பெரிதும் பயன்படக்கூடிய வகையில் நூலில் பல விடயங்கள் உள்ளடக்கப்பட்டிருக்கின்றன. குறிப்பாக துறையூரின் விளையாட்டுத்துறையின் தோற்றம் பற்றியும் அத்துறையானது எத்தகைய கரடு முரடான பாதைகளை தாண்டி வளர்ந்தது, இந்த துறையின் வளர்ச்சியோடு சம்பந்தப்பட்ட முன்னோடிகளது சமூக அக்கறையின் விஸ்த்தீரணம் போன்ற வியக்கத்தக்க விடயங்கள் விரிவாக பதிவு செய்யப்பட்டிருபக்கின்றது அத்தோடு சமகாலத்தில் துறையூர் விளையாட்டுத்துறையில் தம்மை அர்ப்பணித்துக்கொண்டிருக்கின்ற முன்னோடிகளும் வீரர்களும் விளையாட்டு ம்றும் ஏனைய சமூக அபிவிருத்தி தொடர்பில் தமது முன்னெடுப்புகக்களை விசாலமாக்க இந்நூல் ஏதுவாக அமைந்திருக்கின்றது.*

*அளப்பரிய சமூகப்பயன்பாடுமிக்க துறையூர் பதிவு என்னும் நூலை வெளிக்கொண்டுவந்த புலம்பெயர்ந்து வாழ் எமது துறையூர் உறவுகளுக்கும், குறித்த ஆவணத்தினை உருவமைப்பதில் தமது கடினமான உழைப்பினை நல்கிய முன்னோடிகளுக்கும் எனது நன்றியினையும் மகிழ்ச்சி கலந்த வாழ்த்துக்களையும் சமர்ப்பிக்கின்றேன்*

*நன்றியுடன்*

*மு.சிவனேசன்*

*தலைவர்*

*துறையூர் ஐயனார் விளையாட்டுக்கழகம்*



**<u>வாழ்த்துரை</u>**

புலம் பெயர்ந்து வாழ் நமது உறவுகளை உள்ளடக்கிய இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தினால் வெளியிடப்படுகின்ற துறையூர் பதிவு என்னும் வரலாற்றுக் ஆவணம் எமது துறையூர் கிராமத்தின் முந்திய சமூக நிகழ்வுப் போக்கினை- அதன் ஒருமைப்பாட்டினை, கல்வி, கலை ,கலாச்சார துறைகளின் வளர்ச்சிப் போக்கினை சமகால மற்றும் எதிர்கால சந்ததியினருக்கு மிகவும் தெளிவாக எடுத்துக் கூறுகின்ற உன்னத படைப்பாக காணப்படுகின்றது. வரலாற்று சான்றாக இருக்கக்கூடிய இந்நூலை வடிவமைத்து வெளியிட்டதில் அண்ணன் காசி அவர்களுக்கும் அவருடன் துணைநின்று பங்களிப்பு செய்த அனைத்து சமூக

அக்கறையாளர்களுக்கும் நன்றிகளையும் வாழ்த்துக்களையும் இச்செய்தி வழியாக பதிவு செய்வதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

நான் சிறியவனாக இருந்தாலும் இந்நூல் ஆசிரியருடனும் அவர் தலைமையிலான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தினுடனும் இணைந்து துறையூர் கிராம அபிவிருத்திப் பணிகளில் பணியாற்றியவன் என்ற வகையில் துறையூர் சமூகத்தின் உயர்வில் அக்கறை காட்டிவரும் அண்ணன் காசி அவர்களை நன்கு அறிவேன், அந்த வகையில் இது பொன்ற பதிவுகளை தொடர்ந்து வெளிக்கொண்டுவரவேண்டுமென்ற விண்ணபத்தினை முன் வைப்பதுடன் ,அவரது அனைத்து முயற்சிகளுக்கும் ஐயப்பனனின் அருள் துணைநிற்க பிராரத்திப்பதுடன் , மேன்மையான குறிக்கோளுடன் ஆக்கப்பட்டிருக்கும் துறையூர் பதிவு என்ற நூலுக்கு எனது நல் வாழ்த்துக்களை பதிவு செய்கின்றேன்

நன்றியுடன்

பாலச்சந்திரன் கோபிநாத்(இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தின முன்னாள் துறையூர் இணைப்பாளர்)

சமுக்தி வங்கி அலுவலர்

வேலணை



**ஐயனார் சனசமூக நிலையத் தலைவரின் வாழ்த்துச் செய்தி**

எமது கிராமத்தின் ஆரம்ப கால சமூக கட்டமைப்புக்கள் தொடரபான தகவல்களைத் தாங்கிய பொக்கிஷமாக வெளிவரும் துறையூர் பதிவுகள் என்னும் ஆவணம் வெளியிடப்படுவதையிட்டு மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்

மேலும்குறித்த சமூகத்தின் முன்னேற்ற செயற்பாடுகளில் சிறிதளவேனும் பங்கெடுத்துக் கொண்டிருப்பவன் என்ற வகையில் எமது சமூகத்தின் மீது கொண்ட அக்கறையாலும் எமது சமூகத்தின் முந்திய வரலாறு சமகால, மற்றும் எதிர்கால சந்ததியினருக்கு தெரிந்திருக்க வேண்டும் என்ற உந்துதலால் எவ்வளவோ சிரமங்களுக்கு மத்தியில் இவ் ஆவணத்தை வெளிக் கொண்டு வர வேண்டும் என்ற முனைப்புடன் செயல்பட்ட அனைத்து உள்ளங்களையும் மனதார பாராட்டுகின்றேன். அத்துடன் இவ் ஆவணம் துறையுர் கிராமத்தில் உள்ளவர்கள் மட்டுமல்லாது

வெளி இடங்களில் வதியக்கூடிய எமது உறவுகள் அனைவரது கரங்களிலும் தவழ வேண்டும் என்ற எனது பேரவாவினை வெளிப்படுத்துவதுடன், இவ் ஆவணத்தை வெளிக் கொண்டு வருவதற்கு அயராது உழைத்த அனைவருக்கும் நன்றிகளையும் பாராட்டுதல்களையும் தெரிவித்து இப்பெரு முயற்சி வெற்றி பெற எனது மேலான வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கின்றேன்.

நன்றி

க. கமலதாஸ்

தலைவர் துறையூர் ஐயனார் சனசமூக நிலையம்

21.09.2014

தோன்றின் புகழுடன் தோன்றுக அஃது இலார்

தோன்றலின் தோன்றாமை நன்று

**நுழை வாயில் வாழ்த்துக்கள்**

வணக்கம் பல கூறி வாழ்த்தி வணங்கி வரவேற்கின்றோம் .வண்ண மலரொன்று தொடுத்து,வண்ணத் தமிழில் வடிவமைத்து, துறையூர் பதிவு என்னும் நூலை வழங்குவதில் மனமகிழ்வு கொள்கின்றோம் .தாய்த் தமிழ் வளர்க.

துறையூர் மக்களின் வரலாற்றுப் பதிவென்னும் நூலானது ,நீங்காத நினைவுகளாக மனதை விட்டு அகலாத,மறைந்த முன்னோர்களின் சமூகம் சார்ந்த செயற்பாடுகள் மற்றும் அவர்கள்பற்றிய தகவல்கள் ஆகியவற்றை திரட்டி ஆய்வு செய்ததன் மூலமாக நீண்ட நெடிய காலமாக மறைந்து கிடந்த சங்கதிகள்பலவற்றை ஆவணப்படுதியிருக்கின்துஆழ்ந்து எமது முன்னோர்கள் கிராமத்திற்கும்,மக்களுக்கும்,ஆலயத்திற்கும் முன்னின்று உழைத்த மதிப்பிற்குரிய பெரியோர்களின் சாதனைகளை,தெரிந்த வரை ,பட்டியலிட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றது.

கூடி வாழ்ந்து ,கூட்டுறவாகி,குதூகலமாய் வாழ்ந்த அவர்கள் ஆலய வழிபாட்டு முறைகளை கைக்கொண்டு ஒழுக்க நெறியோடு,ஆன்மீகத்திலும் அன்பு கொண்டு,அனைவரையும் நேசித்து ,ஆனந்தமாய் வாழ்ந்த காலம் அது.அவர்கள் மூலமாய்,கற்றுக்கொள்ளக் கூடிய பாடத்தில் ,நல்லிணக்கம்,இன மத பேதங்களை மறப்பது,ஒற்றுமையின் சிகரமாய் வாழ்வதே சுகமான சுமையாகும் .

இதை அறிந்துகொள்ளும் விதத்தில் புலத்தில் வாழ்கின்ற கல்விமான்களும் ,கவிஞர்களும் ,கலை இலக்கியவாதிகளும்,துறையூர் பட்டதாரிகளும் ,எழுத்தாளர்களும் ,கண்டறிந்தவர்கள் ,கேட்டறிந்தவர்கள் ஒவ்வொருவரும் தங்களின் அனுபவங்களை பகிர்ந்து பல ஆக்கங்களை பதிவேட்டில் இணைத்து வருங்காலத் தலைமுறைக்கு எடுத்துக் காட்டும் முகமாக ,துறையூரின் வரலாற்றுப் பதிவை யாவரும் பயன்பெறும் வகையில் உருவாக்கப்பட்டிருக்கின்றது. இந்த நூலுக்கு,கல்விமான்களும்,கவிஞர்களினதும் அன்பும் அனுசரணையும் ,வாசகர்களின் வாழ்த்துரைகளும் ,வரவேற்பும் ,பொது மக்களின் நல்லாசியும் நன்றாக அமைந்திருப்பது இந்த நூலுக்கு பெரும் சிறப்பாகும் .

இநநூலில் பலதரப்பட்ட ஆக்கங்கள் இணைக்கப்பட்டுள்ளன , பல ஆக்கபூர்வமான ,ஆரோக்கியமான கருத்துக்களும் சங்கதிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன .மக்கள் மனதில் இருக்கின்ற ஐயப்பாடுகளை நீக்கி சமுதாயத்தின் ஐக்கியத்தை கட்டி எழுப்பவும் ,சமுதாய அபிவிருத்தியும்,கல்வி வளமும்,கலை வளமும்,தொழிலாளர் நலம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட , ஐக்கியத்தைக் கட்டி எழுப்ப ஆவல் கொண்டுள்ள உறவுகளின் உணர்வுகளும் , இன்னும் பல உயர்வான நோக்கங்களை வெளிப்படுதுகின்ற அம்சங்கள் நிறைந்த இந்த நூல் ஒரு பொக்கிஷம் ஆகும்.

சிறு வட்டத்திற்குள் வாழ்ந்த நாங்கள் ,வெளி வட்டத்திற்குள் வந்ததும்,அறிவியலை அறிந்ததன் காரணம் துறையூர் பழைய வரலாற்றுப் பதிவை புரட்டிப் பார்க்க வைத்தது. பிரான்சு நகரத்தில் வாழ்கின்ற கவிஞர் துறையூர் காசி அவர்கள்,இந்த ஆக்கத்தை உருவாக்க அரும்பாடு பட்டார்.எம்முடன் தொடர்பை ஏற்படுத்தி,ஆலோசனை வழங்குமாறு பணித்திருந்தார்.இந்தப் பதிவுக்கு பல ஆக்கங்களை அனுப்பியவர்களுடன் கலந்து ஆலோசித்து இந்த நூலைத் தொகுத்து புத்தக வடிவில் அமைக்க அயராது உழைத்தவர். ஆகவே துறையூர் மக்களின் சார்பாக ,நன்றியை ,திரு காசிலிங்கம் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்

இப்படிக்கு நெதர்லாந்தில் வாழும்

முத்தமிழ் மன்றத் தலைவர்

திரு தணிகாசலம்



# முன்னுரை

எம்மினிய துறையூர் வாழ் பெருமக்களே! சகோதர, சகோதரிகளே! இன்று உங்கள் கரங்களிலே தரப்பட்டிருக்கும் இந்த வரலாற்று நூலானது நாம் வாழும் இந்த அழகான நிலமான வேலணைப் பிரதேசத்தின் பகுதிக்கிராமமான துறையூர் என்ற சிற்றூர் தொடர்பில் நீங்கள் இதற்கு முன்னெப்பொழுதும் படித்திராத அறிந்திராத சங்கதிகளை சம்பவங்களை தன்னகத்தே பதிவாக்கி உங்கள் அறிதலுக்காக கொண்டுவரப்பட்டிருக்கும் ஓர் உன்னதமான ஆவணமாகும்..

எமக்கு முன்னதாக இந்த நிலத்தில் நம முன்னோர் வாழ்ந்து களித்து சென்றிருக்கின்றார்கள் என்பதும், அவர்கள் சந்ததி வழி வந்தவர்களே நாம் என்பதும், அவர்கள் வாழ்ந்த சமுக அமைப்புகளும் அவர்களது வாழ்வியல் முறைகளும் வரிசையான மாறுதல்களுக்கு உள்ளாகி வந்திருக்கின்றன என்பதும் நிதர்சனமான உண்மைகளாகும்.

நம்முன்னோர்களது சமூகக் கட்டுமானங்களது வடிவங்களையும் அவர்களது வாழ்வியல் தொழில் துறை மற்றும் கல்வி கலைத்துறை, ஆன்மீகத்திலான ஈடுபாடு போன்றவற்றின் அளவுகளையும் தன்மைகளையும் அந்தந்தக்காலத்தில் தோற்றமெடுத்த சமூக நலன் விரும்பிகளையும் அவர்கள் சமூகத்தின் வளர்ச்சியின் பால் அவர்கள் காட்டி வந்த அக்கறை - அதன் பரிமாணங்கள் விளைவுகள் ஆகியன பற்றியும் முன்னோர்கள் மத்தியல் காணப்பட்டு வந்த சமூக ஒருமைப்பாடு, உடைவு, அவற்றிற்கான காரணிகள் போன்ற அனைத்துக் கூறுகளையும் சரிவர அறிந்து கொளவதன் மூலமே நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்ற சமகால சமூகத்தினை ஒரு பெறுமானமுள்ள சமுதாயமாக கட்டியமைக்க முடியும் என்பதுடன் நாளை வரும் நம் சந்ததியினருக்கு ஒரு நல்ல செப்பனிடப்பட்ட செழுமைப்படுத்தப்பட்ட சமூகக் கட்டுமானத்தை விட்டுச்செல்ல முடியும் என்ற நிதர்சனமான கருத்தினை இந்த முன்னுரையின் ஊடாக உங்கள் முன்வைப்பதில் திருப்தியடைகின்றேன்

மேற் சொன்னவாறு நமது முன்னோர்களிடமிருந்து எந்ததகைய வளர்ச்சி நிலையில் இந்த சமூகக் கட்டமைப்பினை பெற்றுக்கொண்டோமோ அந்த நிலையினை விட பல மடங்கு செழிப்பாக்கி திடகாத்திரமிக்க ஒரு ஆரோக்கியமான சமூகமாக இந்த சமூகத்தை வடிவமைத்து நாமும் வாழ்ந்து அனுபவித்து பின் நமக்கு அடுத்து வரும் சந்ததிக்கு பவுத்திரமாக கையளிக்க வேண்டியது நமது தார்மீகக் கடமையாகும்.

வாழ்வியலோடு சங்கமித்திருக்கும் இந்த சமூக மேம்பாட்டு நடவடிக்கையில் சமூகத்திலிருக்க்ககூடிய அனைத்து மக்களும் அறிந்தும் அறியாமலும் பங்காளிகளாகின்றார்கள். அத்தகைய பங்களிப்புக்களை பயன்படுத்தி அந்த மக்கள் சமூகத்தினை வளர்ச்சிப்பாதையினை நோக்கி நகர்த்திச் செல்பவர்கள் தான் அந்த சமூகத்திலேயே இருந்து எழக்கூடிய சமூக நலனில்

அக்கறையுள்ள புத்திஜீவிகள், கல்வி மான்கள், சமூக முன்னோடிகள், சமூக நலன் விரும்பிகள் ஆவர். இத்தகைய சமூக அக்கறையுள்ள இளஞர்களின் தோற்றமும் சமூக வளர்ச்சி தொடர்பில் அவர்களது செயற்பாடுகளும் எவ்வளவுக்கு எவ்வளவு விரிவானதும் விசாலமானதுமான சிந்தனையினூடே வடிவமைக்கப்படுகிறதோ அந்த அளவுக்கு குறித்த சமூகத்தின் முன்னோக்கிய வளர்ச்சியானது சுமுகமாக நிகழ்ந்த வண்ணமிருக்கும்.

சமூக நலப்பணியில் மெய்யான அக்கறையோடு ஈடுபடக்கூடியவர்களான சமகால சந்ததியினருக்கு முன்னோர்களது சமூக வடிவமைப்பு எப்படியானது, அவர்கள் தங்களை வளர்த்துக்கொள்ள விரிவாக்கிக் கொள்ள எடுத்துக் கொண்ட முயற்சிகள் எப்படிப்பட்டதாகவிருந்தன, கையாண்ட வழி முறைகள், மேற்கொண்ட தொழிற் துறைகள், கலை கல்வி விளையாட்டு துறைகளில் அவர்களது ஈடுபாடு, அவற்றின்மீதான ஆர்வம், சந்தித்த வெற்றிகள் தோல்விகள் சாதனைகள் மற்றும் சமூகத்தின் உள்ளார்ந்த ஒருமைப்பாடு உடைவு அதற்கான காரணிகள், அயல்வாழ் சமூகங்களோடு இருந்திருக்கக்கூடிய பரஸ்பர உறவின் தன்மை போன்ற இன்னோரன்ன தரவுகளையும், தகவல்களையும் முடிந்த வரை திரட்டி பதிவு செய்து சமகால மற்றும் எதிர்கால சந்ததியினரின் அறிதலுக்காக பார்வைக்கு வைப்பதே இந்த நூல் வெளியீட்டின் அடிப்படையான நோக்கமாகும் என்பதை இங்கே பிரகடனம் செய்கின்றோம்

இந்த நூலை வெளிக்கொண்டு வந்ததன்மூலமாக குறிப்பிட்ட கால கட்டங்களில் சமூக மேம்பாட்டில் அக்கறை கொண்டிருந்த சமூக முன்னோடிகள் நினைவு கூர்ந்து கௌரவிக்கப்பட்டிருக்கின்றார்கள். அந்த நல்ல உள்ளங்கள் புதிய தலைமுறைக்கு அடையாளம் காட்டப்பட்டிருக்கின்றார்கள். அவர்களது கடினமான உழைப்பு காட்சியப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒட்டு மொத்தமாக நமக்கு முந்திய சமூகக் கட்டமைப்பின் வடிவத்தையும், அதில் சமூக முன்னோடிகளது உழைப்பும் அதன் பலாபலன்களும் முடிந்தவரை விரிவாக சொல்லப்பட்டிருக்கின்றது .

ஓவ்வொரு தலைமுறையைச் சேர்ந்தவர்களும் தங்களுக்கு முன்னிருந்த தலை முறையினர் சாதித்தவை யெல்லாவற்றையும் நிராகரித்து மூடி மறைத்து வருவார்களாயின் மனித வர்க்கமே முன்னேற்றமின்றி ஸ்த்தம்பித்துவிடும், இந்த பொருள் நிறைந்த வாக்கியமானது இந்த நூலின் அவசியத்தினையும் அதறகான எமது பெரு முயற்சியினையும் முளுமையான ஒப்புதலுடன் வரவேற்கின்றது.

அந்தவகையில் சமகால சந்ததியினருக்கும் இனி வரும் தலைமுறையினருக்கும் தமக்கு பிந்திய சமூக வடிவமைப்பு பற்றிய ஒரு விரிவான பெறுமானமுள்ள புரிதலை தன்னகத்தே உள்ளடக்கிய இந்நூலை உங்கள் முன் சமர்ப்பிப்பதையிட்டு நிறைவான மகிழ்ச்சியடைகின்றோம்

நன்றியுடன்

நூல் வெளியீட்டுக்குழு சார்பாக

துறையூர் காசி

**<u>கடல் பாண்டியர்</u>**

துறையூர் காசி

புயலோடும் மழையோடும்

பனியோடும் குளிரோடும்

பகலோடும் இரவோடும்

கடலோடு போராடும்

கடல் பாண்டியர் படை எங்கள் மீனவர்கள்

மலையொத்த அலை வாழும்

சமுத்திரத்தை ஆளுகின்றார்

இரும்பொத்த நெஞ்சுடையார் எங்கள் தோழர்

கரும்பொத்த மொழி பேசும்

கன்னியரைக் காதலித்து

விருப்புடனே அணைத்திடுவார் எங்கள் தோழர்

காடழைக்கும் வரையினிலும் அவளை

கண்ணிமைபோல் வைத்திருப்பார் எங்கள் தோழர்

உழைத்துயர்ந்த தொழிலாளர் கூட்டமிது

சொந்த நாட்டுக்கும் செலவாணி சேரச் செய்து

நாடுயர பங்காளியானவர்கள்

எங்கிருந்தோ வந்த விதி ஒன்றதனால்

சிதையுண்டு சிதறுண்ட நாளதனில்

நிலம் மறந்து ஓடிவிட்ட சிலர் போல

மன வலுவிழந்து போகாமல்

மீண்டெழுந்து நிற்கும் படை எங்கள் படை

வரமபற்ற கடல் வழங்கும் கொடையெல்லாம்

தமக்கென்றே வரம் பெற்றார் அவர் தாழ்வடையார்

நெஞ்சுரம்பெற்ற தொழிலாளர் படையிதனை

உவப்புடனே வாழ்த்துகின்றேன் உயர்கவென்று



## துறையூர் திரும்பிப் பார்க்கின்றோம

நமது சிற்றூரான துறையூர் பகுதிக் கிராமத்தின் முந்திய வரலாறுகளை இன்றைக்கு இருக்ககூடிய மற்றும் நாளைக்கு வரக்கூடிய சமுதாயத்துக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமும் தேவையும் எம்மால் உணரப்பட்டது அத்தகைய புரிதலின் அடிப்படையில் நமது கிராமத்தினை மெருகூட்டி பக்குபவப்படுத்திய பெருமக்கள் முன்னனணி தலைவர்கள் புத்திஜீவிகள் கல்விமான்கள் இவர்கள் சமூகத்தில் ஆற்றிய பங்களிப்புக்கள் அவற்றின் பெறுமானங்கள் மற்றும் கடந்து போயவிட்ட காலங்களில் நமது சமூகத்தில் நடந்தேறிய முக்கியமான நிகழ்வுகள், அவற்றில் இருந்து கிடைக்கப்பபெற்ற சாதக பாதகமான விளைவுகள், என்பன தொடர்பான தகவல்கனை ஓரளவுக்கு விரிவான எனது அறிதலுக்கு எட்டிய காலப்பகுதிகளில் தேடித்திரட்டப்பட்ட, அறியப்பட்ட தகவல்களை யெல்லாம் ஒழுங்கமைத்து ஆவணப்படுத்தியுள்ளேன்.

புதியவை எனறு சொல்லப்படுபவன யாவும் பழையனவற்றின் அடிப்படையில் எழுந்தவையே. நாம் வாழும் இந்த உலகத்தில் இடைவிடாமல் மாற்றங்கள் நிகழ்ந்த வண்ணமேயிருக்கின்றன, பழையனவற்றின் இடத்தில் புதியன வந்தமர்கின்ற நிகழ்வுகள் தவிர்க்கமுடியாதவாறு நிகழ்ந்தவண்ணமிருக்கின்றன இதனடிபபடையில் அவ்விதம் மாற்றமடையும் ஒவ்வொரு பொருளும் அதன் தாயப் பொருளின் சாயலை ஓரளவு கொண்டிருப்பதை நம்மால் அவதானிக்க முடிகிறது. ஆயினும் மாற்றங்களின் தொடர் நிகழ்வுகள் நீண்ட இடைவெளிக்குப்பின் தாயப் பொருளின் தன்மையினை முற்றாக இழந்து விடுவதையும் நாம் அவதானிக்கலாம். இந்த விதி மனித சமுதாயத்துக்கும் முழுமையாகப் பொருந்தும். அந்த வகையில் நமது கிராமத்தில் வாழுகின்ற ஒட்டு மொத்த மக்களையும் ஒரு சமூகம் என்ற சொற்பதத்துக்குள் அடக்கி அந்த சமூகத்தைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களை உங்களோடு பகிர்ந்து கொள்ள முற்படுகின்றேன்.

சமூகத்தின் படிப்படியான மாற்றங்களையும் அந்த மாற்றங்களை பெறுமானமுள்ளதாக்குவதில் பங்களிப்பு செய்த சமூக நலன் விரும்பிகளையும் பற்றிய விவரணமாகவே இந்த கட்டுரை அமையப் போகின்றது.

இக் கட்டுரையினை எழுதிக் கொண்டிருக்கும்போது வாழ்ந்து கொண்டிருக்க்கூடிய மூத்தவர்களிடமிருந்து அறியப்பட்ட வாய் மூல தகவல்களின்படி துறையூர் வாழ் சமூகத்தின் மீது பிரபுத்துவ சமுதாயத்தின் எச்ச சொச்சங்களின் பாதிப்புக்கள் 1940ம் ஆண்டுவரை வரை இருந்து வந்ததாக அறியப்படுகிறது. நாளாந்தம் துறையூர் தொழிலாளர் பிடித்து வரும் கடல் உற்பத்தியில் வேலணைக்கிராமத்தின் மேல் தட்டினருக்கு கப்பமாக ஒரு பகுதியை (கட்டைக்கு மீன் போடுதல்) வழங்க வேண்டிய நிலைமைகள் இருந்து வந்தன என்றும் காலப் போக்கில் துணிச்சல் மிக்க தொழிலாளர்களின் தோற்றம், பிரபுத்துவ மேலாண்மைகள் மீதான தொடர்ச்சியான எதிர்ப்பெழுச்சி போன்றவற்றின் விளைவாகவ குறித்த கப்பம் வழங்கும் முறை இல்லாதொழிக்கப்பட்டது. துறையூர் சமூகம் தனது முன் நகர்வை நோக்கிய முதல் பாய்ச்சலாக இந்த வரலாற்று நிகழ்வை இங்கு பதிவு செய்கின்றேன்.

1953 காலப் பகுதியில் ஐயனார் சன சமூக நிலையம் தோற்றுவிக்கப்பட்டது என்று அறிகின்றேன். ஓலைக்கொட்டில வடிவில் ஆரம்பிகப்பட்டு பின்னர் கட்டிட வடிவம் பெற்றது. அமரர் திரு வயிரவன் இராமலிங்கம் திரு சி.கார்த்திகேசு, அமரர் திரு மு.வினாசித்தம்பி, அமரர் திரு வயிரவி காங்கேசு, திரு செ.பழனி, திரு மா.மாரரிமுத்து, திரு சி.நல்லதம்பி, திரு கணபதி சின்னராசா, அமரர் திரு செல்லர் முருகேசு திரு நா.ஐயம்பிள்ளை, அமரர் திரு ஐ. கந்தையா, அமரர் திரு ஆ.சண்முகம் அமரர் திரு இ. வேலாயுதபிள்ளை ஆகியோர் முதலாவது வாசிகசாலையின் தோற்றத்துக்கான காரணகர்தாக்களாக இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. இவர்களது சமூக அக்கறையுடன் கூடிய கடினமான இந்த முயற்சியால் துறையூர் கிராம மக்ககளது வாசிப்பு பழக்கத்திற்கான முதல் அத்தியாயம் திறக்கப்பட்டது. இவர்களோடு பணியாற்றிய திரு சி.நல்லதம்பி, திரு சி.கார்த்திகேசு, திரு நா.ஐயம்பிள்ளை ஆகியோர் சமூக முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்ட இளைஞர்களாக காணப்பட்டார்கள். தமிழகத்தின் தலை சிறந்த எழுத்தாளர்களின் புகழ் பெற்ற புத்தகங்களை ஏராளமாக துறையூர் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தியதில் இவர்களது பங்கு முதன்மையானதாக இருந்தது. அறிவுக்கு நல்ல விருந்தளிக்க வல்லதான அந்த நூல்களை அவர்கள் நீண்ட காலமாக பாதுகாத்து தமது பிந்திய தலைமுறையினரும் வாசிக்க வகை செய்தனர். இதில் பல நூல்களை நான் படித்த நினைவுகள் என்னுள் இனனும் வாழ்ந்து கொண்டு அவர்களது சமூக அக்கறையினை நினைவு படுத்திய வண்ணமிருக்கின்றன. அந்தப் பெருமக்களின் சமூக அக்கறையும் தியாக உணர்வும் பொது நோக்கத்துடனான உழைப்பும் என்றென்றும் மறக்கப்பட முடியாதவை அந்தப் பெருந்தகைகளை நமது சமூகத்தின் முதன்மை புத்தி ஜீவிகளாக இங்கு நினைவு கூருகின்றேன் .

இவர்களைத் தொடர்ந்து 1963ம் ஆண்டு காலப்பகுதியில பொது நலப்பணி என்ற அந்த கட்டமைப்பு அமரர் செல்லத்துரை சாந்தலிங்கம் தலைமையில் அமரர் செல்லையா சண்முகவடிவேல், ஐயம்பிள்ளை பாலசுப்பிரமணியம், சின்னத்தம்பி தணிகாசலம் ஆகியோர் தமது தோள்களில் தாங்கிக் கொண்டனர். குறித்த இரண்டு அணியினரின் காலத்தில் அவர்களது நடவடிக்கைகள் பத்திரிகை வாசனைப் பழக்கத்ததை மேம்படுத்தும் பணிகளோடு மட்டுப்படுத்தப்பட்டிருந்தன ஆயினும் உதைப்பந்தாட்டம், கரப்பந்தாட்டம், வட்டக்கோடு, தாட்சி போன்ற விளையாட்டுக்கள் தினசரி மாலை நேர விளையாட்டுகளாக தொடக்கிவைத்தனர். இந்த தொடர் வரலாற்றின் பக்கங்கள் புரட்டப்பட்டன மேற் குறித்த பத்திரிகை வாசிப்பு பழக்கத்தினை மேலும் மேலும் மேம்படுத்தியதுடன் தரமான கதை மற்றும் தொடர் கதைப் புத்தகங்களை சேகரித்தும் விலைக்கு வாங்கியும் சமூகத்தில் இருந்திருக்க்ககூடிய இளைஞர்கள் அவற்றை வாசித்து அறிவினைப் பெறும் வகையில் ஏற்பாடுகளை செய்திருந்தனர். 1964 காலப்பகுதியில் குறித்த தலைமையின் அணியின் அடிமட்ட உறுப்பினர்களாக இருந்து சனசமூக நிலையத்தின் நிர்வாக முறைகள் பயிற்றுவிக்கப்பட்டவர்களாகவும் பொது நலப்பணியில் ஆர்வமுள்ளவர்களாகவும் காணப்பட்ட செல்லத்ததுரை காசிலிங்கம் ஆகிய நான் மற்றும் சின்னத்தம்பி தணிகாசலம், சின்னத்தம்பி பாலச்சந்திரன், அமரர் காரத்திகேசு இராசரெத்தினம்(கலையன்பன்), இளையதம்பி தியாகராசா, தம்பிப்பிள்ளை இராசரெத்தினம் ஆகியோர் மேற் குறித்த சண்முக வடிவேல் அவர்கள் தலைமையிலான நிர்வாகத்துடன் இணைந்து செயல்பட ஆரம்பித்தோம். அந்த காலப்பகுதியிலேயே துறையூர் கிராமத்தில் சிறுவர் பாடசாலை தொடங்கப்பட்டு இயக்கப்பட்டது ஓரிரு வருடங்களில் சண்முகவடிவேல் உயர்கல்வி காரணமாக அப்போதைய இளையவராகிய எம்மிடம் முழுப்பொறுப்பினையும் விட்டுவிட்டிருந்தார். இந்த காலப்பகுதியில் கரப்பந்தாட்டத்துடன் உதைப்பந்தாட்டம், தாட்சி விளையாட்டு போன்ற விளையாட்டுககள் நாளந்த விளையாட்டுகளாக

நடந்தேறத் தொடங்கியது. வருடாந்த இல்ல விளையாட்டுப் போட்டிகள் நடைபெறத் தொடங்கியது. தீவகத்தில் நடைபெற்ற தாட்சி(கிளித்தட்டு), கரப்பந்தாட்ம், உதைபந்தாட்டம் ஆகிய சகல சுற்றுப் போட்டிகளிலும் பங்குபற்றி நம்மூர் இளைஞர்களது வினைத்திறன்களை தீவகம் முழுவதும் பிரகாசிக்க செய்தோம். அந்த காலப்பகுதி 1970களிலேயே தொடங்கிவிட்டது. துறையூர் இளைஞர்களது வினைத்திறன்கள் வெளியுலகை வியக்க வைத்தன.

1978ம் ஆண்டு காலத்தில் தீவகத்துக்கு அப்பால் சென்று யாழ் நாவாந்துறை சென்ன்ற் அன்ரனிஸ் விளையாட்டுக் கழகத்துடன் நட்பு ரீதியிலான போட்டியில் விளையாடி 1-0 கோல்களால் வெற்றியீட்டிய வரலாற்று நிகழ்வை இங்கே நினைவு படுத்தி பதிவு செய்வதில் மகிழ்ச்சியடைகின்றேன். துறையூர் விளையாட்டுக் கழகம் இன்று வெற்றி மேல் வெற்றி குவிக்கினற நிலைமைகள் நமக்கெல்லாம் மிக்க மகிழ்ச்சியினை ஏற்படுத்துகின்றது. பல் ஆண்டுகளுக்கு முன் விதைக்கப்பட்ட விதைகள் இன்று விருட்சமாக வளர்ந்து நிற்கின்றது. ஆயினும் நமது துறையூர் விளையாட்டுக் கழகம் தீவகத்துக்கு அப்பபால் சென்று தனது முத்திரைகளை பதிக்கவேண்டும் என்பதே எம் போன்றவர்களது ஆதாங்கமாகும். இந்த கால கட்டததிலேயே கலைத்துறையும் முளைவிடத் தொடங்கியது அது வளர்ந்து விருட்சமாகிய சரித்திரத்தினை தனியான கட்டுரையொன்றில் எழுதியுள்ளேன். இந்தக் காலத்திலேயே துறையூர் ஐயனார் சன சமூக நிலையத்தின் நிர்வாகத்தின் தொடர்ச்சியான இடைவிடாத முயற்சியினால் துறையூர் பகுதிக்கு மின் இணைப்பு விஸ்தரிக்கப்பட்டது. மேலும் மேற்குறித்த நிர்வாகத்துடன் இன்னும் பல இளைஞர் ஆர்வமுடன் இணைந்து கொண்டார்கள் இதில் திரு.செல்லத்ததுரை சுந்தரலிங்கம் திரு கா. இராசரெத்தினம், திரு சின்னையா தவச்சோதி, திரு ச. அருட்சோதி, திரு செ.சிவரெத்தினம், திரு வே. கனகசபாபதி ஆகியோரை குறிப்பிடலாம்.

1977 இக்காலப் பதியில் எனது அயராத முயற்சியினால் சுவீடன் நாட்டினரின் ஒத்தாசையுடன் உருவாக் கப்பட்ட நல்லொழுக்க வாலிப இயக்கம நிறுவப்பட்டது. நல்லொழுக்க வாலிப இயக்கத்தின் ஆரம்ப உறப்பினர்களாக இருந்து பங்களித்தவர்களான செ. காசிலிங்கம், இ.தியாகராசா, சி.பாலச்சந்திரன், த.இராசரெத்தினம், செல்லையா நடேசன், அ.தேவதாசன், திரு ச. செல்வநாயகம் மற்றும் யுவதிகளான துறையூர் மாதர் சங்கத்தை சேர்ந்த் திருமதி எதிர்குலசிங்கம் ராசேஸ்வரி, திருமதி சித்திரவடிவேல் லோகேஸவரி, திருமதி சண்முகவடிவேல் மகேஸ்வரி, கா.மதிவதனா, ஆறுமுகம் சிவமலர், செல்லையா திலகவதி, வைரமுத்து கமலாம்பிகை ஆகியோரையும் பிற்காலத்தில் இதில் இணைந்து கொண்ட க. சந்திரசேகரன், செ .சுந்தரலிங்கம் ஆகியோரை இங்கே பதிவு செய்கின்றேன். மேற் குறித்த அமைப்பின் மூலமாக சுவீடன் நாட்டு நண்பர் ஒருவரிடம் இருந்து பெற்ற நன்கொடையாகப் பெற்ற நிதியின் மூலமே துறையூர் சன சமூக நிலையத்துக்கு முதன் முதலாக மின் இணைப்பு ஏற்படுத்தப்பட்டது. தீவகத்தில் இருந்திருக்கக்கூடிய சனசமூக நிலையங்களில் முதன் முதலாக மின் இணைப்பு பெற்ற சனசமூக நிலையம் துறையூர் சன சமூக நிலையமேயாகும் எனபதை பெருமையுடன் குறிப்பிட விரும்புகின்றேன். துறையூர் மாதர் சங்கம், சர்வோதய அமைப்பின் துறையூர் அங்கத்தவர்கள் மற்றும் நல்லொழுக்க வாலிபர் இயக்கம் போன்ற அமைப்புக்களது இயங்கியலும் அவற்றின் சமூகப்பணிகளும் ஒன்றுடன் ஒன்று மிக நெருங்கிய தொடர்பு கொண்டவையாகவே இருந்து வந்தன. மேற் குறிப்பிட்ட மூன்று அமைப்புக்களின் ஒருமைப்பட்ட முயற்சியின் விளைவாக 1977ம் ஆண்டு அரச சமூக சேவை நிறுவனத்தின் திட்டத்தின் கீழான 6 மாத கால தையல் பயிற்சி திட்டத்தின் கீழ் பெண்களுக்கான தையல் பயிற்சி நிலையம் துறையூரில் ஸ்தாபிக்கப்பட்டது. குறித்த நிலையத்துக்கான இட வசதியினை சின்னத்துரை பராசக்தி குடும்பத்தினர் தமது வதிவிடத்தில்

ஏறபாடு செய்து தந்தார்கள். இந்த பயிற்சி திட்டத்தின் மூலம் ஏராளமான துறையூர் மாதர்கள் தையல் கலையின் நுட்பங்களை கற்றுத் தேற நேர்ந்தது.

.

இந்தக்காலப்பகுதியிலேயே (1978) “கிராமிய அபிவிருத்தியில் இளைஞர்களது பங்கு” தொடரபான விடயத்தையொட்டி இலங்கை மன்றக் கல்லூரியால் அகில இலங்கை மட்டத்தில் நடாத்தப்பட்ட கருத்தரங்குகளில் பங்குபற்றும் வாய்ப்பினை முதல் தடவையாக பெற்றுக் கொண்டோம். சம்பந்தப்பட்ட கருத்தரங்கு தொடரபான நிர்வாகத்துக்கு தொடரச்சியாக அனுப்பப்பட்ட விண்ணப்பங்களின் விளைவாக் இரு உறுப்பினருக்கு முதல் அழைப்பு கிடைக்கப்பட்டது. குறித்த அழைப்பில் நானும்( செ.காசிலிங்கம்) நண்பர் திரு.இளையதம்பி தியாகராசா அவர்களும் இலவச பயணச்சீட்டுடனும் இலவச தங்குமிட வசதியுடனும் கொழும்பு சென்று குறித்த இலங்கை மன்றக் கல்லூரியின் மூன்று நாள் கருத்தரங்கில் கலந்து கொண்டோம். அங்கு நடந்தேறிய விவாதங்களிலும் கருத்தரங்குகளிலும் கலந்து கொண்டோம் இதனைத் தொடர்ந்து மேலும் மேலும் நாம் விண்ணப்பித்ததற்கமைய எமது கிராமத்திலிருந்து பல இளைஞர்களும் யுவதிகளும் குறித்த இலங்கை மன்றக் கல்லூரியினால் பல்வேறு தலைப்புகளில் நடாத்தப்பட்ட கருத்தரங்குகளில் கலந்து கொள்ளும் வாய்ப்புக்களை பெற்று பயனடைந்தனர். தீவுப்பகுதியில் இருந்து முதன் முதலாக எமது கிராமத்து இளைஞர் யுவதிகளே குறித்த கருத்தரங்குகளில் பங்கேற்றிருந்தார்கள் என்பதையும் நமது கிராமத்துப் இளம் பெண்கள் துணிச்சலுடன் யாழ் மாவட்டத்துக்கு வெளியே நடந்த அகில இலங்கை கருத்தரங்கில் கலந்து கொண்ட நிகழ்வை மிகவும் பெருமையுடன் இங்கே நினைவுகூகூர்ந்து பதிவு செய்வதில் பெருமையடைகின்றேன். இந் நிகழ்விற்குப் பின் எமது கிரமத்துக் பெண்களோ ஆண்களோ இது போன்ற அகில இலங்கை மட்டத்திலான கருத்தரங்குகளில் கலந்து கொண்டதான செய்திகள் எதுவும் எனக்கு கிடைக்கவில்லை. குறித்த இந்த காலப் பகுதி சமூக வளர்ச்சிப் போக்கில் பாரிய வீச்சினை சந்தித்த காலப்பகுதியாகும் இந்த எழுச்சியின் விளைவானது எமது துறையூர் மாதர்கள் பலரை பொது நலப்பணிகளில் ஆர்வத்துடன் ஈடுபட வைத்தது அந்த வகையில் அக்காலத்தில் அறிமுகமான பாலர் பாடசாலைகளினை நமது துறையூர் மாதர்கள் முன்னின்று நடாத்த தொடங்கினர் குறித்த பாலர் பாடசாலைகளில் தியாக உள்ளத்துடன் பணியாற்றியவர்களில் செல்வி கந்தையா செட்டிச்சி, திருமதி சண்முகவடிவேல் மகேஸ்வரி, திருமதி எதிர்குலசிங்கம் ராசேஸ்வரி, திருமதி சித்திரவடிவேல் லோகேஸ்வரி ஆகியோரை குறிப்பிட்டு சொல்லமுடியும். சிறுவர் பாடசாலைகள் மேலோங்க இவர்களது சோர்வற்ற சமூக அக்கறையுடன் கூடிய கடினமான உழைப்பு காரணங்களாக அமைந்திருந்தன என்பதை இங்கு அழுத்தி சொல்லவேண்டியவனாகின்றேன்.

அத்துடன் திருமதி சித்திரவடிவேல் லோகேஸ்வரி திருமதி எதிர்குலசிங்கம் இராசேஸ்வரி திருமதி சண்முகவடிவேல் மகேஸ்வரி ஆகியோரின் ஆர்வம் காரணமாக சர்வோதய அமைப்பின் நடவடிக்கைகள் துறையூரில் விஸ்த்தரிக்கப்பட்டது மேற் குறித்த இரண்டு அமைப்புக்களிலும் துறையூர் மாதர்களது ஈடுபாடு ஓங்கியிருந்த காலமது அத்தகைய அமைப்புக்கள் மூலமாக பெண்கள் தம்மை தாமே ஒரு நல்ல சமூகச் சிந்தனையாளர்களாக மாற்றிக் கொண்டதுடன் கிராமத்துக்கு பயன்பாடுள்ள பல வேலைத்திட்டங்களில் தொடர்ச்சியாக வேலை செய்து வந்தனர். அந்த வகையில் கிராமத்துக்கு வெளியே யாழ்நகரில் நடைபெற்ற தையல் வினைத்திறன் கண்காட்சிகளிலும் மாதர்கள் முன்னேற்றம் தொடர்பான கருத்தரங்குகளிலும் கலந்து கொள்ளுகின்ற

வாய்ப்புக்களை பெற்றிருந்தனர் . இவ்விதமாக துறையூர் இளைஞர் -யுவதிகளது சமூக விரிவாக்கத்தை நோக்கிய எழுச்சியின் தோற்றத்தோடு கூடவே விளையாட்டுத்துறை கலைத்துறை மற்றும் இவை சார்ந்த விழிப்புணர்வுகள் முன்னெடுக்கப்பட்டுக் கொணடிருக்கையில் கல்வித்துறையின் வளர்ச்சியும் கூடவே முன்னெடுக்கப்பட வேண்டும் என்ற கருத்தும் ஆர்வமும் நம் சமூகத்தில் முளை விடத் தொடங்கியது.

நமது கிராமத்தில் இருந்து முதன் முதலாக பல்கலைகழகத்துககு பிரவேசித்த சபாபதி நடேசன் என்பவரை இங்கு நினைவு படுத்துவது பொருத்தமாகவிருக்கும்

இவருக்குப்பின் சில காலங்கள் கழித்து இலங்கை பல்கலைக்கழகத்துக்கு பிரவேசித்த திருமதி பழனி சிந்தாமணி அவர்களையும் இங்கு நினைவு கூருவது அவசியமாகும் திருமதி பழனி சிந்தாமணி அவர்கள் பல்கலைக்கழக பட்டம் பெற்று வந்த பின்னர் தான் கற்ற வேலணை மத்திய மகா வித்தியாலயத்திலே ஆசிரியராக கடமையாற்றினார், பின்னர் தான் ஆரம்பக்கல்வி கற்ற துறையூர் ஐயனார் வித்தியாசாலையின் அதிபராக நியமனம் பெற்று பணியாற்றினார் என்பதும் இவரது சமூக அக்கறையின் காரணமாக நாட்டில் நிலவிய அசாதரண சூழ் நிலைகள் குறித்த பாட சாலையினை இயக்குவதில் இருந்துகொண்டிருந்த பல்வேறு தடைகள், இடையூறுகள் அனைத்தும் துணிச்சலுடனும் புத்திசாதூரியத்துடனும் எதிர் கொண்டு துறையூர் ஐயனார் வித்தியாசாலைக்கு புத்துயிர் ஊட்டி புதுவடிவம் கொடுத்த ஒரு சமூக அக்கறையுள்ள சிறந்த கல்விமானாக விளங்கியவர்- இவரது தாயாரான திருமதி செல்லர் செல்வதி என்பவரும் சிறந்த ஒரு கல்விமானாக விளங்கினார் என்பதும் 1960ம் ஆண்டு காலம் தொட்டு இவரது இல்லத்தில் கணிசமான துறையூர் மாணவர்களுக்கு மாலை நேரக் கல்வியூட்டும் பணியினை மேற்கொண்டு வந்தார் என்பதையும் இவ்வாறாக தாயும் மகளும் நமது சமூகத்தின கல்வி முன்னேற்றம் தொடர்பில் காட்டி வந்த அக்கறையினை ஒருங்கே நினைவு கூர்ந்து இங்கு பதிவு செய்வதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

மேற் குறிப்பிட்டவாறான கல்விமான்களது தோற்றமானது நமது சமூகத்தின் இளையோர் மத்தியில் கல்வியின் பயன்பாடு அதன் அவசியம் பற்றிய புரிதலுக்கான அடிப்படைக் காரணங்களாக அமைந்திருந்தன என்ற மெய்யான வரலாற்றுப்பதிவுகள் மறக்கப்பட முடியாதவை. இத்தகைய முன்மாதிரிகளை அடியொற்றி கணிசமான எண்ணிக்கையுள்ளவர்கள் உயர் கல்வி கற்றுத் தேறி அரச மற்றும் தனியார் நிறுவனங்களிலும் பணிபுரியும் வாய்ப்பபுக்களை பெற்றார்கள் இன்னும் சிலர் பல்கலைக் கழகம் சென்று பட்டம் பெற்று பட்டதாரிகளாக வெளியேறினார்கள் மேற்குறித்தபடி திரு. சபாபதி நடேசன், திருமதி பழனி சிந்தாமணி ஆகியோருக்குப் பின் நீண்ட இடைவெளிக்குப் பின் பல்கலைக்கழகம் சென்று பட்டதாரிகளாக வெளியேறிய எமது கிராமத்தவர் திரு.சண்முகம் அருட்சோதி, திரு செல்லையா சீவரெத்தினம், திரு வேலுப்பிள்ளை கனகசபாபதி ஆகியோராவார். இவர்களது பல்கலைகழக பிரவேசம் எமது துறையூர் மாணவர்கள் மத்தியில் கல்வியின் மீதான கவனிப்பினையும் நாட்டத்தினையும் மேலும் மேலும் அதிகரித்தது இதன் விளைவாக துறையூர் சமூகம் கல்வி மீது நாட்டம் கொண்ட சமூகமாக மாற்றம் அடையத் தொடங்கியது ஆயினும் பொருளாதார வலிமை குறைந்த குடுமபங்களால் தங்கள் குழந்தைகளை ஆரம்ப பள்ளிக்குப் பின்னான அடுத்த கட்டத்துக்கு நகர முடியாமல் கற்றலை இடை நடுவில் கைவிட்ட நிலைமைகளும் தவிர்க்க முடியாதவாறு தொடர்ந்து கொண்டுதானிருந்தது.

இந்த நிலைமைகளில் 1980 களில் நாட்டில் இனங்களுக்கிடையிலான முறுகல் நிலை மேலோங்கத் தொடங்கியது. இக்காரணத்தின் நிமித்தம் தவிர்க்கமுடியாத வகையில் பல துறையூர் இளைஞர்கள் (செ.காசிலிங்கமாகிய நானுட்பட) நாட்டை விட்டு வெளியேறிய நிகழ்வுகள்

இடம்பெறலாயின. இன்னும் பலர் சுய தொழில் மற்றும் பாதுகாப்பின் நிமித்தம் தலை நகரங்களை நோக்கி நகர்ந்நதனர். அதனைத் தொடர்ந்து 1990களில் உருவான போர்ச் சுழல் ஒட்டு மொத்த சமூகத்தினையும் இடம்பெயர்வுக்கு உள்ளாக்கியது போன்ற நிகழ்வுகள் துறையூர் மக்கள் சமூகத்தின் கட்டமைப்பையும் அதன் உள்ளிருந்த கல்வி, கலை, விளையாட்டு மற்றும் தொழில்துறை போன்ற இன்னோரன்ன வளர்ச்சிக் கூறுகள் யாவும் கடுமையாக சிதைக்கப்பட்டிருந்தன. 1990 முதல் 2006 வரை துறையூர் கிராமானது ஒன்று அல்லது இரண்டு குடும்பங்களைத் தவிர மக்களில்லாத கிராமமாகவே வெறிச்சோடிக்கிடந்தது. இந்த இடம்பெயர்வுக்கு உள்ளாக்கிய காலத்தில் மக்கள் பல்வேறு சிரமங்களை எதிர் கொண்டனர். இந்தக் கால கட்டத்தில். துறையூர் கடற்றொழிலாளர் கூட்டுறவுச்சங்கம் 25 .02.1993 ம் திகதியிடப்பட்ட கடிதத்தின் மூலம் கேட்டுக்கொண்டதற்கிணங்க உதவித் தொகையாக ரூபா 50,000 எமது அமைப்பினால் அனுப்பிவைக்கப்பட்டது இந்நிதி தொழிலாளர்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டது.

2006ல் மீள குடியமர்வு ஆரம்பமானது படிப்படியாய் மக்கள் தமது பூர்வீக குடியிருப்பை நோக்கி நகர்ந்தனர் ஏறத்தாழ இடம்பெயர்ந்த துறையூரவர் அனைவரும் மீளக்குடியமர்ந்தனர் இந்தக் குடியமர்வு காலத்தில் பல்வேறு சிரமங்களை எதிர் கொண்டனர். இந்தக் கால கட்டத்தில் மறுபடியும் 2006ம் ஆண்டு கடற்றொழிலாளர் கூட்டுறவுச் சங்கம் எழுதிய கடிதத்துக் கமைய துறையூரவர்களுக்கு அவரவர் குடும்ப நிலைமைகளுக் கேற்ப பகிர்ந்தளிக்கும் படி விசேட நிவாரண நிதியாக ரூபாய் 2,50,000 ஐ பிரான்ஸில் உள்ள துறையூரவர்களது அமைப்பான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியம் அனுப்பி உதவியது. மீளக் குடியமர்வினை தொடர்ந்து துறையூர் கிராமத்தின் கல்வி விளையாட்டுத்துறை மற்றும் ஏனைய சமூக அபிவிருத்தி திட்ங்களுக்கென மேற் குறித்த அமைப்பு கணிசமான பங்களிப்பை வழங்கி வந்தது.( இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தின் துறையூர் கிராம வேலைத்திட்டங்கள் தொடர்பான விபரமான அறிக்கையினை இணைப்பில் காணலாம்). இக்கட்டுரையினை முடிவுக்கு கொண்டு வருவதற்கு முன்னதாக காலம் சென்ற திரு செல்லையா சண்முகவடிவேல் அவர்களது சமூகப்பணி பற்றி சில மேலதிக தகவல்களை பதிவு செய்ய வேண்டியவனாகின்றேன். தனது ஆசிரியர் பயிற்சி கலாசாலை படிப்பை முடித்து ஆசிரியராக பணியாற்றத் தொடங்கிய திரு செ. சண்முக வடிவேல் அவர்கள் துறையூர் கிராமத்து மாணவர்களது கல்வி மேம்பாட்டில் அக்கறை காடட்டத்தொடங்கினார். அதன் வெளிப்பாடாக 1978ல் தனது மைத்துனரின் கடைத் தொதியில் ஒரு பகுதியினை வாடகைக்கு எடுத்து மாலை நேர வகுப்புக்ள் நடாத்தி வந்தார். ஏராளமான சிறுவர்கள் இவரது படிப்பகத்தில் பயின்று பயனடைந்தனர். சுமார் 10 மாதங்கள் வரை நீடித்த இவரது படிப்பகம் நிதி பற்றாக்குறை காரணமாக தொடர்ந்து நடாத்த முடியாமல் கைவிட நேர்ந்தது. 1995ம் ஆண்டு காலப்பகுதியில் பிரன்ஸ் நாட்டில் இயங்கி வரும் துறையூரவரின் ஒன்றியமான "துறையூர் அபிவிருத்தி அமைப்பின் உதவியுடன் சிறுவர் பாடசாலையினை இயக்கி வந்தார். அத்துடன் தெரிவு செய்யப்பட்ட துறையூர் கடற்றொழிலாளர்களுக்கு வலைக்கடன் வழங்கும் திடடத்தினை செயல்படுததும் பொறுப்பாளராக இருந்து வந்தார். துறையூர் இளைஞர்களை கல்வியின் மீது நாட்டமுறச் செய்ததில் இவரது பங்கு கவனிக்கப்படத்தக்கதாக இருந்தது. சமூக அக்கறை கொண்ட கல்விமான் திரு செ. சண்முகவடிவேல் அவர்களை இந்த பதிவின் மூலம் நினைவு கொள்வதில் திருப்தியடைகின்றோம்.

இறுதியாக 1980ம் ஆண்டுக்கு முந்திய காலத்திய சமூக வளரச்சிப் போக்கின் நகர்வுகளை மையப்படுத்திய பதிவுகளே இந்த ஆவணத்தில் பரவலாக பேசப்படுபொருளாய் காணப்படுகின்றன. ஆயினும் குறித்த 1980க்குப் பின்னான காலப்பகுதியில் நிலத்தில் நின்றுகொண்டிருந்த

முன்னோடிகள் இடம்பெயர்வு நிகழும் வரையில் துறையூர் சமூகத்தில் நிகழ்ந்த கலை கல்வி விளையாட்டுத்துறை போன்ற துறைகளின் வளர்ச்சியினை இப்பதிவேட்டில் காணப்படும் ஆக்கங்களில் ஓரளவு பதிசெய்யப்படடிருக்கின்றன. ஆயினும் குறித்த காலப்பகுதியில் நிகழ்ந்திருக்க்ககூடிய சமூக வளர்ச்சிப் போக்கோடு தொடர்புடைய நபர்கள் நிகழ்வுகள் பற்றிய முழுமையான தரவுகள் எமது அறிதலுக்கு எட்டாமலும் அல்லது கவனத்துக்கு கொண்டுவரப்படாமலும் விடுபட்டிருக்க்கூடும் என்ற உண்மையினை ஏற்றுக் கொள்கின்றோம். அவ்விதமாக விடுபட்டுப்போன பதிவுகள் அடுத்த ஆவணத்தில் நிச்சயமாக பதிவாகும் என்பதையும் இங்கு வெளிப்படுத்தி இந்த விவரணக் கட்டுரை முற்றுப்பெறுகிறது.

ஆவணப்படுத்தியவர்

துறையூர் காசி

20.04.2014

.

## எங்கள் துறையூர் அழகைப் பாடினேன்

---செல்வி எதிர்குலசிங்கம் லக்க்ஷீபி

கடலலை மோதும் சிறு கடலொரு பால்
கனமது இல்லா தரை மணல் ஒரு பால்
கவினுறு கல்விக் கூடமொருபால்
கருணைமிகு ஐயனார் ஆலயம் ஒருபால்

அருள் மழை பொழியும் ஆறுமுகனுண்டு
அவருக்கென்றோர் ஆலயம் உண்டு
களிப்புற விளங்கும் கண்ணனும் உண்டு
காவல் தெய்வம் காளியும் உண்டு
திருத்தலம் இரண்டு இவர்க்கென உண்டு
பாலர் கல்விச் சாலை ஒருபால்
கடற்றொழிலாளர் சங்கமொருபால்-துறையூர்
சனசமூக நிலையம் ஒருபால்
கற்றோர் மற்றோர் கவியுளோர் எல்லாம்
கூடி மகிழும் ஆல்நிழல் ஒருபால்
பாரதம் இராமயாண புராணங்களோடு
தேவாரத்துடன் திருப் பாடல்களும்
மழையெனப் பொழியும் புலவர்கள் ஒருபால்
மங்கையர் கூடும் நீர் குழாயடி ஒருபால்

ஆயர் வேவதம் சிறப்புறக் கற்று

துறையூரதற்கு பெரும்புகழ் ஈட்டினார்

மகத்துவம் மிக்க மருத்துவர் ஒருபால்

ஆங்கிலம் தமிழ் மொழி

அறிவினில் உயர்ந்த ஆசான்கள் ஒருபால்

தினம் தினம் காலையில் வெண்புறாக் கூட்டம்போல்

கல்விச்சாலை நாடிச் செல்லும் மாணவர் ஒருபால்

இத்தனை அழகையும் கண்டுளம் நிறைந்து

துறையூர் தாயும் பூரித்து நிற்கிறாள்

**இசைப்புயல் அமைதி கொண்டது**

**இசை மழையின் ஈரம் இன்னும் காயவில்லை**

**அமரர் இசைமேதை திருமதி பராசக்தி சின்னத்துரைக்கு**

**வேலணை-துறையூர் கிராமத்தின் உறவுகளின் சமர்ப்பணம்**

அண்டசராசரங்கள் அனைத்திலும் நீக்கமற நிறைந்து நிற்கிறது இசை ஓரறிவு கொண்ட புல் முதல் ஆறறிவு படைத்த மனிதனையும் தாண்டி அப்பாலும் அனைத்துலும் நிறைந்து புத்துணர்வை, உடல் உள வளர்ச்சியை ஊக்கத்தைக் கொடுப்பது இசை, இசையின் வடிவங்கள் எண்ணிலடங்கா, வரையறையற்றது, இசையின் பிறப்பு இயற்கையோடு இணைந்தது, இறைவனின் படைப்பு இசைக்கு வசமாகாதார் யாருளர்.

இந்த வகையில் வேலணை துறையூர் மண் தந்த பெருமைக்கு உரியவர் இசைமேதை அமரர் திருமதி பராசக்தி சின்னத்துரை. வேலணை துறையூர் மண் புகழ் ஆயுள்வேத வைத்தியர் அமரர் திருமதி சின்னத்தம்பி முருகேசு சின்னாச்சி தம்பதியினரின் புதல்வி இவர். இசையும் ஒரு வகை வைத்தியம் என்பார்கள். இந்த வகையில் இசையும் வைத்தியமும் இந்தக் குடும்பத்தில் இணைந்தது இறைவன் செயல்தான்.

விளையும் பயிரை முளையிலே தெரியும் என்பார்கள். திருமதி பராசக்தி அம்மையார் சிறு வயதிலேயே கல்வி கற்றலில் சிறந்து விளங்கியதுடன் இசையுடன் கூடிய பாடல்களையும் பாடுவதில் ஆர்வமுள்ளவராக விளங்கினார். இவரது திறமை மேலும் வளர்த்துக் கொள்ள விரும்பிய பெற்றோர் அவரை யாழ்ப்பாணம் மருதனாமடம் இராமநாதன் இசைக் கல்லூரியில் சேர்த்து இசை வல்லுனராக மிளிரச் செய்தார்கள்.

வேலணை துறையூர் ஐயனார் கோவில் மகா உற்சவ கால ஒன்பதாம் திருவிழாவில் திருமதி பராசக்தி சின்னத்துரையின் இசைக்கச்சேரி அனைவரது நினைவலைகளிலும் நீங்காது நிறைந்து நிற்கின்றது. திருவாளர்கள் மாதர் செல்லரின் ஆர்மோனிய இசை, சாமி கணபதி சின்னராசாவின் புல்லாங்குழல் இசை, திரு கந்தர் சின்னத்தம்பி, திரு மூலைமுடி ஆறுமுகம் ஆகியோரின் மிருதங்க வாத்திய இசை, திரு சின்னையாவின் சல்லாரி வாத்திய இசையுடன் திருமதி சின்னத்துரை பராசக்தியின் இசைமழை அந்த ஐயனார் சுவாமிக்கு இசை அபிஷேகமாகவே இருக்கும்.

தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பார்கள். அது போல திருமதி பராசக்தியும் தனது இசையறிவு மூலம் பல இசைக்கலைஞர்களை உருவாக்கியதுடன் தனது வாரிசுகளான பிள்ளைகளையும் அக்கலையில் சிறந்து விளங்க வைத்துள்ளார்.

அன்னையின் பணியை தொடர வேண்டும் என்ற ஆர்வத்துடன் பிரான்ஸ் நாட்டின் பாரிஸ் நகரில் இளைய நிலா என்ற இசைக்குழுவை உருவாக்கிய அவரது புத்திரன் திரு. தில்லைசிவம் தனது சகோதரி திருமதி சிறிதரன் கலாவையும் அதில் பாடவைத்து மற்றும் பல கலைஞர்களுடன் இசைக்கலையை வளர்த்து வருகின்றார்.

இவ்வாறான பேரும் புகழுடனும், சீரும் சிறப்புடனும் வாழ்ந்து பரமதிருப்தி கண்ட அந்த அன்னையின் ஆன்மா இறைவன் திருவடி நிழலில் இருந்து பல இசைக்கலைஞர்கள் இந்த உலகில் உருவாகிட ஆசி வழங்கிக் கொண்டே இளைப்பாற வேண்டும் என்று இறைவனை வேண்டுகின்றோம்.

சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

என்றும் உங்கள் இசைக் கலையை மறவா நினைவுடன்,

வேலணை துறையூர் மக்களுடன் இணைந்து,

கவிஞர் சின்னத்தம்பி தணிகாசலம் (மணியம்



**அவன் ஒரு சரித்திரம்.........**

பா. கணேசலிங்கம் (கலாமன்ற உறுப்பினர் )

எம் நாடு பொன் நாடு எழில் நிறைந்த தாய்நாடு
கண்ணோடு நரம்போடு கலந்த திரு நாடு
செந்நெல் விளைந்தோங்கும் மருத நில வளமும்
திரைகடல் வளமோங்கும் நெய்தல் வளமும்
தெங்கு பனை வளமோங்கி வாழுகின்றாள்
வேலணையாள் பேரோங்கி
புகளுண்ட நிலமிதனின் தென்புலத்தில்
கலைமகள் காலடிகள் பதித்த நிலம்
கடல் மணந்து வரும் தென்றல் கவிபாட தூண்டும் அந்த
துறையூரில் கலைச்சூரியனாய் வந்துதித்தான்
கலையன்பன் இராசரெத்தினம் அந்த
காவியத்தின் நாயகனை கவிதையிலே பாட வந்தேன்
ஆழ் மனதில் ஆழப் பதிந்துவிட்ட அழகான ஓவியம் நீ
முத்தான முத்தவனே முளு நிலவே தூயவனே
உன்னோடு நாம் வாழ்ந்த காலமெல்லாம் பொற் காலம்
பொன்னெழுத்தில் பதிவாகும் பொற்கால வரலாறு
புன்னகை பூத்த முகம் புரட்சி தேடும் புதிய சிந்தை
அகமலர்ந்து அன்புகாட்டி முகம் மலர்ந்து உபசரிப்பாய்
முழுமூச்சாய் பாடுபட்டு முன்னெடுத்தாய் கலைப்பணியை
பற்றால் பாசத்தால் எம்மிதயத்துள் நீ நுழைந்தாய்
அன்பு மொழி பேசி அறிவுரைகள் கூறி ஆசானாய் நீயிருந்தாய்
அன்பனானாய் நண்பனானாய் ஆருயிர்த் தோழனானாய்
மாற்றங்கள் வேண்டுமென்றாய் மறுமலர்ச்சி கொண்டு வந்தாய்
புதியன புகுத்தி நாடகக் கலைக்கு புதுவடிவம் நீ கொடுத்தாய்
வீறு கொண்டெழுந்து வேற்றுமைகள் வேரறுத்து
இருள் கிழித்து வழி காட்டும் ஒளியானாய்
சுனாமியாய் சூறாவழியாய் எதிர்வந்த இடரெல்லாம்
உருக்கொத்த உறுதியாலே வென்று நின்றாய்

கனவுகளை நனவாக்க காலத்தை புதிதாக்க
களம் அமைத்த துறையூரின் காசிக்கு
கை கொடுத்தாய் கலாமன்றம் தோற்று வித்தாய்
துறையூர் கலாமன்றம் தோற்றுவித்தாய்
வாத்தியென்று பேரெடுத்தாய் கலை
வளர்ச்சிக்கு வித்திடடாய் - அது வளர
வாழும் வரை போரிட்டாய்
சிந்திக்க வைத்திட்ட சீர்சிருத்த நாடகங்கள்
சென்ற இடமெல்லம் வென்றதே வரலாறு
எட்டாக் கனியெல்லாம் எட்டும் கனியாக்கி
வெற்றிக்கனி பறிக்க வைத்தாய்
வீச்சான உன்னெழுத்தால்
வீறு கொண்டெழுந்திட்ட நாடகங்ஙகள் எத்தனையோ
தமிழ் மணக்கும் உன்பேச்சில் அழகான
நடையிருக்கும் நயமிருக்கும் உன் எழுத்தில்
அதற்கெல்லாம் அரங்கினிலே
உயிர் கொடுப்பார் நடிப்பாலே உன்தோழர்
அந்நாளில் அன்பரசே
பூக்குமடா தாமரைகள் உன் முகத்தில் ஏராளம்
ஏங்குதடா எங்கள் மனம் அந்த முகம் பார்ப்பதற்கு
முத்தான மூத்தவனே முழு நிலவே
ஆழப்பதிந்துவிட்ட அந்த காலத்தின்
காட்சிகளை மனத் திரையிட்டுப்பார்க்கின்றோம்
சாதனைகள் வந்து நின்று சாட்சியங்கள் கூறுதடா
சரித்திரத்தின் நாயகனே நீ
சாகாமல் வாழுகின்ற சங்கதியைச் சொல்லுதடா



**<u>நினைவில் நிற்பவை</u>**

-- திருமதி லோகேஸ்வரி சித்திரவடிவேல்--

யாழ்ப்பாண மாவட்த்தின் தீவகப் பகுதியின் தலை நகரமாக விளங்கும் வேலணைக் கிராமத்தின் கடலோரமாக அமைந்துள்ள சிற்றூரான துறையூர் சமூகத்தின் முந்திய வரலாற்றுப் பதிவுகளை தாங்கி வெளிவரவுள்ள இப்பதிவேட்டில் குறித்த்த துறையூர் தொடர்பிலான எனது பார்வையினை பதிவு செய்வதில் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன

நமது காலத்துக்கு முந்திய சமூகம் தொடர்பான நிகழ்வுகளை அதன் வளர்ச்சிப் போக்கினை அந்த வளர்ச்சியினை முன்னெடுத்து வந்த சமூக முன்னோடிகளை எனது அறிதலுக்கு எட்டடிய தூரம் வரை சென்று பதிவுக்குக் கெண்டுவர முயற்சி செய்கின்றேன்.

எமது துறையூர் கிராமத்துக்கு காலம் காலமாய் காவல் தெய்வங்களாக இருந்துவரும் ஐயனார் ஆலயம் முருகன் ஆலயம் ஆகியன அழகுற அமைந்திருந்து அருள்பாலித்துக்கொண்டிருப்பது இவ்வூர் மக்களுக்கு ஓர் வரப் பிரசாதமாகும்.

தொடக்கமாக துறையூரில் ஒரு ஆரம்ப பாடசாலை இல்லாத நிலையில் துறையூர் மக்கள் அந்த நாளில் துறையூரில் இருந்து ஒரு மையிலுக்கும் அதிகமான தூரத்திலுள்ள வங்களாவடியில் அமைந்துள்ள ஆரம்ப பாடசாலைக்கே சென்று ஆரம்பக் கல்வியினை கற்க வேண்டிய நிலைமைகளே இருந்தன. ஆரம்பக் கல்வி நிலையம் அதிக தூரத்தில் இருந்ததன் காரணமாக இவ்வூர் சிறார்கள் தமது அரம்பக் கலிவியினை கற்பதில் பெரும் சிரமத்தை எதிர் கொண்டனர் அத்துடன் கற்றல் மீதான நாட்டமும் குறைந்து வரும் நிலைமைகள் காணப்பட்டன இந்த கால கட்டத்தில் தனது சமூகத்தின் ஆரம்பக்கலவி அருகிப்போய்விடும் நிலைமைகளை அவதானித்த நமது சமூகத்தின் மூத்த கல்விமான்களில் ஒருவரான ஆசிரியர் திரு ஐ.கார்த்திகேசு அவர்கள் திரு இந்துபோட் இராசரெத்தினம் அவர்களது உதவியுடன் கடலோரமாக அமைந்துள்ள தமது சொந்தக் காணியில் ஐயனார் வித்தியாசாலை என பெயர் கொண்ட ஆரம்ப பாடசாலை ஒன்றை நிறுவியது மாத்திரமல்ல அப்பாடசாலையின் தலைமை ஆசிரியர் பொறுப்பினையும் ஏற்றுக் கொண்டு அரும்பணியாற்றி வந்தார். ஆசிரியரான இவரது துணைவியாருடன் இணைந்து நீண்ட காலம் குறித்த பாடசாலையில் சேவையாற்றிய திரு ஐ கார்த்திகேசு அவர்கள் ஐயனார் ஆலய பரிபாலன சபையின் தலைமைப் பொறுப்பிலிருந்து நீண்ட காலம் சமூகப் பணியாற்றியவர். தான் சார்ந்த சமூகத்தின் கல்வி மேம்பாட்டில் இவரோடு வாழ்ந்திருந்த பரந்த சமூக அக்கறையினை சிரத்தையினை நன்றி உணர்வுடன இப்பதி மூலம் நினைவு கூர்வது நமது கடமைப்பாடாகும்.

எந்த ஒரு பாடசாலையாக இருந்தாலும் சரி ஒரு சமூகமாக இருந்தாலும் சரி அல்லது எந்தவொரு மக்கள் நலன் சார்ந்த அமைப்பாக இருந்தாலும் சரி நேர்த்தியானதும் சாதூரியமானதுமான தலைமைத்துவத்தின் கீழ் ஒற்றுமையுடன் உரிய செயற்பாடுகளை முன்னெடுத்து செல்லுமேயானால் குறித்த சமூகமோ பாடசாலையோ அல்லது அமைப்புக்களோ சிறந்த முறையில் வளர்ச்சியடையும் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட நியதியாகும்.

அந்த வகையில் எமது துறையூர் கிராமமானது ஒரு குறிப்பிட் காலம் வரையிலும் கெட்டியான ஒற்றுமையுடன் நேர்த்தியான வழிகாட்டலில் வளர்ச்சியடைந்த போக்கினை எனது இளமைக்காலத்தில் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன். அந்த வளர்ச்சிப் போக்கில் எனது பங்களிப்பும் சிறிதளவாயினும் இருந்திருக்கின்றது என்பதை எண்ணி திருப்தியடைகின்றேன். இவ்வாறான படிப்படியான வளர்ச்சிப் போக்கில் நமது முன்னோர்களிடத்தில் இருந்திருக்ககூடிய பாரம்பரிய ஆயுர் வேத வையித்தியத்துறையின் வாசனை கிராமத்துக்குள்ளேயே அடங்கியிருந்த நிலைமைகள் மாறத்தொடங்கியது தீவகத்தின் ஏனைய கிராமங்கம்ளில் துறையூரின் வையித்தியத்துறையின் வாசனை மணம் பரப்பத் தொடங்கியது பரியாரி சி. முருகேசு பரியாரி ஐயம்பிள்ளை பரியாரி சரவணையர் கட்டு வையித்தியர் பி. செல்லையா ஆகியோர் நமது துறையூரின் நானறிந்த வையித்திய துறையின் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர் இவர்களைத் தொடர்ந்து இவர்களது வாரிசுகளும் குடும்ப உறவுகளும் குறித்த ஆயுர் வேத வையித்தியத் துறையில் முறையாக கற்றுத் தேர்ந்து வையித்தியத் துறையில் பேரும் புகளும் பெற்று விளங்கியதுடன் அவர்களது மேலான மருத்துவச் சேவையினால் துறையூர் பெருமையுடன் நிமிர்ந்து நின்றது.

குறித்த ஆயுர் வேத வையித்தியத் துறையின் முன்னோர்களையும் அவர்களை பின்பற்றி குறித்த வையித்திய சேவையில் தேர்ச்சி பெற்று துறையூருக்கு பெருமை சேர்த்த பெருந்தகை களையும் முறையே பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்

அமரர்களான திரு சி.முருகேசு, திரு மு.வினாசித்தம்பி, திரு செ.சின்னத்துரை, திரு சி. ஐயம்பிள்ளை, திரு ஐ.கந்தையா, திரு கா. கனகரெத்தினம திரு ஐ.பாலசுப்பிரமணியம், திரு க.நவரெத்தினம், திரு க.சோதிதாசன், திரு ந.நடனமுருகன திரு ச. சிவசம்பு ஆகியோர் அடங்குகின்றனர். இவர்களது சிறப்பான சேவையின் காரணமாக தீவகத்தின் அனைத்து கிராமங்களிலிருந்தும் மக்கள் தமது மருத்துவ தேவையின் பொருட்டு துறையூரை நாடி வந்த அந்தக் காலங்கள் கட்டாயம் பதிவாக்கப்பட வேண்டிய வரலாற்று நிகழ்வுகளாகும்.

மேலும் நமது காலத்தக்கு மந்திய கால கட்டத்தில் துறையூரில் கல்விமான்கள் என்று கருதப்பட்டவர்கள் விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலராகவே காணப்பட்டனர் காலப் போக்கில் படிப்படியாக நடந்தேறிய கல்வி மீதான நாட்டத்தின் விளைவாக கல்வி கற்றுத் தேர்ந்த இளைய சமுதாயம் ஒன்று வெளிப்படத் தொடங்கியது. இதன் பயனாக எமது கிராமத்திலிருந்த பல இளைஞர்கள் பல்கலைக்கழகத்துதக்கு தெரிவானவர்கள் உயர்தரம் கற்று தேர்ந்தவர்கள் ஆசிரியர் பயிற்சி கல்லூரி முடித்தவர்கள் தொழில் நுட்ப கல்லூரி , கூட்டுறவுக்கல்லூரி பயிற்சி பெற்றவர்கள் மற்றும் பல்துறைப்பயிற்சி பெற்றவர்கள் என பலவகை தகுதியுடைத்த இளம் சமுதாயம் உருவகம் பெறத் தொடங்கியது. தொடரந்து பட்தாரி ஆசிரியர்களாக, கணக்காளர்களாக, கூட்டுறவுத்துறை ஊழியர்களாக, அரச ஊழயர்களாக, வையத்தியர்களாக தனியார் துறை ஊழியர்களாக அதிகாரிகளாக பணி புரியத் தொடங்கினார்கள்.. இந்தக் காலகட்டத்திலேயே சமூக நலனில் நாட்டமுள்ள கற்றறிந்த இளைஞர்கள் சமூக நலன் சார்ந்த பொது நலப்பணிகளில் ஈடுபடத் தொடங்கினர். அவ்விதமான சமூக நலப் பணியில் தம்மை ஈடுபடுத்தி சேவையாற்றிய இளைஞர்களில் மிகவும் முக்கியமான இடத்தை வகித்தவரான சமூக நலன் விரும்பி திரு செல்லத்ததுரை காசிலிங்கம் என்பவர் இங்கு இப்பதிவில் பேசப்பட வேண்டிய சமூக நலன் விரும்பியாவார். தமது வாழ் நாளின் பெரும் பகுதியினை சமூக நலன் சார்ந்த விடயங்களிலேயே செலவிட்டவர் செயற்பட்டவர். நமது கிராமத்துக்கு துறையூர் என்ற அழகிய பெயரை சூட்டியதால் துறையூர் காசி என்ற புனை பெயருக்கு உரியவரானார். இவர் துறையூரில் அப்பொழுது இருந்திருக்க்ககூடிய இளைஞர்கள் யுவதிகளை தட்டியெழுப்ப ஒன்று திரட்டி சமூக வளர்ச்சியில் அத்தகைய இளையோரின் பங்கின் பெறுமானத்தை அதன் அவசியத்தை தெளிவாக

புலப்படுத்தினார். நாடகங்கள் பட்டி மன்றங்கள போன்றவற்றை ஒழுங்கு செய்து நடாத்தி சமூக விழிப்புணர்வினை தூண்டினார். துறையூரின் நடகத்துறையின் வளர்ச்சியில் இவரது பங்கு அளவிடற்கரியதாகவிருந்தது. ஓரளவு படித்து விட்டு வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடந்த பெண்களை வெளிக் கொண்டு வந்து மாதர் சங்கத்தை அமைத்து அதன் மூலமாக தையல் பயிற்சி பன்ன வேலைப்பயிற்சி போன்ற பயிற்சிகள் மூலமாக அவர்ள சுய தொழில் செய்யும் வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுத்து அரும்பணியாற்றியவர் துறையூர் காசி அவர்கள். அடுத்த கிராமமே தெரியாமல் துறையூருக்குள்ளேயே அடங்கிக் கிடந்த ஓரளவு படித்த பெண்களை முதன் முதலாக தலை நகர் கொழும்பில் அமைந்துள்ள இலங்கை மன்றக் கல்லூரியில் நடைபெற்ற கிராமிய அபிவிருத்தி மற்றும் குடும்ப நலன் தொடரபான அகில இலங்கை மட்டத்திலான கருத்தரங்குகளில் கலந்து கொள்ளச் செய்து அப் பெண்கள் மனதில் தன்னம்பிக்கை வளர உதவிய பெருமை துறையூர் காசி அவர்களையே சாரும்( குறித்த கருத்தரங்கில் கலந்து கொண்டு பயனடைந்த பெண்களில் நானும் ஒருவர்). திரு காசிலிங்கம் அவரகள் தற் பொழுது பிரான்ஸ் நாட்டில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் நம்மது கிராமத்தைப் பொறுத்த வரையில் ஏதோ ஒரு வழியில் அவரது சமூகப்பணி தொடர்ந்த வண்ணமிருக்கின்றது நாம் மறக்கப்பட முடியாத மனிதராக திரு காசி அவர்களை இங்கு பதிவு செய்வதில் பெருமைகொள்கின்றேன் .

மேலும் நமது துறையூர் கிராமத்தில் தோன்றி சமூக நலப்பணிகளில் ஈடுபட்டு உழைத்த நலன் விரும்பிகளையும் இங்கு நிடனைவு கூரக் கடமைப்பட்டுள்ளேன். அந்த வகையில் நமது கிராம மக்களின் தொழில் வளர்ச்சியில் அக்கறை காட்டியவரும் கிராம மக்கள் காலத்துக்கு காலம் புறச்சூழல்களிலிருந்து எதிர் கொண்ட பல்வேறுபட்ட பிரச்சனைகள் அனைத்தையும் துணிச்சலுடன் எதிர் கொண்டு வெற்றி கண்ட கிராமத்தின் காவலர்களில் முதன்மையானவராய் விளங்கியவரான திரு சி. கார்த்திகேசு அவர்களை இங்கு பதிவு செய்வது எனது கடமையாக கருதுகின்றேன். அத்துடன் ஐயனார் ஆலயத்திற்கும் அதன் வளர்ச்சிக்காகவும் அரும்பாடு பட்டு இடையில் மரணித்துப் போன பெருந்தகைகள் திரு கார்த்திகே கனகரெத்தினம் அவர்கள் திரு செ. சண்முகவடிவேல் அவர்கள் ஆகியோரை இந்த பதிவின் வழியாக நினைவு கூருகின்றேன்

மேலும் முன்னாளில் ஐயனார் வித்தியாசாலையின் ஆசிரியராக கடமையாற்றிய திருமதி வினாசித்தம்பி சரஸ்வதி அவரது கணவரும் நமது கிராமத்தின் தொடக்க கால சமூகத் தொண்டமான திரு மு. வினாசித்தம்பி அவர்களது ஞாபகார்த்தமாக தனக்கு உரித்தான காணியினை உலகத் தொண்டு நிறுவனமான சர்வோதய அமைப்புக்கு தானமாக வழங்கி குறித்த காணியில் கிராமத்து துறையூர்க் கிரமத்துக்கு அளப்பரிய சேவை வந்தடைவதற்கு வழிசமைத்தார். அவரது அத்தகைய பரந்த மனப்பாங்கின் விளைவாக குறித்த காணியில் சிறுவர் கல்வி நிலயம் ஒன்றுக்கான கட்டிடம் அமைக்கப்பட்டு இயக்கப்பட்டதுடன் சிறுவர்களுக்கு போசாக்கு உணவு வழங்கும் திட்டமும் நடைமுறைப்படுத்தப்பட்டது. எனவே இந்தப்பதிவின் மூலம் திரு திருமதி வினாசித்ம்பி தம்பதிகளின் சமூக அக்கறையினையும் அவரகளது அளப்பரிய சேவைகளையும் நன்றியுணர்வுடன் நாம் அனைவரும் நினைவு கூரக் கடமைப்பட்டுள்ளோம். அதே வேளை குறித்த சர்வோதய அமைப்பபானது துறையூர் கிராமத்தில் தனது வேலைத்திட்டங்களை முன்னெடுப்பதற்கு காரண கர்த்தர்களாக விளங்கிய திருமதி எதிர்குலசிங்கம் இராசேஸ்வரி, திருமதி மகேஸ்வரி சண்முகவடிவேல், திஜமதி லோகேஸ்வரி சித்திரவடிவேல் ஆகியோரை நிகழ் கால துறையூர் மக்களது கவனத்துக்கு கொண்டுவருவதை எனது கடமையாகக் கருதுகின்றேன்.

இவ்விதமாக நமது கிராமத்தின் வளர்ச்சியானது பல வழிகளிலும் முன்னேற்றமடைந்து வந்த வேளையில் 1990 களில் நாட்டில் ஏற்பட்ட அசாதாரண நிமைகளும் அதன் விளைவான இடம்பெயர்வுகளும் துறையூரின் வளர்ச்சியில் பெரிதும் பாதிப்பை ஏற்படுத்தியது. கல்வி கலை

பொருளாதாரக் கட்டமைப்புக்கள் அவை தொடர்பான முன்னெடுப்புக்கள் யாவும் தடைப்பட்டதுடன் கடுமையான சிதைவுக்குள்ளாகியது. மீண்டும் நாட்டில் அமைதி திரும்பிய காலத்தில் பெரும்பான்மையான துறையூரவர்கள் தமது கிராமத்தில் மீளக் குடியேறினார்கள். கல்வி கலை விளையாட்டு துறைகளுடன் தொழில் துறைகள் போன்ற சமூகக் கட்டமைப்புக்கள் மெல்ல மெல்ல வடிவம் பெறத் தொடங்கின. புதிய தலை முறை கல்வி கற்று முன்னேறுவதில் ஆர்வம் காட்டினர். வெளிநாடுகளில் வாழ்ந்து கொண்டிருக்க்ககூடிய துறையூரவரின் உதவிகள் கல்வி, விளையாட்டுத்துறை ஊக்குவிப்பு உதவிகளாகவும் மற்றும் அவசரகால நிவாரண உதவிகளாகவும் கிடைக்கப் பெற்றன கிராமத்தின் வளர்ச்சியில் முதியவர்கள், இளைஞர்கள், யுவதிகள் என அனைத்த தரப்பினரும் ஒன்றுபட்டு உழைத்ததன் பயனாக இன்று துறையூர் கிராமம் மீண்டும் எழுந்து நிமிர்ந்து நிற்கிறது இந்த வளர்ச்சி நிலை கண்டு மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன். துறையூரின் வளர்ச்சிக்காக இன்றும் உழைத்துக் கொண்டிருக்கும் தோழர்கள் தோழியர் அனைவருக்கும் வாழ்த்துக்களையும் பாராட்டுதல்களையும் இக்கட்டுரை வழியாக தெரிவிப்பதில் மன நிறைவடைகின்றேன்.

நன்றி

## <u>1979-1980 காலப்பகுதியும் நாங்களும்</u>

கந்தசாமி சந்திரசேகரன் - லண்டன்

ஒரு கிராமத்தின் செயற்திறன் மிக்க அமைப்பு அக்கிராமத்தின் இளைஞர்களால் நிர்வகிக்கப்படும் சனசமூக நிலையமே இவ்விளைஞர்கள் தமக்கு முந்திய தலை முறையினரிடம் பெற்றுக் கொண்ட அனுபவங்களைக் கொண்டு தமது காலச் சூழலுக்கேற்ப அக்கிராமத்தை அடுத்த கட்ட வளர்ச்சிக்கு நகர்த்துகின்றார்கள். இவர்களது நிர்வாகத் திறனுக்கேற்ப அவ்வூரின் பெருவாரியான இளைஞர்களின் ஆற்றலை ஒருங்கிணைத்து அக்கிராமத்தின் வளர்ச்சிக்கு பயன்படுத்துகின்றார்கள்.

எமது ஊரின் துறையூர் ஐயனார் சனசமூக நிலையம் என்ற அமைப்பு ஒரு வலுவான அமைப்பாக இருந்து வந்திருக்கின்றது -ஆனாலும் பலர் அதனை பெடியள் அரட்டை அடித்து பொழுது போக்கும் இடமாகவே கணித்து வருகின்றார்கள். இவ்வாறான ஒரு பார்வையையும் மீறி சனசமூக நிலைய நிர்வாகம் பல சமூகப்பணிகளைச் செய்து சமூகத்தில் நேரடியாகவும் மறைமுகமாகவும் பல சாதகமான தாக்கங்களை உண்டு பண்ணி வந்திருக்கின்றது என்பது வரலாறு- பெரியவர்கள் நிர்வாகத்திருந்து விலகுவதும் புதிய இளம் தலை முறையினர் நிர்வாகத்தினை பொறுப்பேற்பதுமான நடைமுறையில் என் வயதையொத்தவர்களின் நிர்வாக முறை 1979-1980 ஆண்டு காலப்பகுதியில் தொடங்கியது – நானும் எனது நண்பர்களான செல்லையா

செல்வரெத்தினம்(துரையன்) சின்னத்துரை இராத கிருஸ்னன்-அரசரெத்தினம் சோமசுந்தரம்- நாகராசா கிருஸ்னமூர்த்தி( மாம்பழம்)-சண்முகம் செல்வநாயகம் மற்றும் அமரர்களான கார்த்திகேசு இராசரெத்தினம்- செல்லத்துரை செல்வலிங்கம் ஆகியோர் நிர்வாக சபையில் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டோம்.

முதற்கட்டமாக எமது புதிய நிர்வாகத்தின் கீழ் நிலையத்தின் புதிய கட்டிடப்பணிகளை தொடக்கினோம் இதற்கான நிதி வருவாயினை பெறுவதில் பல சிரமங்களை எதிர்கொண்டிருந்த போதிலும் எமது மக்களின் ஒத்துழைப்பும் இளைஞர்களின் கடுமையான உழைப்பும் குறிப்பாக கடற்றொழில் நண்பர்கள் இரண்டு வள்ளங்களில் தொழில் செய்து அதன்மூலம் கிடைக்கப்பெற்ற வருமானத்தை கட்டிட நிதிக்கு தந்துதவினார்கள். இந் நற்பணியினை முன்னின்று செய்த செ. இராமலிங்கம் - கந்தசாமி- நவரெத்தினம் ஆகியோர் உட்பட சம்பந்தப்பட்ட அனைவரையும் நன்றியுடன் நினைவுகூருகின்றேன்.அதே போன்று தமது உழைப்பை தாராளமாக வழங்கிய கட்டிட வேலை செய்த நண்பர்களையும் இரவு பகல் பாராது அனைத்து பணிகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட அ.சோமசுந்தரம் (சோமன்) மாம்பழம் பொன்னன் ஆகியோரையும் நன்றியுணர்வுடன் இங்கு பதிவு செய்கின்றேன். இக்கடடிடம் மிகக் குறைந்த செலவில் கட்ட முடிந்தமைக்கு எமது இளைஞர்களின் கடின உழைப்பே காரணமாகும்.

வாசிக சாலையின் மிக முக்கிய வேலைத்திட்டங்களான கல்வி- விளையாட்டுத்துறை போன்ற துறைகளில் நாம் மிகவும் கவனம் செலுத்தியிருந்தோம் முதற்கட்டமாக வாசிக்கும் பழக்கத்தை அதிகப்படுத்த விரும்பினோம் திரு செல்லையா செல்வரெத்தினம் அவர்களது பொறுப்பில் குறித்த பணி விடப்பட்டது-இவரது அயராத முயறற்சியினால் வாசிகசாலை பலதரப்பட்ட புதிய புத்தகங்களையும் புதிய வாசகர்களையும் ஈர்த்துக் கொண்டது. கிராமத்து மாணவர்களது கல்வித்தரத்தினை மேம்படுத்தும் நோக்கத்தோடு “பாஸ்ரர் இன்ஸரிரீயுற்” என்ற பெயரில் பகுதி நேர கல்வி நிலையம் தொடங்கப்பட்டது- இம்முய்சி பெரிய அளவில் எமக்கு வெற்றியளித்தது- பாடசாலை ஆசிரியர்கள் பலர் பிள்ளைகளின் கல்வித்தரத்தில் மிகுந்த முன்னேற்றம் இருப்பதாகவும் குறித்த கல்வி நிலையத்தை தொடர்ந்து நடாத்தும்படி ஆலோசனை கூறியிருந்தனர். இப்பெரும் பணிக்கு முழு ஈடுபாட்டுடன் ஆசிரியர் குழுவில் என்னுடன் பங்கெடுத்துக்கொண்ட திரு வே.கனகசபாபதி திரு செ.செல்வரெத்தினம் மற்றும் அமரர்களான செல்லத்துரை செல்வலிங்கம் ஆகியோர் இடம்பெற்றிருந்தனர்.

விளையாட்டுத்துறையைப் பொறுத்தவரையில் உதைப்பந்தாட்டத்தில் கவனம் செலுத்திய அளவுக்கு மற்றைய விளையாட்டுத்துறைகளில் கவனம் செலுத்தப்படவில்லை என்பது வருந்ததக்க விடயமாகும். தீவுப்பகுதியில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய அளவுக்கு துயைூர் ஐயனார் விளையாட்டுக்கழகம் வலுவான ஒரு அணியாக எப்போதுமே இருந்து வருவது பாராட்டுக்குரியது. இதனை எழுதும்போது நாங்கள் விளையாடிய காலங்களை நினைத்துப்பார்க்கின்றேன்.

வாரத்துக்கு இருதடவை தையல் போடப்படவேண்டிய நிலையில் ஒரு பந்து- தையலுக்கு மேல் தையல் இதுதான் அன்யை நிலைமை. எமக்கு பலதரப்பட்ட விடயங்களில் ஆலோசகளையும் உதவிகளையும் செய்து வந்தவர்களில் மிகவும் கவனத்துக்குரியவரான அண்ணண் சின்னத்தம்பி தணிகாசலம் (மணியம்) அவர்களின பேருதவியால் ஒரு புதிய பந்து கிடைத்தது அதுவும் கேணியில் நனைந்தும் வெய்யிலில் காய்ந்தும் ஓரிரு மாதங்களில் அதுவும் தையல் போட ண்டிய நிகைகு வந்தது ஒரு பந்து வாங்குவதற்கு கூட வழியற்ற கடினமான காலகட்டம் அது.

உதைப்பந்தாட்டச் சுற்றுப் போட்டிக்கு பதினொரு பேரையும் அழைத்துச் செல்வதே சமயங்களில் பெரும் பாடக இருக்கும். எல்லோரும் விளையாடவேண்டுமென்ற நோக்கோடு இரண்டு அணிகளை (ஏ.பி )உருவாக்குதும் போட்டி நாளன்று போதுமான ஆட்கள் இல்லாமை கண்டு ஓடித்திரிவதும் வழமையாக நடைபெறும் விடயங்களாகும். எமதூரின் "மரடோனா" பிள்ளையார் ஆறுமுகம் ராசன் ஆகும் தெழிலால் வரும் வரை வாகனத்துடன் கடற்கரையில் காத்திருந்து அவரை கூட்டிச் சென்ற நாட்களும் இதை எழுதும்போது நினைவுக்கு வருகின்றது. எமது சமூகத்தின் முன்னேற்றத்திற்கு என்னைப்போன்ற பல எண்ணற்றவர்கள் தங்கள் பங்களிப்பை நல்கி இவ்வூரை மேம்படுத்தியிருக்கின்றார்கள். இவர்களில் பலர் தூர தேசங்களுக்கு போக வேண்டி நேரிட்டபோதும் கிராமத்தின் முன்னேற்றத்தின் மீது நாட்டமுள்ளவர்களாகவே இருந்துவருகின்றார்கள். அந்த வகையில் „இலங்கை கிராமிய அபிவிருத்தி அமைப்பு" என்னும் அமைப்பை உருவாக்கி அதனூடாக பல கிராம முன்னேற்ற வேலைத்திட்டங்களை செய்துவருகின்றார்கள். குறிப்பாக் பிரான்ஸ் நாட்டில் உள்ள நமது ஊரவர்களது கிராமத்துக்கான் சேவைகள் பாராட்டுக்குரியது. இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியமாக உருவெடுத்திருக்கும் மேற்படி அமைப்பின் சேவை தொடர்ந்தும் நமது ஊருக்கு கிடைக்கும் என்ற நம்பிக்கையினையும் இப்புத்தகத்தை வெளிக்கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் காசி அண்ணன் அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றிகளையும் பாராட்டுகளையும் வெளிப்படுத்தி நிறைவு செய்கின்றேன்.

நன்றி



**துறையூரின் பெருமையும்**

**அழியாத அடையாளங்களும்** -- செல்லையா சீவரெத்தினம்

எழில் கொஞ்சும் இலங்கை தீவின் வடபால் அமைந்த தமிழ் கலாச்சாரத்தின் தலைநகரமாம் யாழ் மண்ணின் சப்த தீவுகளில் பெருந்தீவாம் வேலணையின் தென்பகுதியில் மருதமும் நெய்தலும் சூழ்ந்த துறையூரின் பெருமைகளை நமது எதிர்கால சந்ததியினருக்காக இக் கட்டுரையில் எழுதுவதில் பெருமையடைகிறேன்... தரைமண் புழுதிகளையும், சகதி நிறைந்த தெருக்களையும், சாந்து பூசாத சுவர்களையும், மாட்டுசாணம் நிறைந்த கேணிகளையும், மாட்டுகன்றுகள் படுத்துறங்கும் தார் ரோட்டுக்களையும்,மழைக்கால போர்வையாக பனைஓலை பெட்டிகளையும் சுமந்து வாலிபம் சுமக்க கூடாத சுமைகளையும் கடந்து வந்த 1968 இல் இருந்த இளைஞர் கூட்டம் தான் நாங்கள்.............. 1970 இல் "வேலணை கடற்கரை" எனும் பெயர் கொண்டு விலாசம் தெரியாத எமது ஊர் 1970க்கு பின் " வேலணைத் துறையூர் " என பெயர் சூட்டி மகிழ்ந்த இளைஞர் கூடம் தான் நாங்கள். அந்த பெயரை வைத்த பெருமை இன்று பிரான்ஸ் நாட்டில் வாழும் எமது காசியண்ணாவையே சாரும்.....

வேலணைத் துறையூர் மக்கள் ஆங்கிலேயர் ஆட்சிக்கு முன் தென் இந்தியாவின் கேரள நாடில் இருந்து வந்த பரம்பரையினர் என கர்ணபரம்பரை கதைகள், வெடியரசன் போன்ற காவியங்களில் குறிப்பிடப்படுகிறது. அதற்கு சான்றாக சேரநாட்டு மக்கள் தமது குல தெய்வமாக கொண்டாடும் ஐயனார் வழிபாடு எமது துறையூரிலும் இடம் பெறுவதாகும். எமது குல தெய்வமாம் "அரிஹர

புத்திர ஐயனார் ” ஆலயம் எமது கிராமத்தின் தலை சிறந்த கோவிலாகக் காணப்படுகின்றது. எமது குல தெய்வத்தின் பெயரால் பள்ளிக்கூடம் ஐயனார் வித்தியாசாலை எனவும் துறையூர் ஐயனார் சனசமூக நிலையம், துறையூர் ஐயனார் விளையாட்டு கழகம், துறையூர் ஐயனார் கலாமன்றம் என ஐயனாரின் பெயரால் பல சமூக நிறுவனங்கள் இயங்கி எமது கிராமத்தின் பெயரை யாழ் குடாநாடு என்றும் பறைசாற்றி நிற்கிறது....... இன்றைய இளைஞர்களே! நீங்கள் எமது கிராமத்தின் புழுதி மண் தெருக்களையும் கடற்கரை காற்றையும் மறந்து விடாதீர்கள்- நகரத்தை நோக்கியும் வெளிநாடு சென்றும் வாழும் போதும் உங்களால் அந்த கிராமம் ஓர் அங்குலமாவது உயர வேண்டும். அந்த நம்பிக்கையில் எமது கிராமம் உள்ளது............. வேலணை என்ற பெரு நிலப்பரப்பின் பெருமைகளை வெளி உலகுக்கு கொண்டு செல்வதில் எமது துறையூர் கிராமம் முன் நிற்கிறது என்பது உங்களுக்கெல்லாம் பெருமையே!!! விளையாட்டு என்றால் துறையூர் ஐயனார் விளையாட்டு கழகம், நாடகம் என்றால் துறையூர் ஐயனார் கலாமன்றம் என்று மார்தட்டிய காலம் எமக்கு பெருமை அளிக்கின்றது.....................நாங்கள் எமது கிராமத்தின் நிலத்தடி தண்ணீர் குடித்து வளர்ந்தவர்கள், பூவரச மரத்தடியில் ””கிளித்தட்டும்” காய்ந்த புல் தரையில் ”உதைபநதாட்டமும்” பனை மரங்களுக்கு இடையே ”கரப்பந்தும்” ஊர் மணல் காடுகளில் சடுகுடுவும்( வட்டக் கோடும்) விளையாடிக் களித்தவர்கள் குறித்த விளையாட்டுக்கள் தொடர்பான் தீவக விளையாட்டுப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றிகளை குவித்தவர்கள் நாங்கள் .. அந்தகால வெற்றிகளின் தொடர்ச்சியை இன்றைய இளைஞர்கள் தமது விளையாட்டு திறமையால் பெருமைப்படுத்திக்கொண்டு இருப்பது எமது மண்ணுக்கு பெருமையே.................

இன்று துறையூரில் சைவத்தை வளர்க்கும் பல ஆலயங்கள், படித்த இளைஞர் கூட்டம்,பண்பாடுகளை கட்டி எழுப்பும் கலாச்சார மன்றங்கள் ,வைத்திய பரம்பரைகள், ஓங்கி உருவெடுக்கும் கற்பவர் கூட்டம், குலத்தொழிலின் பெருமைகளை வளர்க்கும் சமாசங்கள், சங்கங்கள் என எமது கிராமம் பல வழிகளில் முன்னேறி வருகின்றது. 1950களில் இந்த கிராமத்தின் சிறப்புக்களை உயர்த்திய பெருமை எமது ஆசான் கார்த்தியேசு வாத்தியாருக்கும், வைத்தியர் முருகேஷ் அவர்கட்கும் உரியது. அதை தொடர்ந்து இன்று வரைக்கும் பல பெரியவர்கள் இளைஞர்கள் எமது சமூகத்தை வழி நடத்தி வருகின்றனர்....... 1960-1980 வரைக்கும் மிக சிறப்பாக வளர்ந்து வந்த எமது கிராமம் 1980க்கு பின் நாட்டில் தோன்றிய குழப்பகரமான சூழலால் பெரிதும் பாதிக்கப்பட்டு முற்று முழுதாக இடம் பெயர்வுக்குட்பட்டது. எனினும் இன்றைய சூழலில் மீண்டும் கொஞ்சம் கொஞ்சமாக உயிர்த்து வருவதை நாங்கள் கண் கூடாக காண்கின்றோம் .எதிர் காலத்தில் எமது கிராமம் எல்லா வழியிலும் முன்னேறும். எமது அரிஹர புத்திர ஐயனார் வழி செய்வார் என்ற நம்பிக்கை எமக்குண்டு..

## கறுப்பு வரலாறு

1958 வரை துறையூர் சமூகத்தின் ஒழுங்கமைப்பும் அதன் இயங்கியல் தொடர்பான நகர்வுகள் தீர்மானங்கள் யாவும் ஐயனார் ஆலயத்தை மையப்படுத்தியதாகவே இருந்து வந்தது. ஓட்டுமொத்த துறையூர் மக்களது பங்களிப்புக்கள் யாவும் குறித்த ஆலய பரிபலன சபையிடமே சேர்ந்த நிலைமைகளே இருந்து வந்தது. ஆலய பரிபாலன சபையில் எடுக்கப்பட்ட தீர்மானத்தின்படி அனைத்து கடல் தொழிலாளர்களும் தமது நாளாநத் உழைப்பில் பத்தில் ஒரு பங்கினையும் ஏனைய தொழிலில் ஈடுபட்டவர்கள் மாதாந்த கட்டணங்களாகவும் தமது பங்களிப்புக்களை செலுத்தி வந்தார்கள்(மாதாந் கட்டணங்கள் காலத்துக்கு காலம் வேறுபட்டிருந்தது). குறித்த பங்களிப்புக்கள் யாவும் ஐயனார் ஆலயத்தின் பரரமரிப்பு மற்றும் புனரமைப்புக்காகவே செலவிடப்பட்டு வந்தது.. கணிசமான நிதி வரவினைக் கொண்ட சமூக அமைப்பாக ஐயனார் ஆலய பரிபாலன சபை இருந்து வந்தது.

1958ம் ஆண்டில குறித்த ஆலய பரிபாலன சபையினருக்கிடையில் சபையின் ஆளுமை தொடர்பில் முளைவிட்ட முரண்பாடுகள், விட்டுக் கொடுப்பின்மை போன்ற காரணிகளின் நிமித்தம் உருவான விரோதப் போக்கானது பருத்துப் பெருத்ததன் விளைவாக நீண்ட நெடிய காலமாக கட் காத்து வந்திருந்த ஒருமைப்பாடு உடைந்துபோனது. துரதிஸ்ட்டவசமாக நடந்தேறிய இந்நிகழ்வின் தொடர்ச்சியாக துறையூர் சமூகத்தின் ஆலய பரிபாலன சபையினர் இரண்டு பிரிவுகளாக பிரிந்து போக நேர்ந்தது. குறித்த குழுக்களுடனான சொந்த பந்தங்கள் மற்றும் திருவிழா ரீதியிலான உறவு அடிப்படையில் சமூகம் பிளவுபட்டது . பிறிதொரு ஆலயம் தொற்றமெடுத்தது. சமூகத்தின் ஒட்டுமொத்த நலனையும்( பல்வேறு நிலைகளில்) ஆழமாக பாதித்த இந்த உடைவானது ஓரிடத்தை சென்றடைந்த மக்களது பங்களிப்பினை இரு வேறு பரிபாலன சபையினரிடம் சென்றடையச் செய்தன. சமகால சமூ நலன், அதன் ஒருமைப்பாடு போன்றவற்றை பாதித்துவிடலாம் என்ற அச்சத்தின் நிமித்தம் குறித்த பிரிவுக்கான காரணங்கள் என்ன, மற்றும் காரணகர்த்தாக்கள் யார், இதன் விளைவாக சமூக வளர்ச்சி மீதான தாக்கங்கள் எவ்வகையானவை போன்றவற்றை ஆழமாக ஆராய்வதை தவிர்த்துக் கொள்கின்றோம். இவ்வாறாக ஆலய பரிபாலனத்தை மையப்படுத்திய பிரிவானது அதிஷ்ட்டவசமாக ஏனைய சமூக நலன் சார் ஸ்தாபனங்களில் பிரதிபலிக்கவில்லை என்பது மகிழ்ச்சிக்குரிய விடயமாகும்(வாசிகசாலை, விளையாட்டுத்துறை, கலைத்துறை, கூட்டுறவுச்சங்கம் போன்றவற்றில்) சமலத்தில் ஆலயங்ககளது பரிபாலன நிர்வாகங்களும் அவை சம்பந்தமான பங்களிப்பின் முறைகளும் தனத்தனியாக இயங்குவதை காணமுடிகிறதே தவிர துறையூர் சமூகத்தின் மத்தியில் பிரிவினையின் அடையாளங்கள் மறைந்து போய் பெரும்பதி மேவப்பட்டிருப்பதானது பெரு மகிழ்ச்சிக்குரிய விடயமாகும். மேலும் எஞ்சியிருக்கக்கூடிய வேறுபாடுகள் அனைத்தும் பரி பூரணமாக மேவப்படவேண்டும் என்று நாம் அனைவரும் உறுதி எடுத்துக் கொள்வோமாக

கறுப்பு வரலாறு என்ற தலைப்பில் சொல்லப்பட்டிருக்கும் தகவலானது நமக்கெல்லாம் கசப்பானதொன்றே என்பதை அங்கீகரிக்கின்றேன் ஆயினும் நமது சமூகம் கடந்து வந்த குறித்த

துர்ப்பாக்கிய நிகழ்வு தொடர்பான பதிவுகள் மேலோட்டமாகவேனும் பதிவு செய்யப்படுவது அவசியமென உணரப்பட்டதால் இங்கு பதிவு செய்யப்படுகிறது.

## <u>இன்னோர் உடலெடுத்து இங்கு வந்து பிறந்துவிடு---</u>

கலையன்பன் கா.இராசரெத்தினம்

நினைவாக ------ துறையூர் காசி

கடல் மணக்கும் கரையோரம்

குருகு மணல் குவி மேட்டில்

தென்னங்கிடுகடுக்கி

காவலுக்காய் செய்த வீடு—அந்த

ஓலைக் குடிலதனில்

ஊரோயும் சாமத்தில்

சினிங்கிசினிங்கி எரியுமந்த

சிமினி விளக்கொளியில்

எழுதினாய் எழுதினாய்

ஏராளம் ஏராளம் எழுதிக் குவித்தாய்

எழுதிக் கொண்டேயிருந்தாய்

எத்தனை நாடகங்கள்

அத்தனையும் பொக்கிசங்கள்

அந்த கலையரசின் வல்லமைக்கு

வலுவான சாட்சியங்கள்

எங்கெ அந்த எழுது கோல்

தேடுகின்றேன் தோழனே
விட்டுச் சென்றறிருப்பாய் என்க்காக
என்றெண்ணித் தேடுகின்றேன்
தமிழ்மொழிச் சுழிகளில் தங்கி நின்று
சுற்றும் உந்தன் எழுது கோலை
தந்து விட நினைத்தாயா என்னிடம்
தரமறந்து போனாயா?
உன்னருகில் இல்லையென்று
உடனெடுத்துச் சென்றாயா?
ஊருலகம் புகழ் பேச
உயரத்தில் பறந்தோமே
அந்த நாள் நினைவுகளை
அழைக்கின்றேன் உனக்காக

கட்டுக் கொடியறுத்த காளையென
வளம் நிறைந்த வாழ்விட்ட -அந்த
வட்டத்தை உடைத்தெறிநதாய்
தானிருந்த தங்க கூட்டினை தகர்ததெறிந்தாய்
வெற்றியின் எல்லை வரை பறக்கத் துணிந் தாய்
பட்டம் பதவியெல்லாம்
துச்சமென தூர வைத்தாய்
தூய கலைப்பணியை
தோழில் சுமந்து கொண்டாய்
பளுதற்ற எழுத்தாற்றல்- கதைப்
பாத்திரமாய மாறிவிடும் படைப்பாற்றல்
சாதிக்க வேண்டுமென்ற உள்ளாற்றல் எல்லாமே
உன்னோடுடன் பிறந்த பேராற்றல்
குழந்தையென தவழ்ந்ததன்று
துறையூர் கலாமன்றம்
உன்மடியில் வாழ்ந்த நாளில் வளர்ந்ததையா
கலையிலன்பு கொண்டாய் காதலித்தாய்
கலையன்பனானாய்

வாத்தியென்றே நாமழைப்போம்- எம்
வாயில் அவலினிக்கும்
சிரித்த முகம் விரிப்பாய்- போதுமடா உன்
வெள்ளச் சிந்தைக்கு
வேறென்ன சாட்சி சொல்ல
ஒரு பொளுதும் சினந்தறியாய் தம்பியர்
மனம் வருந்தும் சொல்லறியாய்
மனம் பொருந்தி உன் மனையில்
தினம் விருந்து தந்தெமக்கு
நடிப்பின் விதமுரைத்து
நாள் முளுதும் பயிற்றுவித்த
பொன்னான நாட்களதை
மறந்திடுமா எங்கள் மனம்
அந்த நாள் நினைவுகளை
அழைக்கின்றேன் உன் நினைவாய்

கருவாக்கி நான் தந்த உடன்பிறப்பை
உயிர் கொடுத்து  உருக் கொடுத்து
ஊருலகம் பாராட்ட உயர்த்தி விட்டாய்
ஏறிய அரங்கனைத்தும் வாரிப் புகழெடுக்க
வெற்றி மேல் வெற்றிகண்டு
விருதெடுக் விதைகளிட்டாய்
வித்தகனே நீ விதைத்த
விதைகளிங்கே சாகவில்லை -நீ
ஏற்றி வைத்த விளக்கிங்கே
அணையவில்லை ஆனாலும்
உன்னைப்போல் ஒரு கலைஞன்
ஊருக்குள் இல்லையடா
உயிரோய்ந்து போவதில்லை
என்ற விதி உண்மையென்றால்
இன்னோர் உடலெடுத்து
இங்கு வந்து பிறந்துவிடு

புதிதாய் கதையெழுதி -கலைப்
புரட்சியொன்று செய்திடலாம்
துறையூர் கலா மன்றம்
தூண்டா மணி விளக்கு
விரிந்தெறித்த வெளிச்சமதன்
பிரகாசமாயிருந்த மகன்
கண்மூடிப் போன கதை
கருக்குதடா நெஞ்சையின்னும்
கலை வளர்க்க தலை கொடுத்து முதல்
நிலையெடுக்க போரிட்டான்
விலை கொடுக்க முடியாத
மலை விளக்கு அணைந்ததடா!
கலைமாமணியே
கலைமகள் கைப் பொருளே
போட்டி அரங்கென்று
புறப்படும் நேரமெல்லாம்
சமருக்கு போவதுபோல்
சபதம் எடுங்களென்பாய்
வென்று வர வேண்டுமென்பாய் -விருது
கொண்டு வர வேண்டுமென்பாய்
விலையளவில்லாத
வெற்றிகளை நாம் குவித்தோம் ஆனாலும்
இன்னும் மலையளவில் சாதிக்க
ஆசைகொண்டாய்
அவசரமாய் அணைந்து விட்டாய்
ஆதவனே அருமைத் தோழனே
வாத்தியென்றழைப்பார் அந்த
வஞ்சமில்லா உன் தோழர்
நெஞ்சினிலே என்றென்றும்
வாழுகின்ற சித்திரமே
கூரிய உன் எழுத்தில் வாழும் வலிமையினை
தம்பி எனக் கென்று தானமாயத் தந்திருந்தாய்

இந்த நாள் என்னெழுத்தில்

இருக்கின்ற வளமெலல்லாம் அந்த

வளம் கொண்டு நான் செய்த

படைப்பெல்லாம் வள்ளலே உந்தனுக்கே

காணிக்கையாக்குகின்றேன

காவியமே !கலைப்புயலே !

புதுமையே !புத்தகமே!

நுரை கொண்டு வரும் அலைகள்

கரையேறி விளையாடும் துறையூரில்

உன்நினைவு என்றென்றும் வாழ்ந்திருக்கும்

காலத்தால் அழியாத கல்வெட்டாய நீயிருப்பாய்

## நன்றியும் பாராட்டுக்களும்



வேலணை மண்ணில் சிறுவர்களுக்கான .கற்கும் நெறிகளில் தங்கள் உழைப்பை சிந்தி உதவிபுரிந்த ..எனது உடன்பிறப்புக்களுக்கு .இந்த எழுத்தின் மூலம் நன்றிகள் பல கூற விரும்புகின்றேன் ..ஐயனார் முன்பள்ளி..கண்ணபுரம் முன்பள்ளி போன்ற நிலயங்களை அமைத்து..அங்கு 60 பேருக்கு மேற்பட்ட சிறுவர்களுக்கு உணவும் கொடுத்து .பாடநெறிகளும் கற்றுக் கொடுத்தவர்களுக்கு நன்றிகளும் வாழ்த்துக்களும்..அங்கு சேவை நோக்கத்தோடு ..கடமைபுரிந்த ஆசிரியர்களுக்கு மிக்க நன்றிகள்......இந்த வேலைத்திட்டத்துக்கு உதவிபுரிந்த முருகேசு யோகேசுவரன் ..கார்த்திகேசு சாந்தலிங்கம்;இதை முன்நின்று நடத்தியிருந்தவர் .மறைந்த கார்த்திகேசு இராஜரட்ணம் இராஜரட்ணம் ஆகியோரை நினைவு கூருவதுடன். .. பினனாளில் மேலதிக கட்;டிடத் தொகுதியொன்னற அமைத்துக் கொடுப்பதில் நிதி உதவி வழங்கிய செல்லத்துரை இராமலிங்கம் முருகேசு சந்தான கிருஸ்னன் ஆகியோருக்கும; இவர்போன்ற பலர் ..எங்கள்

வேலணையூர்...மண்ணுக்கு ஆற்றிய சேவைகள் மூலம்..பல சமூக நற்பணிகள் இடம்பெற்றிருந்தது என்பது குறிப்படத்தக்கது:::அவர்கள் அனைவருக்கும் ...எங்கள் நன்றிகளை இந்த எழுத்துக்களின் ஊடாக நினைவுபடுத்திக் கொள்கின்றோம்...

.நன்றியுடன் வேலணையூர் லிங்கா:::::

.



.

**பெற்ற தாயும் பிறந் பொன்னாடும நற்றதன் வானில் நனி சிறந்தனவே**

**<u>எழில் கொஞ்சும் எங்கள்நிலம்</u>**

திரை கடல் ஓடித் திரவியம் பெற்றாலும் பிறந்த மண்ணில் இருந்து பெறக் கூடிய பேரானந்த சுகத்திற்கும் ஈடிணையாக எதுவுமே கிடையாது

பிறந்த மண்ணைப்பிரிந்து கடல் கடந்து கண்ணுக்கெட்டாத தூரம் புலம் பெயர்ந்து வந்துவிட்டாலும் பிறந்த தேசத்தையும் சொந்த கிராமத்தினையும் அங்கு வாழ்ந்த அந்த வாழ்வியலையும் அடிக்கடி நமது எண்ணத்துக்குள் வந்து போகும் அந்த நினைவலைகள் அவ்வப்போது எம்மை நெருடிக் கொண்டுதானிருக்கின்றன இந்த வகையில் நான் பிறந்த என் தாய் நிலமான வேலணை எனப்படும் கிராமத்தை அதன் அழகை அதன் அமைவிடத்தை அதற்கான தனிச்சிறப்பினை என் மனத்திரையில் திரையிட்டுப் பார்க்கின்றேன்.

இந்த மண்ணில் நான் வாழ்ந்த காலப்பகுதியில் என் சிந்தனைக்கு எட்டாத எத்தனையோ விடயங்கள் அந்த மண்ணைப் பிரிந்து தூர தேசத்தில் வாழ்கின்ற சம காலத்தில் பல கேள்விக்கணைகள் என்னை துளை போட்டுக் கொண்டேயிருக்கின்றன காரணம் இல்லாமல் காரியம் இல்லை எப்படி வேலணை என்று பெயர் வந்தது என்ற காரணத்திற்கான வினாவை அன்றும் இன்றும் எனக்குள்ளும் வெளியிலும் தேடிக்கொண்டுதானிருக்கின்றேன். வேலணை என்ற பெயர் கொண்ட அரசன் கடல் வழிப் பயணம் மேற்கொண்டபோது இத்தீவின் கரையினை அணைய நேரிட்டதால் வேலணை என்னும் காரணப் பெயர் ஏற்பட்டது என்றும் இன்னும் இராமயாண இதிகாசத்தின்படி இலங்கை மன்னன் இராவணனுக்கெதிராக இராமர் போர் தொடுத்தபோது இராமரின் வேல் வடிவமான வில்லு இந்த நிலத்தில் வந்தணைந்ததால் வேலணை எனப் பெயர் வந்ததென்றும் பல வரலாற்று காரணங்களை எமது முன்னோர்கள் சொல்லிருக்கின்றார்கள்.

இயற்கை எழில் கொஞசும் இந்த மண்ணின் தெற்குப்புறமான நிலப்பரப்பு துறையூர் எனப் பெயரிடப்பட்டு அழைக்கப்பட்டு வருகின்றது. இவ்வாறு துறையூர், செட்டிபுலம், அம்பிகை நகர் போன்ற கடலோர நிலப்குதிகள் இசை பாடும் கடலலைகளால் தரை தொட்டு முத்தமிடும் காட்சிகளும், ஊர் காக்கும் படைகள் போன்று ஓங்கி உயர்ந்து வான் தொடத்துடிக்கும் பனை தென்னை மரக்காடுகள் ஆங்காங்கே கூட்டம் கூட்டமாய் நின்றிருக்கும் காட்சிகளும் பரந்து விரிந்து கிடக்கும் குருகு மணல் காடுகளும் செம்மண் களிமண் தரை நிலங்களும் வளம் தரும் விவசாய நிலங்களும் கேணி குளங்களும் உயர்ந்த கோபுரங்களை தூக்கிக் காட்டி நிற்கும் ஆலயங்களும் மலிந்து பொலிந்து கிடக்கும் என் நிலத்தின் கண்கொள்ளாக் காட்சிகளின் அழகை விரித்தெழுத என்னிடம் வார்த்தைகள் இல்லை.

பொல்லாத போரின் அனர்த்தங்கள் எம் மண்ணை மக்களை அவர்களது அமைதியான வாழ்வியலை சற்றே நிலை குலையச் செய்து பெரும்பாலான மக்களை இடம்பெயர்வுக்கு உள்ளாக்கிய போதும் தமது மண்ணை மறந்து வாழ விருமபாமல் மீண்டும் வந்து குடியேறி

துணிச்சலுடன் தமது இருப்பை நிலைப்படுத்தி தமது நிலத்தை வளமாக்கி வருவதுடன் தாமும் தம்மை வளமான வாழ்வை நோக்கி நகர்த்திக் கொண்டிருக்கின்றார்கள். இயல்பாகவே அவர்களிடம் இருக்கக் கூடிய அறிவு, உழைப்பு, துணிச்சல் போன்றவற்றை ஆதாரமாகக் கொண்டு கிராமத்தை வேகமான வளர்ச்சிப்பாதையில் இட்டுச்சென்று கொண்டிருக்கின்றார்கள். தீவகத்தின் மத்திய நிர்வாக ஸ்த்தலமாக எமது கிராமம் விளங்குகின்றது.

இந்த வேலணை நிலப்பரப்பின் தென் முனையில் அமைந்திருக்கக்கூடிய துறையூர் என்னும் அழகிய கிராமத்தில் மக்கள் தொகை மிக அடர்த்தியாக காணப்படுகிறது. இந்துத்துவ கலாச்சார விழுமியங்களை பேணி வரும் இப்பகுதி மக்கள் ஆரம்ப காலம் தொட்டு ஐயனார் ஆலயத்தை தமது மையத் தரிசன ஸ்த்தலமாக பாவித்து பேணி பாதுகாத்து வந்தனர் வேலணையில் இருக்க்ககூடிய வரலாற்றுச்சிறப்பு மிக்க ஆலயங்களில் ஐயனார் ஆலயமும் ஒன்றாக விளங்கி வருகிறது. இந்த ஐயனார் ஆலயம் துறையூர் பகுதியின் மேற்குப்பக்கமாக தோற்மெடுத்தமைக்கு ஒரு வரலாற்று கதை சொல்லப்படுகிறது. தூர தேச பொம்மை வியாபாரி குறித்த சிற்றூர் வழியாக பயணம் மேற்கொண்டபோது அந்த இடப்பகுதியில் ஐயனார் கடவுளை ஒத்த பொம்மை ஒன்று தவறி விழுந்து மண்ணுள் புதைந்து மாயமாகிவிட்டதாகவும் சிறிது காலத்தில் அப் பொம்மை குறித்த ஊர் மக்களால் கண்டு பிடிக்கப்பட்டதன் நிமித்தம் அந்த இடத்தில் அரிகர புத்திர ஐயனார் கோவில் தோற்று விக்கப்பட்டதாகவும் நமது முன்னோர்களது வாய் மூல வரலாற்றுக் குறிப்புகளிருந்து அறிய முடிகிறது. இவ்வாறு பெருமைக்கும் புகழுக்குமுரிய நமது வேலணைக்கிரமத்தினதும் அதன் சிறுறூர் துறையூர் பகுதிக்கிராமத்தினதும் வரலாற்றுச் சிறப்புக்கள் தொடர்பில் இன்னும் எவ்வளவோ சங்கதிகள் வெளிக்கொணரப்படாமல புதைந்து கிடக்கின்றனவோ நான் அறியேன் காலத்தின் ஓட்டத்தில் ஏற்பட்டு வரும் மாற்றங்களில் வீச்சாக வளர்ந்து வரும் அறிவியல் சமுதாயத்தின் தேடலில் எமது கிராமம் தொடர்பில் இன்னும் புதைந்தபடியிருக்கும் வரலாற்று உண்மைகள் வெளிக்கொணப்படலாம் என்ற நம்பிக்கையுடன் எனது இந்த வரைவினை முடிக்கின்றேன்

என்றும் மண்வாசனையுடன்

கவிஞர் சின்னத்தம்பி தணிகாசலம்

# கடலில் தொழிலொடு போனீரே----

---------------வேலணையூர்-தாஸ்

**அவள்-----**

கடலில் தொழிலொடு போனீரே

கன்னி நினைவுடன் போவீரா

நிலவின் ஒளியினில் போனீரே

என் நிலமை தெரிந்துமே போனீரா

கடலின் கரையில் உருகுகிறேன்

உப்பு காற்றில் உலர்ந்தே வாடுகிறேன்.

அவன்-

உடலும் உறுதொழிலும் தோணியும் தான் இங்கே

உசிரை விட்டு வந்தேன் உன்னோடு

உன்னை கொண்டு வந்தென் கண்ணோடு

அவள்-

நிலவும் தான் உறங்கும் ஊர் உறங்கும்

என் விழிகள் உறங்காதே

உண்ணும் உணவும் இறங்காதே

என் உயிரே

எப்போ நீ மீள கரைக்கு வரும்---

அவன்-

வானில் வெள்ளியெல்லாம்

உன் விழியாய் மினுங்குதடி

இரையும் கடலோசை உன் பெயரே சொல்லுதடி

வாடை காற்றிலென் பாடல் கரையுதடி

கண்ணே நீயுறங்கு காலையிலே வந்திடுவேன்.

அவள்-

காற்றும் வலுக்குதையா கனத்த இடிகேட்குதையா

ஏழை இவள் மனசு கடற்கரையில் அலையுதையா

அவன்-

காற்றும் கனமழையும் கடலும் நம் நண்பரடி

கண்ணே கலங்காதே

விடியுமுன்னே நான் வருவன்.

வெள்ளி முளைத்து வரும் விரால் மீனால் பறிநிறையும்

தோணி கரையணையும் என் தோளில்நீயணைவாய்.....

அவள்-

காலை வருமளவும் கறங்காய் மனம் சுற்றுமையா

கண்ணில் உனை கண்ட பின்னே

கன்னிமனம் ஆறுமையா.------- ---- --



**திரு சி கார்த்திகேசு அவர்கள்**

துறையூர் மக்கள் சமூகத்துக்காக அந்தச் சமூகத்தின் முன்றேறத்துக்காக சமூக அக்கறையுடன் செயல்பட்டு வந்த பல சமூக நலன் விரும்பிகள் மத்தியில் பெருந்தகை திரு சி.கார்த்திகேசு அவர்கள் மிகவும் முக்கியமான பாத்திரத்தை வகித்திருந்தார் தொடர்ந்தும் அவரது வயதான காலத்திலும் அவரது சிந்தனைகளும் செயல்பாடுகளும் அவரது சமூக அக்கறையினை வெளிப்படுத்துவதாகவே இருந்து வருகின்றது.

1958ம் அதனைத் தொடர்ந்த கால கட்டங்களில் இருந்திருக்க்ககூடிய இளைஞர் தலைமுறையில் முற்போக்கு சிந்தனை மேலோங்கிய இளுளைஞராக இவர் காணப்பட்டார். இவருடன் திரு நா. ஐயம்பிள்ளை திரு வ.இராமலிங்கம் போன்றோர் ஒத்த கருத்துடையவர்களாக ஒன்று பட்டு செயற்பட்டார்கள் என்ற தகவல்கள் கிடைக்கப்பபெற்றுள்ளன. சனசமூக நிலையத்தின் வளர்ச்சியிலும் அங்கு வாசிப்பு பழக்கத்தை அறிமுகப்படுத்தியதிலும் இவரது பங்களிப்பு கணிசமானதாக இருந்திருக்கின்றது. அறிஞர் அண்ணாதுரை டாகடர் மு.வரதராஜன் தந்தை ஈ.வே.ரா.பெரியார், கல்கி போன்ற புகழ் பெற்ற தமிழ் நாட்டு எழுத்தாளர்களது உன்னதமான படைப்புக்களை ஆர்வத்துடன் வாசித்து தமது பொது அறிவாற்றலை வளர்த்துக் கொண்டவர். தன் செய்துடன் தன்னிடமிருந்த ஏராளமான நுல்களை சனசமூக நிலையத்துக்கு அன்பளிப்புச் செய்து அங்கு ஓர் நூலகப் பகுதியொன்றினை ஏற்படுத்த பேருதவி புரிந்தார். துறையூர் கடற்றொழிலாளர்களிடையே கூட்டுறவு அமைப்பின் அனுகூலங்களை பிரசசாரப்படுத்தி

ஊர்காவற்றுறைத் தொகுதிக் கடற்றொழிலாளர் சங்கத்தின் கிளை அமைப்பாக துறையூரில் கிளை அமைப்பை உருவாக்கி பல தரப்பட்ட நன்மைகளை தொழிலாளர்களுக்க கிடைக்கச்செய்த பெரும்பணியில் ஈடுபட்டிருந்த திரு வ. இராமலிங்கம் அவர்களுடன் இணைந்து பணியாற்றியதுடன் தலைமைச்சங்கத்தின் இயக்குநர் சபை உறுப்பினராகவும் தெரிவாகி பணியாற்றி வந்தார். இவ்வாறாக துறையூர் சமூக மேம்பாட்டில் அக்கறை காட்டி வந்த இவர் துறையூர் சமூகம் காலத்துக்கு காலம் சந்திக்க நேர்ந்த வெளிப்புறமாக இருந்து வந்த நெருக்கடிகளையெல்லாம் எதிர் கொண்ட துணிச்சல்மிக்க துறையூரவர்கள்களில் ஒருவராக நின்றிருந்தார். துறையூர் சமூகத்தின் மேம்பாட்டிலும் அதன் ஸ்த்திரத்தன்மையிலும் திரு சி. கார்த்திகேசு அவர்களது பங்களிப்புக்கள் மறக்கப்பட முடியாதவை. அன்னாரை துறையூர் கிராமத்தின் முதன்மை சமூக நலன் விரும்பிகளில் ஒருவராக அடையாளப்படுத்தி இங்கு பதிவு செய்வதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

**திரு மு. வினாசித்தம்பி அவர்கள்**

பெருந்தகை திரு. மு.வினாசித்தம்பி அவர்கள் துறையூர் கிராமத்தின் மூத்த சமூகத் தொண்டர்களில் மிகவும் பிரதான இடத்தை வகித்து வந்தவர். துறையூர் வாழ் மக்கள் மட்டுமல்லாது தீவகம் முழுவதும் அறியப்ட்ட ஒரு மக்கள் நலன் விரும்பியாவார்.. துறையூர் சன சமூக நிலையம் நிர்மாணிப்பதில் தொடங்கி துறையூர் ஐயனார் கலா மன்றத்தின் வளர்ச்சிக்கு துணையாக இருந்தது வரை அவரது சமூக கலை கல்வி ஆன்மீக மேம்பாடு போன்ற அனைத்திலும் அவரது சமூக நலப்பணிகளின் சுவடுகள் பதிவாகியிருக்கின்றன.

அன்றயை கால வேலணைக் கிராம சபை 4ம் வட்டார உறுப்பினராக ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் தேர்தல் மூலம் தெரிவாகிய ஒரே ஒரு துறையூர் சமூகப் போராளியாவார். பல சமூகப்பிரிவுகளைக் கொண்ட வேலணைக் கிராமத்தின் 4ம் வட்டாரத்தில் இரண்டு தடவைகள் தொடர்ந்து கிராம சபைக்கு தேர்தல் மூலம் தெரிவாகியிருப்பதானது அவர் அனைத்து சமூகங்களோடு கொண்டிருந்த இணக்கமான ஈடுபாட்டினை சாட்சியப்படுத்துகின்றது..

ஆயுள் வேத வையித்தியரான இவர் அனைத்து தரப்பினருடனும் இனிமையாக பழகும் உயரிய பண்பினை உடையவராக காணப்பட்டார். இவரிடமிருந்த கலையார்வம் காரணமாக கலைஞர் சதாசிவத்தின உதவியுடன் ஓரிரு நாடகங்ககளை உருவாக்கி நடித்து மேடையேற்றியிருந்தார் என்ற தகவல்கள் அறியப்பட்டுள்ளன. இவ்விதமாக அவரது முயற்சியில் உருவான „"„கருக்கு மட்டை" என்னும் நாடகம் பிரசித்தி பெற்ற நாடகமாக அறியப்படுகிறது.

# துறையூராள்

- துறையூர் காசி-

கற்றவர் வாழ்ந்த தூய நிலத் துறையூரில்

மாற்றவரும் போற்றுயர்த்தி புகழ் பாட

உற்ற கலைக் கல்வி வேறு

தொழில் துறையெல்லாம்

ஊரறிய உலகறிய

பெற்ற புகழ் வாசமுடை துறையூராள்

மடியதனில் நற்றமிழ் சொல்லெடுத்து

நான் படைத்த பாவிதனால்

பாடிக் கொடுக்கின்றேன் பாமாலை

பூமாலை சூடிக் கொடுத்தது போல்

கடலின் மணமும் புயலும் மழையும்

இரவின் இருளும் கதிரின் காச்சலும்

சேர்ந்து பதமே செய்த கடல் பாண்டியர் படைகளுக்கும்

வான் முட்டும் தென்னை பனை முகடுகளில்

விஞ்ஞானம் தோற்கின்ற

விந்தைகள் செய்கின்றார் அந்த

பனம் பொருள் உற்பத்தி தொழிலாளர் தோழர்களுக்கும்

என் பாட்டிலே முதல் வணக்கம்

தடம்புரளா கொள்கையுண்ட திடமுள்ள தோழர் படை

தீங்கொன்று ஊருக்கென்றால் திரண்டெழுந்து

மார்புயர்த்தி நிற்கின்ற மறவர் படை

அவர் ஆளுமையில் வாழ்கின்றாள்

துறையூராள் புகளேந்தி

கற்றவர் பெரியாருண்டு பழங்
கதை சொல்லும் கிழவர் கிழவியுண்டு
கல்வி கேள்வியில் உயர்ந்து நிற்கும்

இளையவர் பலராயுண்டு,
இவரிடையே அரும்பி வரும்
காதலுண்டு கடும் வீரமுண்டு அழகுண்டு
அறிவுண்டு ஆற்றலுண்டு மாறாத
கலை வளர்க்கும் தாகமுண்டு

ஊருயர உழைக்கின்ற நல்ல எண்ணமுண்டு
எண்திசையும் புகழெடுத்த வரலாறுண்டு
அந்த வரலாற்றுப் புகழ்பாட
துறையூரில் கவிஞருண்டு
அழகு தமிழாண்டு
அற்புதமாய் கவி படைக்கும்
வேலணையூர் தாசனுண்டு
பொருள் கனத்த்த புதுக்கவிதை
பலவாக்கி புகழேந்தி நிற்கின்ற
மௌன ஞானி என்றுமொரு கவிஞனுண்டு
முக்கனியில் சாற்றினிலே
முத்தமிழை முழுக்காட்டி
பத்திரமாய் கவி படைப்பான்
வேலணையூர் லிங்கனுண்டு
கனலுண்ட தமிழுண்ட துறையூர்
காசியவன் எழுத்துண்டு இவன் செய்யும்
எழிலான கவிதையுண்டு

பாட்டிசைப்பார் அவர் பயனிசைப்பார்

சந்ததி வழி வந்த மூத்தவர் ஞானம்

நிலத்தினில் வாழுது நாம் செய்த யோகம்

என்னூர் சிறப்பின்னும் எத்தனை சொல்வேன்

கடலாறும் கரையதனில் காலம்பல கண்டதாம்

எண்ணற்ற சிறுவர்க்கு எழுத்தறிவித்ததே அந்த

கல்விச்சாலையின் பெரும்பணி பாடவா

தேசமே வியந்த நம் நாடகக் கலைஞர்

சேனைகள் நிகழ்த்திய சாதனை சொல்லவா

உருக்கினை ஒத்த உறுதியுடைத்தார் நம்

இளையோர் படையின் வினைத்திறன் பாடவா

வினைத்திறன் போட்டிக் களத்தினில் இன்றும்

விருதுக் குவியலாய்

வென்று குவிக்கும் அவர் வீரம் பாடவா

ஊர்காத்து நின்றார்கள்

அந்த உத்தமரைப் பாடவா

இந்த காவல் கடவுளரை

என் கவிதையிலே பாடவா

இலைகளிலும் வேர்களிலும் இருக்கினற்

மருந்தென்ற மந்திரத்தை

உரைக்கிறது ஆயுர் வேதம் அந்த

உயர் வேதம் கற்றறிந்த

பெருந்தகைகள் தோன்றியது எங்கள் நிலம்

தீராத பிணியெல்லாம்

தீர்க்கின்றார் என்றறிந்து

திக்கெட்டும் இருந்து வந்தோர் நோயகற்றி

கெடி உயரப் புகழெடுத்த

மருந்தாளர் புகழ் பாடி மகிழ்ந்திடவா

வெளியூரார் வியந்து நிற்க

விதம் விதமாய் வீடமைத்து

விந்தை பல செய்கின்றார் என்னூர்

கட்டிடக்கலைஞர் புகழ் பாடவா அந்த

காவல் ஐயனைப்பாடவா

அழகு முருகனைப்பாடவா

என்பாட்டில் பாடுகிறேன் என்பாட்டில்

எனதருமை

நிலப்பெருமை பாடுகிறேன்

துணிச்சலின் களமான என்

துறையூரைப் பாடுகின்றேன்

மான்விழியார் அவர் மெல்லிடை யார் கூர்

வேலினையொத்த விழியுடையார்

காதலைத் தூண்டி ஊர்க் காளையரை

கோழைகளாக்கும் அழகுடையார்

எம்மூர்க்கன்னியர் விதமுரைத்தால்

என்கவிக்கழகு வந்திடுமே

தண்ணீர்க் குடமழகு

அந்த குடமேந்தும்

இடையழகு அந்தோ

இடையில் குடமேந்தி அவர்

நடக்கும் நடையழகு இதைப்

பாடும் என் தமிழுக்கோ தனியழகு

ஏழைகளாய் வாழ்ந்தாலும்

கோழைகளாய் வாழ்ந்ததில்லை ஆனாலும்

வாழும் பிளவுதனை ஏற்குதில்லை என் மனது

காலம் கடக்க விட்டோம்

கணக்கில் தவறு விட்டோம்

காயங்கள் ஆறினவே ஆனாலும்

வடுவழிந்து போய்விடுமா? அந்த

வடு வழிக்கவேண்டும் தம்பி

தீரா வசை போக்க வேண்டும்

உன்னால் முடியுமடா தம்பி

சீறிவரும் அலைகடலும் உன்

நெஞ்சுரத்தில் தோற்றுவிடும்

ஒரு வழியில் ஓரணியில்

சென்றிடலாம் துணிந்து விடு

ஒன்றுடபட்டால் உண்டே வாழ்வென

ஊன்றி உரைக்கின்றேன்

மாற்றம் வரவேண்டும்

நாம் மகிமை பெறவேண்டும்

ஏற்றம் பெற வேண்டும்

எழுந்திடு என் தோழா

வேற்றுமை வாழும் நிலைகளைத்தாண்டு

ஒற்றுமை என்ற தளத்தினை தேடு- நாளை

சந்நதி உன்னை மறவாதிருக்கும்



## சர்வோதய அமைப்பாளர் திரு மு.திருநாவுக்கரசு அவர்களும் துறையூரும்

தீவக சர்வோதய அமைப்பாளர் திரு மு.திருநாவுக்கரசு அவர்களையும் அவர் தான் சார்ந்த சர்வோதய் அமைப்பின் மூலமாக துறையூர் கிராமத்துக்கு அள்ளி வழங்கிய அளப்பரிய சேவைகளையும் துறையூர் வரலாற்றுக் குறிப்புக்கள் எழுதப்படும் இந்த ஆவணத்தில பதிவு செய்ய வேண்டியது கட்டாயமான கடமைப்பாடாகவே கருதுகின்றோம். பொது நலப்பணியில் சிரமதானத்தின் அவசியத்தை வலியுறுத்திவரும் அதன் சமூகப்பயன்பாடுகளை மெய்ப்பித்து காட்டியவருமான திரு மு திருநாவுக்கரசு அவர்கள் துறையூரின் பாலர் கல்வி வளர்ச்சி தொடர்பிலும் அவர்களுக்கான சத்துணவு வழங்கல் தொடரபிலும் ஆழமான அக்கறையுடன் செயல்பட்டார். துறையூரில் தான் சார்ந்த சர்வோதய அமைப்பினூடான கிராம முன்னேற்ற வேலைத்திட்டஙகளை செயல்படுத்தும் முன் தேவையாக. துறையூரில் அக்கால கட்டத்தில் சமூக அக்கறையுள்ளவர்களாக காணப்பட்ட துறையூர் மாதர்களை அணிதிரட்டி சர்வோதய தொண்டர்களாக அடையாளப்படுத்தினார். குறித்த மாதர் அணியில் பொன் இராசேஸ்வரி, கா.லோகேஸ்வரி, செ.மகேஸ்வரி ஆகியோர் முன்னணியில் நின்று செயல்பட்டார்கள், இவர்களுடன் துறையூர் மாதர் சங்க உறுப்பினர்களாக செயல்பட்டுவந்த வை.கமலாம்பிகை அ. மதிவதனா ஆ. சிவமலர் சு.வனிதாமணி செ. யோகாம்பாள் செ. திலகவதி செல்வி தயாநிதி((யோகம்மா மகள்)போன்ற யுவதிகளும் குறித்த தொண்டரணியில் இணைந்து செயல்பட்டனர் என்பதையும் அன்றைய கால கட்டத்தில் சமூக நலப்பணியில் முன்னின்ற துறையூர் இளைஞர்கள் பலரும் குறித்த மாதர் அணியினருக்கு தோள் கொடுத்து நின்றிருந்தனர் என்பன போன்ற தகவல்களையும் இங்கு பதிவு செய்வது அவசியமாகிறது –மேலும் சர்வோதய அமைப்பாளர் திரு. மு திருநாவுக்கரசு அவர்களால் துறையூரில் மேற்கொள்ளப்பட்ட நற்பணிகள் மறக்கப்பட முடியாதவை துறையூர் சமூகத்தில் குறிப்பாக துறையூர் மாதர்கள் மத்தியில் அவரது முற்போக்கான கருத்துக்கள் கணிசமான சாதகமான தாக்கத்தினை ஏற்படுத்தியிருந்தமைக்கான சாட்சியங்களும் அடையாளங்களும் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன அன்றைய கால கட்டத்தில் சமூகத்தில் காணப்பட்ட பெண்கள் மீதான குடும்ப வன்முறை பெண்களை சமூக நடவடிக்கைகளிலிருந்து விலக்கி வைத்திருந்த நிலைமைகள் ஒழிக்கப்படவேண்டுமென்பதில் அவர் ஆர்வம் காட்டியிருந்தார். வீதி அகல்வித்தலில் அவற்றை செப்பனிடலில் இருக்க்ககூடிய சமூக நலன் மற்றும் சிரமதானப்பணியின் முக்கியத்துவம் போன்றவற்றை இளையோர் மத்தியில் வலியுறுத்தியதுடன் நின்று விடாமல் அவை சார்ந்த சில வேலைத்திட்டங்களை நடைமுறைப்படுத்தி அவற்றின் அவசியத்தை மெய்ப்பித்து காட்டினார். மேலும் தனிமனித சேமிப்பு பழக்கத்தின் அவசியத்தை வலியுறுத்தினார். அனைத்து சமூக உறுப்பினருக்குமான வாசிப்பு பழக்கத்தின் கட்டாயத்தினை வலியுறுத்தியதுடன் அதற்கென நூல் நிலையம் ஒன்றினையும் ஏற்படுத்திக் கொடுத்திருந்தார். பாலர் கல்வியின் பால் மிகுந்த அக்கறை கொண்டிருந்தார் என்பதன் அடையாளமாக பாலர் கல்வி நிலையத்துக்கான கட்டிடம் ஒன்றையும் அமைத்து கொடுத்திருந்தார். குறித்த கட்டிடத்துக்கான காணியினை துறையூரின் மூத்த சமூக நலன் விரும்பி திரு மு.வினாசித்தம்பியின் மனைவி திருமதி சரஸ்வதி வினாசித்தம்பி தானமாக வழங்கியிருந்தார் என்ற

தகவலையும் இங்கு பதிவு செய்கின்றோம். பரந்த சேவை மனப்பான்மை கொண்ட திரு மு.திருநாவுக்கரசு அவர்கள் தான் சார்ந்த சர்வோதய அமைப்பினூடாக துறையூரில் ஆற்றிய பொது நலப்பணிகள் மறக்கப்பட முடியாதவை அப்பெருமகனை அவரது சேவையினூடாக நினைவு கூர்ந்து இங்கு பதிவு செய்வதில் மகிழ்ச்சியும் திருப்தியும் அடைகின்றோம்

(இக் கட்டுரையானது திருமதி எதிர்குலசிங்கம் இராசேஸ்வரி அவர்களால் எம்மிடம் கையளிக்கப்பட்ட கட்டுரையினை அடிப்படை வடிவத்துடன் சில திருத்தங்களுடனும் மெருகூட்டலுடனும் பிரசுரிக்கப்படுகின்றது)

## <u>துள்ளித் துடித்தத இளமைக்காலங்கள்</u>

சி

இராதகிருஷ்னன்

வெட்ட வெளியில்

விரிந்த மணல்பரப்புகளில்

விளையாட்டுத்திடலில்

விழுவதும் எழுவதும்

மீண்டும் விழுந்து எழுவதும்

ஓடி ஆடி உடலை வருத்தி

வேகும் வெய்யிலில்

மேனியை வேக வைத்து

வெற்றிகளை எமதாக்கி

உற்ற நிலப் பெருமைதனைன்னை

உயரப்பிடித்த நாட்கள் ------

துள்ளத் துடிக்கும் இளமைக்காலங்கள்

வெல்வதே குறியன்றி

வேறொன்றும் அறியோம்

வெற்றிக் கொடி நாட்ட

வீறு கொண்டெழுந்த நாட்கள்

தித்திக்கும் நெஞ்சுப் பதிவுகள்

வெந்துருகும் தார் தெருவில்

விளையாடிய என வெறுங்கால்கள்

அந்த கறுந் தார்த்தெருக்களை

முகரத் துடிக்கின்றன கால்கள்

மார்கழி மாதத்து சாமங்கள்

கூவும் கோழியினம் விழிக்காது

சங்கூதி மணி அடித்து

ஊர் சனத்தின் துயில் கலைத்தோம்

திருவெம்பாக்காலத்து பூசாரிகள் -நாங்கள்

வீபூதி வாங்கவென விழித்திருக்கும் ஊருசனம்

முடியாத இரவிலும் தேநீர் தந்து

உபசரிக்கும் உயர்ந்த உள்ளங்கள்

நினைவுகள் என்னுடன் கூடி வாழுது

நிதர்சனங்னளை மட்டும் காலம் விழுங்கிவிட்டு

**துறையூர் எனது அனுபவக் குறிப்பு** 

-அ.தேவதாசன்-

துறையூர் நான் துள்ளி விளையாடி தூங்கித் திரிந்த கிராமம். என்னை தூக்கி அணைத்து முத்தமிட்டு மகிழ்ந்த மண். வட பகுதியில் யாழ்ப்பாண நகருக்கு அண்மையில் படர்ந்திருக்கும் ஏழு தீவுகளில் பெரிய தீவானதும் யாழ்நகருக்கு அண்மையில் அமைந்துள்ள வேலணை எனும் ஊரின் தெற்குப்பகுதியில் உள்ள கிராமம் துறையூர் என்னும் எழில் கொண்ட கிராமம்.....

வேலணை ஊர்காவற்துறை உள்ளடக்கிய நிலப்பரப்பு அல்லைப்பிட்டி தொடக்கம் பருத்தி அடைப்பு வரை நீளமானதாகவும் அராலித்துறையிலிருந்து வேலணைத் துறைவரை அகன்றதுமான அந்த தேசத்தில் வேலணையை ஊடறுத்து புங்குடுதீவு செல்லும் பிரதான வீதியின் கிழக்கு பக்கம் 4 ஆம் வட்டாரமும் மேற்கு 6 ம் வட்டாரமுமாக பிரிக்கப்பட்ட மக்கள் செறிவாக வாழும் கிராமமே துறையூராகும்.

யாழ்ப்பாண சமூக அமைப்பு ஒரு சாதிய சமூக அமைப்பாக இருப்பதனால் வடபகுதியில் இருக்கும் கடற்கரையாவிலும் கடல் தொழிலை முதன்மைத் தொழிலாக கொண்டவர்களும் கடலை நம்பியே வாழ்க்கையை அமைத்தவர்களும் குறிப்பிட்ட சில சாதியக் குறியீடுகள் மூலமாகவே வாழ்ந்து வருகின்றனர். அல்லைப்பிட்டி செட்டிபுலம் துறையூர் கெட்டில் நெலிஞ்சிமுனை பருத்தியடைப்பு தம்பாட்டி போன்ற வேலணையை சுற்றியுள்ள கரையோரக் கிராமங்களில் வாழும் மக்கள் மீன்பிடியை பிரதான தொழிலாகக் கொண்ட அம்மக்கள் ஒவ்வொரு சாதியாக பிரிக்கப்பட்டுள்ளனர். அந்த வகையில் இன்றைய துறையூர் கிராமாம் சாதியத்தை அடையாளப்படுத்தியே அழைக்கப்பட்டு வந்தது .அன்றைய காலத்தில் அதாவது 19 ம் நூற்றாண்டு

காலங்களுக்கு முன்னரான காலப்பகுதியில் யாழ்ப்பாணத்தில் வாழும் சாதியினர் தங்கள் தங்களுக்கு என தனித்தனி தெய்வங்களை வழிபட்டு வந்தனர்.

இப்போதும் கூட அது தொடர்வதை நாம் காணலாம். துறையூர் மக்கள் ஐயனார் என்னும் கடவுளை தமது பிரதான கடவுளாக வழிபட்டு வந்துள்ளனர். அதனாலேயே முதன்முதலில் அக்கிராம மக்களால் ஐயனார் கோயில் உருவாக்கப்பட்டது. அதன் பேரிலேயே ஐயனார் வித்தியாசாலை என்னும் பாடசாலையையும் மற்றும் துறையூர் ஐயனார் சனசமூகநிலையம் ஐயனார் கலாமன்றம் ஐயனார் விளையாட்டுக் கழகம் போன்ற சமூக அமைப்புகளும் ஐயனார் பெயரை முதன்மைப்படுத்தியே அமைக்கப்பட்டுள்ளது. பின்னர் ஐயனார் கோயில் நிர்வாகத்தில் ஏற்பட்ட முரண்பாடுகள் காரணமாக ஐயனார் ஆலயத்திற்கு 20 மீற்றர் தூரத்திலேயே முருகன் கோயில் கட்டப்பட்டாலும் ஐயனார் என்னும் பெயர் அக்கிராமத்தின் அடையாளமாக காணப்படுகிறது.

மீன்பிடியே இந்த மக்களது முதன்மைத் தொழிலாக இருந்தாலும் கல்வியில் ஏற்பட்ட வளர்ச்சியும் சாதித்தொழில் செய்யக்கூடாது என்பதான எழுச்சியும் பலரை வைத்தியர்களாகவும் கட்டிடத்துறை நிபுணர்களாகவும் ஆசிரியர்களாகவும் மற்றும் அரசுதுறை பணியாளர்களாகவும் உயர்த்தியது. இந்த மாற்றங்கள் அச்சமூகத்தின் மறுமலர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியது. வேலணையிலேயே ஒரு வீரம் நிறைந்த சமூகமாக அது உருவானது. தமது சாதியைப் பற்றி மேல்சாதி என்று சொல்லப்படுபவர்கள் பாகுபாடு காட்டினாலோ அல்லது இழிவாகப்பேசினாலோ கொதித்தெழுந்து எதிரியின் கோட்டைக்குள்ளேயே சென்று சீறும் வீரர்களாக இருந்திருக்கிறார்கள். இதிலே குறிப்பிடத்தக்கவர்கள் வேலாயுதபிள்ளை என்னும் வாகன சாரதியாகும். இயல்பாகவே மிகவும் கோபம் கொண்டவரான அவர் சாதிய ரீதியாக சிறிய அவமானத்தைக் கூட தாங்கிக் கொள்ளாதவர். இவர் போன்று தமது இனத்தின் மானத்திற்காகவும் வளர்ச்சிக்காகவும் பல போராளிகள் போராடியுள்ளனர். அந்த மண்ணிற்கும் மக்களுக்கும் காவலர்களாக இருந்துள்ளனர். இதனால் பணபலம் கல்விப்பலம் உள்ள உயர்சாதியினர் எனச் சொல்லப்படுபவர்கள் கூட துறையூர்மக்களுடன் அணுகும் முறையானது மிகவும் கவனத்துடனேயே அணுகும் முறை ஏற்பட்டது. வேலணையிலும் சாதியக் கட்டமைப்பு மிகவும் இறுக்கமாகவே இன்றுவரை தொடர்கிறது. பல கிராமங்களைக் கொண்ட வேலணையில் கிராமத்தில் உள்ள குறிச்சிகளை தெரிந்து கொண்டாலே அவர்கள் என்ன சாதியை சேர்ந்தவர்கள் என்பதை மிக இலகுவாக அறிந்துவிடலாம். துறையூர் முக்கியர் என்னும் சாதியினருக்கு அடுத்ததாக பள்ளர், நளவர், கோவியர், தச்சர், வெள்ளாளர் என குறிச்சி குறிச்சியாக வாழும் சமூக அமைப்பில் முக்கியர், பள்ளர், நளவர் என்னும் சாதியைச் சேர்ந்தவர்கள் இதுவரை பெரும் பேதங்களோ, சண்டை சச்சரவுகளோ இல்லாமல் ஒரு சகோதரத்துவமாக வாழ்ந்தது பாராட்டப்படவேண்டிய ஒன்றாகும். அதன் வெளிப்பாடே நான் அந்தக் கிராமத்துக்குள் தத்தெடுத்த பிள்ளையாக வளர்ந்து வந்தேன். என்னுடன் பெரியவர், சிறியவர், ஆண், பெண் என்ற பேதமின்றி தங்கள் குடும்பத்தில் ஒருவனாகவே என்னைப்பார்த்தார்கள் எனச் சொல்வதைவிட வளர்த்தார்கள் என்றே சொல்லலாம். கிட்டத்தட்ட பத்து வயதிலிருந்தே அந்த மக்களோடும் மண்ணோடும் என்னைக் கரைக்க ஆரம்பித்து நான் இன்றுவரை அவர்களோடு முற்றுமுழுதாக கரைந்துவிட்டதாகவே கருதுகிறேன். “அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது!” என்ற வள்ளுவரின் வரிகளுக்கு சொந்தக்காரர்கள் அந்தக் கிராமத்தவர்கள். முதன் முதலில் பாடசாலை செல்லும்போது வழியிலே ஏற்பட்ட உறவு பின்னர் விளையாட்டு, கலையென தொடர்ந்தது. இதிலும் முக்கியத்துவம் வாய்ந்தது துறையூர் ஐயனார் கலாமன்றம் என்றே சொல்ல வேண்டும்... கலை, நாடகம் என்பது

அந்த மக்களினுடைய வாழ்வின் முக்கியமான பகுதியாக இருந்தது. எனக்கு அறிவு தெரிந்த காலத்திற்கு முன்னமே பல நாடக நடிகர்கள் உருவாகியிருந்தனர். சோமண்ணன், மணியண்ணன் போன்றோரின் நகைச்சுவை நாடகங்களை நான் சிறுவனாக அந்த மணல்தரையில் இருந்து பார்த்து ரசித்ததுண்டு.

கலாமன்றம் பல சுவாரசியமான நினைவுகளை மீட்டுத்தர வல்லது. துறையூரின் நாடக வளர்ச்சிக்கு எழிச்சியையும், பெருமையையும் ஏற்படுத்திக் கொடுத்தவர்கள் வரிசையில் முதன்மையானவர் எமது மதிப்புக்குரிய 'கலையன்பன்' என அழைக்கப்படும் இராசரெத்தினம் அவர்களாகும். ஐயனார் வித்தியாசாலை என்னும் பாடசாலையை உருவாக்கிய குடும்பத்தின் கார்த்திகேசு வாத்தியார், அவர் துணைவி வாத்தியாரம்மா இவர்கள் இருவரும் இறுதிவரை ஐயனார் வித்தியாசாலையில் கற்பித்தவர்கள். இவர்களது மூத்த மகனே நாங்கள் வாத்தி என அன்பாக அழைக்கும் கலையன்பன் இராசரெத்தினம். இவரது கற்பனைகளையும், கதைகளையும் மட்டும் நாடகத்திற்காக அர்ப்பணிக்கவில்லை. அவரது வாழ்க்கையையும், பொருளாதாரத்தையும் சேர்த்து இந் நாடகத்திற்காக அர்ப்பணித்தவர். பல நாடகங்கள் கலையன்பனால் உருவாக்கப்பட்டு நெறிப்படுத்தப்பட்டது. அவைகளில் பல வெற்றிகளையும், பரிசுகளையும், பாராட்டுகளையும் பெற்றுத்தந்த நாடகம் "உடன்பிறப்பு" என்னும் நாடகமே. இந் நாடகம் மேடையேற்ற எடுக்கப்பட்ட முயற்சியின் போதுதான் நான் அதில் இணைக்கப்பட்டேன். இந் நாடகத்தில் பெண்வேடம் ஏற்று நடிப்பவர் எனது மைத்துனன் மகேந்திரன் என்பவராகும். எனது பதினைந்தாவது வயதில் ஓவியத்தில் ஓரளவு ஈடுபாடு இருந்தபடியால் நாடகத்தின் விளம்பரங்களை எழுதுவதற்காக எனது மைத்துனன் மகேந்திரன் மூலம் அண்ணன் காசி அவர்களிடம் அறிமுகப்படுத்தப்பட்டேன். அவரது வீட்டின் ஓரமாக இருந்த ஓர் அறையில் வைத்து விளம்பரங்களை எழுதிக்கொண்டிருந்தபோது 'கட்அவுட்' கீறி காட்சிப்படுத்தினால் நன்றாக இருக்கும் எனத் தோன்றியது. அதற்கு காரணம் யாழ்ப்பாணத்தில் எம்.ஜி.ஆர், சிவாஜி படங்கள் வெளியிடும் போது பெரியளவிலான கட்டவுட்டுகள் ராணித்தியேட்டரிலும் ராஜா தியேட்டரில் போட்டி போட்டு வைப்பார்கள். அதன் அதன் தாக்கத்தினாலேயே நாடக விளம்பரத்தின்போது விளம்பரம் செய்யும் வாகனத்தில் பொருத்தக்கூடியது மாதிரி காசி அண்ணன் துப்பாக்கியோடு நிற்கும் காட்சியை ஓவியமாக்கி கட்டவுட் வெட்டினோம். அதிலிருந்து அந்த நாடகக் குழுவில் நானும் ஒரு அங்கமானேன். உடன்பிறப்பு நாடகம் வட பகுதியின் பல பாகங்களிலும் போட்டிக்காகவும் மற்றும் திருவிழா, கலைவிழா போன்ற நிகழ்வுக்காகவும் மேடையேற்றப்பட்டது. நாடகப்போட்டி நிகழ்வுகளின்போது நேரக்கட்டுப்பாடு அமைந்துள்ளமையால் அதற்கேற்றவாறு நாடகத்தை சுருக்கி நடாத்தவேண்டும். உடன்பிறப்பு நாடகத்தின் வெற்றிக்கு அக்கதையின் கரு, பாத்திர படைப்புக்கள், கதை என்பன போட்டிக்கு ஏற்றவாறு அமைந்திருந்தமையே காரணமாகும். முக்கிய கதாபாத்திரங்கள் நான்கு மட்டுமே இருந்தமையால் பல இடங்களுக்கும் சென்று மேடையேற்றும் வாய்ப்பு இலகுவாக கிடைத்தது. இதில் முக்கிய பாத்திரம் ஏற்று நடிக்கும் நால்வரில் அண்ணன் சிவராஜா என்பவரை நாம் குட்டிச் சிவாஜி என்று அழைப்போம். நடிகர் திலகத்தின் முகச்சாயல் மட்டுமின்றி முகபாவனை நடிப்பு, வசன உச்சரிப்பு போன்றவையும் நடிகர் திலகத்தையே நினைவூ ட்டும். இவரது நடிப்பு ஆற்றலும் திறமையும் போட்டி நாடகங்களில் இரண்டு தடவை சிறந்த நடிகருக்கான பரிசினை பெற்றுக்கொடுத்தது. இன்னுமொரு முக்கியமான நடிகர் அண்ணன் நாகராஜா. அவரது நடிப்பும் நடையும் வசன உச்சரிப்பும் நடிகவேள் எம்.ஆர்.ராதாவை நினைவுபடுத்தும். அடுத்து முக்கியமான பாத்திரம் அண்ணன் காசி அவர்கள். எப்போதுமே இலட்சிய பாத்திரங்களாகவே தேர்ந்தெடுத்து நடிப்பதுடன் தனித்திறமை கொண்ட நடிப்பாகவே அமையும். அத்துடன் கலையன்பனின் வலதுகரமாக இருந்து செயற்பட்டவர்அண்ணன் காசி. அடுத்து முக்கியமான பெண்

பாத்திரம் ஏற்று நடிக்கும் மகேந்திரன் இவரது நடிப்பு சௌகார் ஜானகியை நினைவுபடுத்தும். தானும் அழுது மற்றவர்களையும் அழ வைப்பதில் வல்லவர். போட்டியற்ற நிகழ்வு தவிர்ந்த மற்றய நிகழ்வுகளுக்கு **உடன் பிறப்பு** நாடகம் மேடையேற்றும்போது பாட்டு, சண்டை, நகைச்சுவை என்பன விசேடமாக புகுத்தப்படும். 1970 களின் பிற்பட்ட காலத்தில் வட பகுதியில் ஒரு நாடக மறுமலர்ச்சியே இடம்பெற்றது. வடக்கும், தெற்கும் என்னும் நாடகம் மக்கள் மத்தியில் மிகபெரிய வரவேற்பை பெற்றது. கதை நகர்ந்துசெல்லும் வேகம், பாடல்காட்சி, சண்டைக்காட்சி, கண் இமைக்கும் நேரத்தில் இழுத்து மூடப்படும் திரை போன்றன திரைப்படத்தைப் பார்க்கும் உணர்வை எல்லோருக்கும் ஏற்படுத்தியது. இதன் காரணமாக மற்றைய நாடகக் குழுவினரும் தங்களது நாடகங்களையும் அவ்வாறே மேடையேற்ற வேண்டிய நிலை ஏற்பட்டது. எமது நாடகத்திலும் இப்படியான முயற்சிகளை மேற்கொண்டோம். தமிழ் சினிமாவில் சில்க்சுமிதா, அனுராதா..... போன்றவர்கள் ஒரு பாடலுக்கு மட்டும் கவர்ச்சியாக வந்து நடித்துவிட்டு போவதைப்போல நாடகங்களிலும் இப்படியான பாடல்கள் இடம் பெற்றது. எமது நாடகங்களிலும் அப்படியொரு சில்க் தானாகவே வந்து இணைந்து கொண்டார். நவரெத்தினம் என்னும் பெயர் கொண்ட அவர் இயல்பாகவே நடை உடை பாவனையில் திருநங்கையைப்போலவே தோற்றமளிப்பார். அவர் உண்மையிலேயே ஒரு திருநங்கைதான் என்பதை அந்த நேரத்தில் எங்களால் புரிந்து கொள்ளும் அறிவு இருக்கவில்லை. ஒரு பாடல் காட்சிக்கு குறைந்தது மூன்று நான்கு உடைகளை மாற்றி விடுவார். அதற்கான ஆயத்தங்களை தானே தயாரித்து வைத்திருப்பார். எமது நாடகம் ஆரம்பிப்பதற்கு மூன்று மணி நேரம் இருந்தால் கூட தன்னை அலங்கரித்து தயாராகிவிடுவார். பின்னாளில் இவரை சமூக சீர்கேட்டாளர்கள் பட்டியலில் தமிழ் ஈழம் கேட்ட ஆயுததாரிகளால் கொல்லப்பட்டார். நகைச்சுவைக் காட்சிகளில் தனது நடிப்பால் ரசிகர்களைக் அதிரவைக்கும் புயலாக நண்பன் தங்கம் செற்படுவான். அவருடன் சோமண்ணன் அவர்களும் பல நாடகங்களில் பங்கு கொண்டுள்ளார். எமது நடிகர்கள் சிலர் நடிப்பினில் திறமைசாலிகளாக இருந்தாலும் மது அருந்துவதிலும் திறமைசாலிகளாகவே இருந்தனர். அதிகமான மது அருந்திவிட்டால் வசனங்களை மறந்துவிடுவர். இதனால் சில நடிகர்கள் மீது நாடகம் முடியும்வரை மிகவும் விழிப்பாக இருக்கவேண்டும். மது அருந்தும் நடிகர்களை கண் காணிப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்து செயல்படுபவர் நண்பன் தங்கம் அவர்கள். ஒண்டுக்கு போனால்கூட தங்கம் பின்னால் போவான். ‘தங்கம் மூத்திரம் பெய்யக்கூட விடுறானில்லை’ என்றவாறு அவர்கள் திட்டுவார்கள். திட்டுவாங்கினாலும் தங்கம் கடமையிலே கவனம்.......

எமது நாடகத்தில் பிரத்தியேகமான காட்சி என்பது சண்டைக்காட்சியாகவே இருக்கும் மிகவும் திகிலானதும், அபாயகரமானதுவாகவும் இருக்கும். வடக்கும் தெற்கும் போன்ற நாடகங்களில் சண்டைக் காட்சிகள் பயிற்சி எடுக்கப்பட்டு சர்க்கஸ் போல இருக்கும். ஆனால் எமது நாடகத்தில் வில்லன் எப்போது என்ன செய்வார் என்பது கதாநாயகனுக்கு தெரியாது. ஆரம்பத்தில் சம்பந்தன் என்னும் சகோதரன் சண்டைக்காட்சிகளில் வந்து திகிலூட்டுவார். பக்க வாத்தியக்காரர் பயன்படுத்தும் கதிரைகள் தொடக்கம் மேடையில் இருக்கும் எல்லாமே வீசப்படும். அவர் போலவே செல்வராஜா என்னும் நடிகன் பின்னாளில் அறிமுகமானார். அவர் சம்பந்தனை விட முரட்டுத்தனமாக மேசையைக் கூட விட்டுவைக்கமாட்டார். இப்படி பல சமயங்களில் உண்மையான பெரிய இரத்த காயங்களுடன் அண்ணன் சிவராஜா நாடகம் முடியும் வரை நடித்த சம்பவங்கள் உண்டு.

நாடக மேடையில் குறைந்தது ஐந்துபேர் நடித்தாலும் நாடகத்துக்கு வெளியில் நாடக கொட்டகைக்குள் குறைந்தது நான்கு பேராவது கடுமையாக உழைக்க வேண்டும். சீன் இழுப்பது, நடிப்பவர்களுக்கு தேவையான பொருட்களை ஆயத்தப்படுத்துவது இப்படி பல வேலைகளை

பொறுப்புடனும், அதேநேரம் வேகமாவும் செய்யவேண்டும். இவ் வேலைகளில் நானும் நண்பன் தங்கமும் சிரத்தையுடன் செயல்பட்டிருக்கிறோம். இன்னுமொரு முக்கியமான நண்பன் பாலசிங்கம். இவர்தான் துப்பாக்கி செய்வது, சுடும் காட்சிக்கு வெடி கொழுத்துவது, சுடப்படுபவருக்கு இரத்தம் வருவதற்காக சிவப்பு மையை கரைத்து பலூனுக்குள் திணித்து தயார் நிலையில் வைப்பது, பாடல் காட்சிகளுக்கு பிரத்தியேகமான சுழன்று வரும் கட்டில் அமைப்பது இப்படி பல பணிகளை தானே திட்டமிட்டு செய்து தருபவர். ஆரம்பத்தில் துப்பாக்கிச் சூட்டுக் காட்சிக்கு வெடிகொழுத்திப் போடும் போது இரண்டுவெடியும் சீறிவிட்டு புகைந்துவிட்டது. சத்தம் வெளியில் வரவில்லை. அந்தக்காட்சி பெரும் ஏமாற்றத்தைக் கொடுத்தது. பின்னாளில் வெடியை நம்பாமல் நண்பன் பாலசிங்கம் தானே வெடி மருந்தை வாங்கி மருந்தைபோட்டு வெடிக்கவைக்கும் கருவிகளை உருவாக்கி அந்தக்காட்சிக்கு உயிரோட்டம் கொடுத்தார். நாடகம் நடைபெறும் அன்றைய தினம் தவிர்க்க முடியாத காரணங்களால் சில நடிகர்கள் பங்கு கொள்ள முடியாதுவிடும். அத்தைகைய நேரங்களில் நண்பன் தங்கம் பல மேடைகளில் வில்லன் பாத்திரம் ஏற்றும், நான் பெண் வேடம் ஏற்றும் நடித்த சம்பவங்களும் உண்டு. நாடகம் நடித்த காலகட்டங்களில் பல சுவாரசியமான, இன்னும் மனதுக்குள் இனிக்கும் சம்பவங்கள் ஏராளம் உண்டு. இந்நாடக மன்றம் பல கலைஞர்களை வாரிசாக உருவாக்கிவிட்டுள்ளது. இவர்களில் குமார், பொன்னன், தவநாயகம் போன்றோர் பல நாடகங்களில் நடித்து துறையூருக்கு பெருமை சேர்த்தவர்கள். கலாமன்றத்தின் சார்பில் யாருக்காக, யார் குற்றவாளிகள், உரிமைக்காக உடன் பிறப்பு, பாசப்பறவைகள், நீதிக்குத் தலைவணங்கு போன்ற பல நாடகங்கள் மேடையேற்றப்பட்டன. இதில் பல நாடகங்கள் கலையன்பன் கைவண்ணத்தில் உருவானது. இன்னுமொரு முக்கியமான சம்பவத்தையும் இதில் சொல்லியே ஆகவேண்டும். எமது துறையூரிலும் நாங்கள் நாடகவிழா நடத்துவதுண்டு, குறைந்தது இரண்டு நாடகங்களும், வேறு ஊர்களில் இருந்து சில நாடகங்களையும் இணைத்து கோலாகலமான நாடக விழாவை நடத்துவோம். நாடகம் பார்ப்பதற்கு நுளைவுக் கட்டணமும் விதிக்கப்படும். எமக்கு மேடைபோட்டுத் தருவதில் வல்லவர் குண்டு மணியம் என அழைக்கப்படும் ஒரு சகோதரர். இவர் ஒரு பனையின் பாதியை ஒத்திருப்பார். கொட்டுப்பனை தறிப்பதில் இருந்து முழு மேடையையும் அமைப்பதற்கு மிகவும் ஈடுபாட்டுடன் முழுமூச்சாக பணியாற்றுவார். இவருக்கு உதவியாக நாங்களும் வீடுவிடாக மரங்கள், தட்டிகள், பலகைகள் என்பன தூக்கிவந்து உதவி செய்வோம். நாடகவிழா மிகவும் நேர்த்தியாக நடத்தி முடிக்கப்படும். திருப்பம் இனிமேல்தான் உண்டு. நான், தங்கம் போன்றவர்கள் பாடசாலை சென்று வருபவர்கள். எங்களிடம் பணம் இருக்காது. நடிகர்களும் அப்படித்தான், மீன்பிடித் தொழில் செய்பவர்களாக இருந்தாலும் பணம் சம்பாதிக்கத் தெரியாதவர்கள். ஒரு நாளைக்கு ஐம்பது ரூபாவுக்கு மீன்பிடித்து விட்டால் (அந்தக்காலத்தில்) ஐந்து நாளைக்கு கடற்கரைப் பக்கம் போகாதவர்கள். அதிகமான கலைஞர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள்...... நாடகம் முடிந்ததும் சின்.. லைற், இஞ்சின், மேக்கப், பின்னணி இசை, வாகன வாடகை, இவைகளுக்கான கொடுப்பனவு கொடுத்து முடிக்கவேண்டும். நாடகம் முடிந்து மேடை களட்டும்வரை என்போன்ற பலர் சகல வேலைகளையும் செய்து முடித்துவிட்டு காலை ஏழு மணியென்றால் பள்ளிக்கூடம் ஓடி விடுவோம். மற்றவர்களும் கலைந்துவிடுவார்கள். இதுக்குள் மாட்டிக்கொள்பவர் நாடகத்தின் இயக்குனர் கலையன்பன் இராசரெத்தினம்தான். டிக்கற் வித்த பணம் கணக்குகள் முடிப்பதற்கு அரைவாசிகூட தேறாது. கலையன்பனிடமும் பணம் இருக்காது. ஆனால் யாரிடமாவது கடன்பட்டோ, தனது தாய் தந்தையரிடம் உள்ள நகையை களவாடி அடகு வைத்தோ வித்தோ சகல கொடுப்பனவுகளையும் கொடுத்து முடிப்பார். உண்மையிலேயே கலையன்பன் இராசரெத்தினம் கலைக்காக செய்த அர்ப்பணிப்பையும், தியாகத்தையும் நினைக்கும் போது நின்று அவரை வணங்கிவிட்டு செல்கிறது மனது. என்றென்றும் நினைவில் வைத்திருக்க வேண்டிய ஒரு நல்ல மனிதன்.

**துறையூர் உருவான கதை.**

ஊருக்க வெளியில் அதாவது யாழ்ப்பாணத்தின் பல பகுதிகளில் நாடகத்தை மேடையேற்ற விரும்பியதும் நாடக மன்றத்தின் பெயர் பற்றி தீர்மானிக்கப்பட்டது. நாடகத்தை நடாத்துபவர்கள் அந்நாடகத்தை விளம்பரப்படுத்தும் போது நாடகத்தின் பெயர் ஊர் எந்த நாடகமன்றம் என்பன போன்ற விபரங்களை தெரிவிக்க வேண்டும். அந்த வகையில் நாடக மன்றத்தின் பெயர் பரிசீலிக்கப்பட்டபோது ஐயனார் கலாமன்றம் என்ற பெயர் முழுமையானதாக இல்லை. வேலணை ஐயனார் கலாமன்றமா? வேலணை தெற்கு ஐயனார் கலாமன்றமா? இப்படியான பல கேள்விகள் உண்டாகின. இன்னொரு பக்கத்தில் துறையூரை துறையூர் வேலணைதுறை எனவும், வேலணை கடற்கரை யெனவும் சாதியத்தை அடையாளப்படுத்தியும் அழைக்கப்பட்டு வந்தது. இப்பெயர் சமூகத்தில் பலருக்கு அருவருப்பானதாகவும் ஒரு இழிவுப் பெயராகவும் இருந்ததனால் ஐயனார் கலாமன்றம் என்றும் பெயருக்கு முன்னால் எமது ஊரை எப்படி அடையாளப்படுத்துவது என்பது பெரும் கேள்வியாயிற்று. இக்கேள்வியின் பதிலாக காசி, அவர்கள் மனதில் இருந்து பிறந்ததே துறையூர் . துறையூர் என்னும் இப்பெயர் வேலணை மட்டுமின்றி இலங்கை முழுக்கவும் பரவும்படி செய்ததில் அண்ணன் காசி, கலையன்பன் அவர்களுக்கு சமூகம் நன்றி கூற கடமைப்பட்டுள்ளது.

விளையாட்டுக்கழகம்.

துறையூர் ஐயனார் விளையாட்டுக்கழகம் உதைபந்தாட்டம், கரபந்தாட்டம், கிளித்தட்டு போன்ற பல விளையாட்டுகளில் தமது ஈடுபாட்டைக் காட்டினாலும் உதைபந்தாட்டம் வேலணையில் மட்டுமின்றி மற்றய ஊர்களிலும் பங்குகொண்டு வெற்றியையும் ஈட்டியுள்ளது. இப்போதும் கூட உதைபந்தாட்டத்தின் வீரத்தை தொடர்ந்து பல வெற்றியின் மூலம் தக்கவைத்து வருகின்றனர். இருப்பினும் கலாமன்றம் அளவுக்கு பெயர் எடுக்கவில்லையென்றே சொல்லலாம். அதற்கு ஒரு முக்கிய காரணமும் உண்டு. நாடகத்திற்கு அதிகமான தொகையாக ஒரு பத்துபேர் போதும். ஆனால் உதைபந்தாட்டத்திற்கு முறையான பயிற்சி எடுப்பதானால் குறைந்தது இருபக்கமும் இருபத்திரெண்டு வீரர்கள் தேவைப்படும். துறையூரில் நிறையவே இளைஞர்கள் இருந்தாலும் இத்துறைக்கு ஈடுபாட்டுடன் பயிற்சி எடுக்க வருபவர்கள் குறைவாகவே காணப்பட்டனர். பாடசாலை செல்பவர்கள் மாலை ஐந்து மணிக்குப் பிறகே மைதானம் வர நேரிடும். மற்ற தொழில் செய்பவர்களுக்கு அதிகமான மாலைநேரம் சரியாக அமையாது. அதிலும் வாசிகசாலைக்கு முன்னுக்கு தண்ணீர் பைப்பு பூட்டினபிறகு, பெடியள் பைப்பு மூடின பிறகுதான் மைதானம் வருவாங்கள். ஏன் எண்டு நான் விளக்கமாக சொல்லத்தேவையில்லை. .. மாலை ஐந்தரை மணிக்குப்பிறகு பூட்டி பறிச்சு விளையாட வெளிக்கிட்டால் முக்கால் மணித்தியாலத்திலேயே பொழுது சாய்ந்துவிடும். இதனால் சரியான பயிற்சி எடுப்பதில்லை. இருப்பினும் ஞானம், சிறி, ராதா போன்ற நல்ல வீரர்களையும் விளையாட்டுக்கழகம் உருவாக்கித் தந்தது. துறையூரின் இன்னுமொரு சிறப்பான விடயம் என்னவெனில் இல்ல விளையாட்டுப் போட்டி:- இப்போட்டி பெரிய பாடசாலைகளில் மட்டுமே நடாத்தி வருவது வழக்கம். பாடசாலை தவிர்ந்து எமது துறையூர்

கிராமம் மட்டுமே கிராமத்தில் உள்ள பெரியவர்கள், சிறியவர்கள் எனப்பலரையும் உள்வாங்கி மிகவும் பிரமாண்டமான முறையில் இல்ல விளையாட்டுப்போட்டியினை நடாத்தியது. இப்போதும் நடாத்தப்படுகிறது என்பது மகிழ்ச்சியை தருகிறது. சேரன், சோழன், பாண்டியன் என்னும் பெயர்களைக் கொண்டு மூன்று இல்லங்களாக பிரிக்கப்பட்டு சேரன் இல்லத்திற்கு சந்திரன் அண்ணனும் சோழன் இல்லத்திற்கு வேவியும், பாண்டியன் இல்லத்திற்கு தியாகு அண்ணன் அவர்களும் தலைமை ஏற்று வழி நடத்தினர். நூறு மீற்றர் ஓட்டம் இருநூறு மீற்றர் ஓட்டம், மரதன் ஓட்டம், உயரம் பாய்தல், நீளம் பாய்தல், குண்டெறிதல், படகு ஓட்டம், சயிக்கிள் ஓட்டம், கயிறு இழுத்தல், சறுக்குமரம் ஏறுதல், இல்லங்களுக்கான அலங்காரம், வினோத உடை போட்டி இப்படியாக பல போட்டிகள் நடாத்தப்பட்டு பரிசில்களும் வழங்கப்பட்டன. இதில் நான் வேவியின் தலைமையிலான சோழன் இல்லத்தில் இணைக்கப்பட்டேன். கிட்டத்தட்ட ஒரு வாரம் துறையூர் கிராமமே திருவிழாக்கோலமாக காணப்படும். முழுக்கிராமமே வந்து பங்கு கொள்வது மிகவும் சிறப்பானதும், மகிழ்ச்சியானதுமான தருணமாகும்.

சமூக முன்னேற்றத்திற்காகவும் வளர்ச்சிக்காகவும் பல்தரப்பட்ட சமூக அமைப்புக்கள் இயங்கிவந்தன. சனசமூக நிலையம், நாடகமன்றம், விளையாட்டுத்துறை, நல் ஒழுக்க வாலிபர் இயக்கம், சர்வோதயம் போன்ற பல அமைப்புக்களின் மூலம் என் போன்ற பல இளைஞர்கள் அறிவியல் அளவிலும் சமூக அக்கறை அளவிலும் பயிற்றுவிக்கப்பட்டார்கள். என் போன்ற இளைஞர்கள் பலர் பாடசாலையில் கற்றுக்கொண்டதைவிட இச் சமூக அமைப்புகளின் ஊடாக அறிவைத் தேடிக்கொண்டோம் என்பதே பரிபூரணமான உண்மையாகும். இவ் அமைப்புக்களில் பலரது பங்களிப்பு இருந்தாலும் நல்லொழுக்க வாலிபர் இயக்கம், சர்வோதயம் போன்றவை நடாத்தும் பலதரப்பட்ட கருத்தரங்குகள், கல்வித் தேடல்கள் யாவற்றையும் மிகவும் சமூக பொறுப்புடன் ஒழுங்கு செய்து பலரை வளர்த்துவிட்டவர் அண்ணன் காசி அவர்கள். வளர்க்கப்பட்டவர்களில் நானும் ஒருவன். எனது பொது வாழ்வு மட்டுமின்றி எனது சொந்த வாழ்விலும் ஒளி ஏற்றி வைத்தவர் அண்ணன் காசி அவர்கள். சர்வோதயம் போன்ற அமைப்புக்களில் துறையூரில் மகேஸ்வரி, லோகேஸ்வரி போன்றவர்கள் உட்படபல பெண்கள் பங்கு கொண்டாலும் அவற்றின் பொறுப்பாளராக சமூக அர்ப்பணிப்புடன் செயல்பட்டவர் ராஜேஸ்வரி அக்கா என்பவராகும்.

உண்மையும், உழைப்பும், அன்பும், ஒற்றுமையின் இலக்கணமாக வேலணையின் முன்மாதிரி கிராமமாக செயற்பட்டு வந்த துறையூர், நாட்டில் ஏற்பட்ட யுத்தம் காரணமாக பல செயற்பாடுகளை இழந்துவிட்டது. இப்போது யுத்தம் முடிந்த பின்னும் பல செயற்பாடுகள் பின் தள்ளப்பட்டே வருகின்றது. சகலருக்கும் வசதியான சனசமூக நிலையம் உருவாகவில்லை என்பது மனதை உறுத்தும் விடயமாக உள்ளது. சமூக ஒற்றுமையையை கட்டியெழுப்பும் தூணாக இருக்கக் கூடியது சனசமூக நிலையம் மட்டுமே. 1980 இற்கு முற்பட்ட காலத்தில் கோயில் பாடசாலை தவிர்ந்த மற்றைய பல சமூக அமைப்புகளும் சனசமூக நிலையத்தின் தலைமைக்கு கீழேயே செயற்பட்டு வந்தன. ஆனால் இப்போது அந்தச் சூழல் இல்லையென்பது சமூக ஒற்றுமை இன்மையை வெளிக்காட்டுகிறது. சமூகத்தில் இருக்கும் பெரியவர்கள் மற்றும் இளைஞர்கள் கோயிலுக்கு கொடுக்கும் முக்கியத்துவம் சமூக முன்னேற்ற அமைப்புகளுக்கு கொடுக்கப்படவில்லையா? என்கின்ற ஐயமும் எழுகிறது. உண்மை கசப்பானதாக இருப்பினும் கோயில்கள் நமது மக்களை சாதிய ரீதியாகவும், கிராம ரீதியாகவும், ஆண், பெண் வழிச்சமூக ரீதியாகவும் ஏதோ ஒரு வகையில் பிரித்து வைத்திருக்கிறது என்பதை ஏற்றுக்கொண்டே ஆகவேண்டும். நான் கோயில் வேண்டாம் என்று சொல்லவில்லை. அது நடைமுறைக்கு சாத்தியமும் இல்லை. கோயிலுக்கு கொடுக்கும் முனைப்பைப்போல மற்றைய சமூக மேம்பாட்டு

அமைப்புகளுக்கும் எமது பங்களிப்பை செய்தால் மட்டுமே அச்சமூகம் அறிவில் முன்னேறிய சமூகமாக கருதப்படும். உலகத்திலேயே மிகவும் கடினமானதும் அபாயகரமானதுமான தொழில் கடல் தொழில். பனை ஏறுபவனைக் காணவில்லையெனில் பனை மரத்துக்குக் கீழே அவனைக் காணலாம். கடல் தொழில் செய்பவன் கடலில் சென்றால் திரும்ப வந்தால் மட்டுமே காணலாம். உயிரைப் பணயம் வைத்து உழைக்கும் அந்த மக்களின் பணம் அவர்கள் வாழ்வின் மேம்பாட்டுக்காக பயன்படுத்தப்பட வேண்டும். அவர்களது உழைப்பை கோயில்களுக்குள் மட்டும் முடக்குவது அறிவாகாது. அந்த அறிவைக் கொடுப்பது நிட்சயமாக சனசமூக நிலையங்கள் போன்ற சமூக இயக்கங்கள்தான். இளைஞர்கள் விழிப்புணர்ச்சியுடன் செயல்ப்பட்டு சமூக இயக்கங்களை பலப்படுத்தவும் மக்களின் வாழ்வை மேம்படுத்தவும் முன்வர வேண்டும். இது என்னுடைய ஆதங்கம் மட்டுமல்ல புலத்தில் வாழும் பலரது உணர்வும், புலம் பெயர்ந்து வாழும் சமூக அக்கறையுள்ளவர்களது ஆதங்கமும் இதுவாகும்.

வாழ்க துறையூர் ....வளர்க அதன் பெருமை...

என்றென்றும் உங்களின்

-தேவதாசன்-

## <u>சிறகடிக்கும் நினைவுகள் .......</u>

கனடாவிலிருந்து நா. சுப்பிரமணியம்

நான்கு வயதிற்கு உட்பட்ட வாழ்கையை ஞாபகப்படுத்திக் கொள்ளக்கூடியவர்கள் சிறந்த ஞாபக சக்தி உடையவர்கள். .இந்த அதி ஞாபக சக்தி மிக்கவர்கள் தமது 3 மூன்று வயதின் கால நிகழ்வுகளை மீட்டுத்தர வல்லவர்களாக இருப்பார்கள் என மனோதத்துவ விஞ்ஞானிகள் கூறுகின்றார்கள். நானோ ஞாபக சக்தி மிகக் குறைந்தவன் இருந்த போதிலும் கூடிய வரை இருக்க்ககூடிய நினைவூட்டல் சக்திகளை ஒருமைப்படுத்தி அந்த பசுமையான காலத்தினுள் நுழைய முயலுகின்றேன்

பிறந்த ஊர் வேலணை .வேலணை தெற்கு என விலாசமிடப்பட்டு கடிதங்கள் வருவதுண்டு . இப்பொழுது நான் பிறந்து வளர்ந்த வேலணையின் தென் பகுதி துறையூர் என்ற அழகான பெயரால் அழைக்கப்படுகின்றது.

பரந்து விரிந்து கிடக்கும் வேலணை என்னும் கிராமத்தைச் அண்மித்த முப்புறத்திலும் கடலலை ஆர்ப்பரிக்க நடுவில் உள்ள நிலத்திடலில் விரிந்து பரந்து கிடக்கும் அழகான கிராமம் வேலணை.

ஒரு காலத்தில் அந்தக் கடல் பொங்கி எழுந்து கரையேறி அழிக்க முற்பட்டபோது இந்துக் கடவுளான வேலவன் தன் வேல் கொண்டு அந்தக் கடலேற்றத்தினை தடுத்துக் கொண்டதனால் வேலணை என்னும் பெயர் வந்ததோ என்ற என்னுள்ளிருந்த ஒரு கற்பனையினை மேல் எடுத்து கவிதை பாடிய எனது சிறு வயது பருவ காலம் என் நினைவுகளில் நிழலாக வந்து நிற்கிறது. அந்த நினைவு உள்ளத்தில் ஒரு வகை உவகையினை தருவதாக உணர்கின்றேன் தீவகத்தினையும் யாழ்ப்பாணத்தையும் இணைக்கும் அந்த கடல் பாதையினை பண்ணை என்று அழைப்பார்கள். அப்பொழுது பாலம் போடப்படாதிருந்த காலம் மரப்பாதையிலும் தோணிகளிலும்தான் கடல் வழிப் போக்கு வரத்து நடந்து கொண்டிருந்தது. ஒரு நாளில் இரண்டு சினிமாப்படம் பார்பபேன் இரவு நேர காட்சி முடிந்து கடேசி பஸ் பிடித்து ஊர் வந்து சேர்ந்திடுவேன்..

நான் பஸ்ஸில் இருந்து இறங்கியதும் தரிப்பிடத்துக்கு மிக அண்மையிலுள்ள செல்லமுத்து மாமியின் கடையில் எனது தாயார் லாந்தருடன் (லாம்பு) எனக்காக காத்திருப்பாள். இதைப்பார்க்கும் உறவுகள் அம்மாவின் அக்கறை கண்டு சிரித்துக் கொள்வார்கள், தம்பி இருட்டில் வந்து சேரமாட்டான் என்று வெளிச்சம் கொண்டு வந்தேன் என்பார். நெஞ்சினை நெகிழ வைக்கும் என தாயாரின் அன்பை நினைக்கும்போது கண்கள் குளமாகின்றன.

ஐயனார் வித்தியாசாலையில் நான் ஆரம்ப கல்வி பயின்ற காலம் நாதன் ஆசிரியர்தான் தலைமை ஆசிரியராக பணியாற்றினார். நாகநாதி வாத்தியார் என்றே எம்மவர் அவரை அழைத்திடுவர். மணல் வளவில் நாங்கள் தினமும் மாலை நேரத்தில் கிளித்தட்டு (தாட்சி) விளையாடுவோம். விளையாட்டிடத்துக்கு சிறிது தூரத்தே உள்ள பிரதான வீதியால் நாகநாதி வாத்தியார் வருவதைக் கண்டதும் விளையாட்டை இடை நிறுத்திவிட்டு ஓடி ஒளிந்திடுவோம். சில வேளைகளில் கை தட்டி கூப்பிட்டு பாட சாலையில் சில வேலைகள் செய்ய வேண்டுமென கூறி எம்மை அழைத்து சென்று விடுவார். .இப்படியாக என்னுள் புதையுண்டு கிடக்கும் சுவாரஷ்யமான நினைவுப் பொதிகள் ஏராளம்

நானும் நண்பன் சண்முகலிங்கம் தம்பி காசிலிங்கம் ஆகிய மூவரும் மாணவர்களாக இருந்த கால கட்டத்தில் கோவில் பூந்தோடடத்துக்கு தண்ணீர் ஊற்றும் பணியினை செய்து வந்தோம் இதற்காக முதல் நாள் இரவே கோவில் வசந்த மண்டபத்தில் படித்து விட்டு தூங்குவது வழக்கம். மறுநாள் அதிகாலை அப்போது கோவில் ஐயராக பணி புரிந்த சுப்பையா என்றழைக்கப்படுகின்ற ஐயர் எங்களை எழுப்பி தண்ணீர் ஊற்றும் பணியினை செய்விப்பார் நாங்களும் ஆர்வத்துடன் அந்த நற்பணியினை செய்வோம் பூஞ்செடிகள் அனைத்தும் சிலிர்ப்படையும் வரையில் தண்ணீரை ஊற்றுவோம். அந்தப் பூந்தோட்டம் தண்ணீரில் நிறைந்திருக்கும் போது அந்த கோவில் ஐயரின் முகத்தில் மகிழ்ச்சிப் பூக்கள் பூத்திருப்பதை கண்டு ஆச்சரியப்படுவோம். அவரது ஆனந்தத்தில் எங்களது பங்கு இருந்ததை எண்ணி திருப்தியடைவோம். வேலை முடிந்ததும் ஐயர் பழைய சோறு கறியினை குழைத்து குழையலாக தருவார் ஆகா அதன் சுவையோ அபாரம். அந்த அற்புதமான காலங்களை எண்ணிப்பார்க்கின்ற போது மனதுக்குள் மகிழ்ச்சி பெருக்கெடுக்கின்றது

1984 மார்கழியில் பிறந்த மண்ணை மட்டுமல்ல தாய் மண்ணையும் நீங்கி வெளி நாடு வந்து விட்டேன். பின்னர் 2003 ல் எனது கிராமத்துக்கு போனபோது எனது சிறு குடிசை வீட்டுக்கு போகும் வழி கூட தெளிவாக தெரியவில்லை. அத்தனை மாற்றங்கள் குடிசை வீடுகள் எல்லாம் ஓடு வேய்ந்த வீடுகளாய் எழுந்து நின்றிருக்கக் கண்டு உள்ளம் மகிழ்ந்தேன். வீட்டுக்கு வீடு குழாய் நீர் வசதிகள் கண்டு வியப்படைந்தேன். 2009ல் ஐயனார் கோவிலுக்குச் சென்றேன் வானுயர எழுந்து

நின்ற மன் கோபுரத்தின் தோற்றம் கண்டும் வளம் நிறைந்த சூழல் கண்டும் பெருமிதம் அடைந்தேன். ஐயனார் முன் நின்று அழுதுவிட்டேன் அது ஆனந்தக் கண்ணீர்.

உயர் கல்வி கற்றவரும் மற்றவர் பலரும் ஊர் விட்டகன்று வெளிநாடு சென்றுவிட்டனர் அவர்கள் தமது தாய் மண்ணை மறவாதிருக்க வேண்டும் அதுமாத்திரமல்ல நடந்து ஓடி விளையாடிய அந்த துறையூரின் முன்னேற்றத்துக்கு இயலுமான பங்களிப்பினை தர முன் வர வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். நம் அன்னையின் மடியில் அமர்ந்திருக்கும் பாக்கியமோ நமக்கில்லை. ஆனாலும் நமது மண்ணை மறந்திருக்காமல் அதன் உயர்வுக்காக உழைத்திடுவோம்.

**<u>நான் பிறந்த நிலம்</u>** 

செல்லத்துரை இராமலிங்கம்

எம்மை ஈன்றெடுத்த எனது பெற்றோருக்கும் நான் தவழ்நது வளர்ந்து நடந்து திரிந்த எனது ஆசைக்குரிய துறையூர் கிராமத்திற்கும் தலை தாழ்த்தி வணங்குகின்றேன். நான் துள்ளி விளையாடி தோழரோடு சுற்றித்திரிந்த அந்த அழகு நிலத்தை எண்ணிப்பார்க்கின்றேன்.

நீல நிறப் பாயொன்றை விரித்தாற் போல் நிண்ட கடற்பரப்பு. கிராமத்தின் முகப்பரப்பு முழுவதையும் அழகூட்டி நிற்கும் இயற்கையின் அவதாரங்கள் - அந்தக் கடல் முட்டும் வானத்தடியில் கதிரோயும் அந்தமாலை மாலை வேளையின் அற்புதங்கள்- கடலின் வாசத்தை காவிவரும் இளம் தென்றல் காற்று எமது மனதுக்கும் உடலுக்கும் அள்ளித்தரும் சுகம். -தென்றல் தீண்டுவதால் தென்னை பனை ஓலைகள் செய்யும் இங்கிதமான இசை- விடியற்காலை பறவையினங்களின் குரலில் பிறக்கும் மெல்லினங்கள் – மார்கழி மாதத்து பனித்துளிகளை ஏந்தி நிற்கும் பரந்து விரிந்த தரைப் புல்லினங்கள் விடியலில் நடப்பவர் கால்களை மட்டுமல்ல மனதையும் ஈரமாக்கும் விந்தைகள் அந்த இயற்கையின் பரிசங்களை எண்ணிப்பார்த்து மனதுக்குள் மகிழ்கின்றேன்.

எமது கிராமத்தை முன்னோக்கிய பாதையில் முன்னெடுத்துச்செல்ல எமது கிராமத்தில் பல முன்னோடீகள் தோன்றிபணியாற்றியிருந்தார்கள் என்பதை நான் அறிவேன் அவர்களில் பல முன்னோடிகள் நம் மத்தியில் இப்பொழுதில்லாவிட்டாலும் அவர்களது அயராத முயற்சியினாலும் தாராள மனப்பான்மையினாலும் வடிவமைக்கப்பட்ட அழகானதும் அறிவாளர்கள் தொழில் வல்லுனர்கள் நிறைந்ததுமான இந்த சமூகத்தில் நாம் பிறந்து வளர்ந்தோம் வாழ்கின்றோம். நமது காலத்திலும் கணிசமான சமூக நலன் விரும்பிகள் நம்மிடையே இருந்து கொண்டுதானிருக்கின்றார்கள். சமூகத்தின் விருத்திக்காக கடினமாக தொடர்ச்சியாக உழைத்துக் கொண்டிருக்கினறார்கள். அவர்களது எண்ணங்களுக்கும் மேலான பணிகளுக்கும் சமூகத்தின் அங்கத்தவர்களாகிய நாம் மரியாதையும் மதிப்பும் கொடுக்க வேண்டியது நமது கடமையாகும் அதே போன்று அவர்களைப் போல் நாமும் சமூக அக்கறையுள்ளவர்களாக இருப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

நான் இப்பொழுது பிற தேசம் ஒன்றில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் எனது கிராமமான துறையூரின் மண்வாசனையினை முழுதாக நுகர்ந்து இரசித்து வாழ்ந்தவன் அந்த வகையில் என்னிடம் இருக்கக்கூடிய கிராமத்து வாசனை என்னிடமிருந்து நீக்கப்பட முடியாத ஒன்றாகிவிட்டது. அதன் காரணமாகவே நான் வாழும் நாட்டிலுள்ள துறையூர் அபிவிருத்தி தொடர்பான அமைப்போடு என்னை இணைத்துக் கொண்டு பூரண ஒத்துழைப்பு வழங்கி வருகின்றேன். குறித்த அமைப்பு துறையூரில் செய்த செய்து வருகிற அபிவிருத்திகளில் எனது பங்களிப்பும் கலந்திருப்பதை எண்ணி மகிழ்ச்சயும் திருப்தியுமடைகின்றேன். குறித்த அமைப்புடன் இணைந்து பங்களிக்கின்றேன் என்பதற்கப்பால் தனிமனிதனாக நின்று கல்வி மேம்பாடு தொடர்பான பெறுமதியான வேலைத்திட்டங்களையும( ஐயனார் வித்தியாசாலைக்கான கட்டிடத் தொகுதி- சிறுவர் பாடசாலைக்கான கட்டிடத் தொகுதி மற்றும் யைனார் ஆலயத்துக்கான அன்னதான மண்டபம்) செய்துள்ளேன் என்பதையும், செய்து வருகின்றேன் என்பதையும் இங்கு பதிவு செய்கின்றேன். இப்பதிவானது இம்மியளவும் சுய விளம்பர நோக்கற்றது மாறாக மற்ற நண்பர்களையும் பொது நலத்திலன் பால் ஈர்க்கச் செய்ய வல்ல ஒரு மாதிரியாகவே இங்கு பதிவு செய்கின்றேன்.

உழைப்பால் உயர்ந்து அறிவியலில் செழிப்படைந்து பல் தொழில் களமாகி கலைத்துறை விளையாட்டுத்துறைகளில் வியத்தகு சாதனைகள் புரிந்து வளர்ச்சியடைந்த கிராமமாக துறையூரை உயர்த்திப் பார்க்க விரும்புகின்ற சம காலத்திய மனிதர்களில் நானும் ஒருவன் என்பதை வெளிப்படுத்தி எனது கருத்துரையினை முடிக்கின்றேன்.

நன்றி

## <u>திரு வ. இராமலிங்கம் அவர்கள்</u>

நமது துறையூர் கிராமத்தில் வாழ்ந்திருந்த சமூகநலன் சார்ந்த செயற்பாடுகளில் முன்னெடுப்பாளார்களாக விளங்கி நம்மை பெருமிதத்துடன் பேச வைக்கக்கூடிய அடையாளங்களை விட்டுச் சென்றவர்களில் திரு வ.இராமலிங்கம் அவர்கள் ஒருவராவார் அவர் தொடர்பில் இங்கு சில விடயங்களை பதிவு செய்ய வேண்டியது எனது சமூகக் கடமையாக கருதுகின்றேன்.

நான் சிறு பிராயத்தவனாக இருந்த போது சமூக வளர்ச்சி தொடர்பில் அவரது ஈடுபாடு அக்கறை என்பவற்றை நன்கு அறிந்துள்ளேன். துறையூர் ஐயனார் சன சமூக நியைம் நிறுவப்பட்டமைக்கான மூலகர்த்தாக்களில் திரு வ.இராமலிங்கம் அவர்கள் ஒருவராக இருந்தார். ஓலைக் கொட்டிலாக ஆரம்பிக்கப்பட்ட சன சமூக நிலையம்  கட்டடிமாக உருப்பெற்று நின்றது. அந்த கட்டிடம் நீண்ட நெடுங்காலம் பாவனையில் இருந்தது. துறையூரின் வளர்ச்சியோடு தொடர்புபட்ட கலை, கல்வி, விளையாட்டு, கலாச்சாரம் பேன்ற துறைகள் தொடர்பான கூட்டங்கள் கருத்தரங்குகள் தீர்மானங்கள் அங்கேதான் எடுக்கப்பட்டன. அனைத்து  துறைகளினதும் ஆரம்பம் அங்கேதான் நிகழ்ந்தது. எந்தக் காலத்திலும் குறித்த நமது சமூகத்தின் வளர்ச்சித்துறை பற்றி நாம் பேசும்போதும் எழுதும் பொழுதும் திரு வ.இராமலிங்கம் அவர்களையும் அவருடன் கூட நின்று சமூகப்பணி ஆற்றியவர்களையும் பதிவு செய்வது நமது தார்மீகக் கடமையாகும்.

சனசமூக நிலையத்தின் தோற்றத்தில் இருந்திருக்கக்கூடிய  இவரது பங்களிப்பிற்புகு அப்பால் துறையூரில் கடற்றொழிலாளர்களுக்கு கூட்டுறவின் மகத்துவததினை எடுத்துரைத்து அவர்களை ஒன்று திரட்டி கடற்றொழிலாளர் கூட்டுறவுச் சங்கத்தினை நிறுவி அதன் மூலம்  துறையூர் கடற்றொழிலாளர்களுக்கு பல தரப்பட்ட நன்மைகள் கிடைக்க வழி செய்தார்.  குறித்த கூட்டுறவுச்சங்கத்தின் தோற்றத்திற்கு இவருடன் தோளோடு தோள் நின்று ஒத்துழைத்த திரு நா. ஐயம்பிள்ளை திரு சி.கார்த்திகேசு திரு நா.பரமசாமி திரு ப.இராசதுரை- திரு.க. பழனி போன்றவர்களையும் இப்பதிவில் நினைவு கூருவது அவசியமாகும். அக்கால கட்டத்தில் இயங்கி வந்த தீவக கடற்றொழிலாளர் கூட்டுறச்சங்கங்களின் மைய நிறுவனமான ஊர்காவற்றுறை கடற்றொழிலாளர் கூட்டுறவுச் சங்கத்தின் இயக்குநர் சபையிலும் திரு வ இராமலிங்கம்- திரு சி. கார்த்திகேசு ஆகியோர் பணியாற்றிய காலங்களையும் அவர்களது பிரதிநிதித்துவத்தின் மூலமாக துறையூர் கடற்றொழிலாளர்கள் அடைந்த  கணிசமான நன்மைகளையும் சமூக முன்னேற்றம் தொடரபில் திரு வ. இராமலிங்கம் மற்றும் அவருக்கு ஒத்தாசையாக இருந்த சமூக முன்னோடிகளையும் இப்பதிவின் வழியாக நினைவு கூருவதில் மகிழ்ச்சியும் திருப்தியும் அடைகின்றோம்.

நன்றி

பதிவு செய்தவர்

துறையூர் காசி



## திரு.மு.ஆறுமுகம் ( சமாதான நீதவான் )

-அ .தேவதாசன்-

அமரர் திரு மு.ஆறுமுகம் அவர்கள் வேலணையில் உள்ள சிறு கிராமத்தில் 04.04.1921ம் ஆண்டு பிறந்தார். அவரை செல்லமாக முகத்தார் என அழைப்பதுண்டு அவர் தனது சிறு வயதிலிருந்தே சமூக விடுதலைக்காக தன்னை அர்பணித்து வந்த போதும் அருகில் இருக்கும் சமூகங்கங்களோடும் மிகவும் அன்பையும் நட்பையும் பேணியே வந்துள்ளார். அவரது சிறு பராயத்திலிருந்தே துறையூர் கிராமத்துடன் மிக நெருக்கமான உறவை வளர்த்து வந்தவர்.

சமூக ஒடுக்குமுறை மிகமோசமாக இருந்து வந்த காலங்களில் அதற்கு எதிராக மிக அர்பணிப்புடன் போராடியவர் இவரது சேவையை கவனத்தில் எடுத்த இலங்கை அரசு 1959ல் சமாதான நீதவான் (ஜே) பதவி வழங்கியது. இதன்காரணமாக வேலணை வாழ் மக்களுக்கு எப்போதும் இன்முகத்துடன் பணியாற்றி வந்துள்ளார்.

இவரது கள் இறக்கும் தொழில் சார்ந்த தொழிலாளர்களது வளர்ச்சிக்காகவும் அதுசார்ந்த அமைப்புக்கள் சார்ந்தும் பல காலம் தலைவராகவும் பொறுப்போடு செயற்பட்டு வந்துள்ளார்.

1969ல் நடைபெற்ற கிராமசபை தேர்தலில் 6ம் வட்டாரத்தில் இவர் போட்டியிட்டார் இத்தேர்தலில் இவரோடு பலர் போட்டியிட்டனர். துறையூரை சேர்ந்த திரு.இராமலிங்கம் அவர்களும் போட்டிக்களத்தில் இறங்கியிருந்தார். இதனால் போட்டி வலுவானதாக இருந்ததால் திரு இராமலிங்கம் அவர்கள் திரு ஆறுமுகம் அவர்களுக்கு விட்டுக்கொடுத்ததன் காரணமாக வேலணை மேற்கைச் சேர்ந்த குலசேகரம் அவர்களை 156 அதிகமான வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார். இத்தேர்தலில் வேலணையில் பெரும்பான்மை வெற்றியீட்டியது திரு ஆறுமுகம் அவர்களே......

தனது இறுதிக்காலம் வரை சமூகு மேம்பாட்டுக்காக உழைத்த திரு ஆறுமுகம் அவர்கள் 06.01.2002ல் இவ்வுலகை விட்டு விடை பெற்றார்.

இவருடன் செயற்பாட்டின் ஆலோசகராக உறுதுணையாக எப்போதும் அருகில் இருந்து செயற்பட்டு வந்த சின்னக்குட்டி கந்தசாமி அவர்கள் இப்போது வேலணை கிழக்கில் சமாதான நீதவானாகவும் மற்றும் சமூக மேம்பாட்டுக்கான பணிகளையும் ஆற்றி வருகிறார். இப்பேற்பட்ட சமூக ஆர்வலர்களை நினைவு மீட்பதில் நாம் பெருமை அடைகிறோம்.....

## துறையூர் ஐயனார் கலாமன்றம்

## தோற்றமும் வளர்ச்சியும்

1969 ம் ஆணடளவில் எனது கிராமம் நாடகத் துறையில் வளர்ச்சி காண வேண்டும் என்ற நிலைப்பாட்டினை எடுத்துக் கொண்டதானது ஒரு புதிய அத்தியாயத்தின் தொடக்கமாக இருந்தது இயற்கையான நடிப்புத்திறனை தன்னகத்தே கொணடிருந்த எனது ஒன்று விட்ட சகோதரன் செல்லையா சிவராசனது நடிபபுத்திறமை எனது இந்த முன்னெடுப்புக்கு நிலையான மூலதனமாக அமைந்தது.

'யார் குற்றவாளி' 'மனோகரா' ஆகிய கலைஞர் கருணாநிதியின் புகழ் மிக்க நாடகவசனங்களை மனப்பாடம் செய்து எமக்கே உரித்தான பாணியில் நடித்து நாடகமாக உள்ளூரிலேயே பலதடைவைகள் மேடையேற்றினோம். யார் குற்றவாளி, தூக்கு மேடை போன்ற நாடகங்களை பல தடைவைகள் மேடையேற்றுவதற்கு தமது அரங்குகளில் வாய்ப்புக்களை வழங்கி எமது ஆற்றலை ஊக்குவித்த ராமக்கிளி சர்க்கஸ் கம்பனியினரை இந்த நேரத்தில் நினைவு கூர கடமைப்பட்டிருக்கின்றேன. காலப் போக்கில் குறித்த ''யார்குற்றவாளி'', ''தூக்குமேடை'' போன்ற நாடகங்கள் சீரமைக்கப்பட்டு சிவராத்திர விழா போன்ற நிகழ்வுகளில் மேடையேற்றி எம்மிடம் இருந்த கலையார்வத்தினையும் நடிப்புத்திறனையும் செயல் வடிவில் சாட்சியப்படுத்தினோம். எமது முயற்சிக்கு கிராம மக்களது ஆதரவும் ஒத்தாசையும் பெருக்கெடுக்க தொடங்கியது . எமது துறையூர் கிராமத்தின் இளைய தலைமுறையின் கணிசமானோருக்கு நாடகக்கலை மீதான ஆர்வம் முளைவிடத் தொடங்கியது. இந்த கலைப்பயணத்தின் தொடக்க காலத்தில் என்னுடன் இணைந்து நின்று எனது நெறிப்படுத்தலில் நடித்ததுடன் எல்லா வகையான ஒத்துழைப்பையும் நல்கிய செல்லையா சிவராசன், சின்னத்தம்பி பாலச்சந்திரன், கிருஸ்னன் நாகராசா, சண்முகம் சித்திரவடிவேல்(பெண் வேடம்), பொன்னையா திருஞான சம்பந்தன், நாகமுத்து(குழவர்) செல்லத்துரை ஆகியோரை கட்டாயமாக நினைவு கூர கடமைப்பாடுடையவனாகின்றேன்.

மன்றத்தின் படிப்படியான வளர்ச்சியின் ஒவ்வொரு படிநிலைகளிலும் நாடகக் கலையில் ஆர்வம்கொண்ட பல இளைஞர்கள் மன்றத்தில இணைந்து கொண்டார்கள் அவ்வவாறு இணைந்து கொண்டவர்களில் பலர் நடிப்பில் தேர்ச்சிபெற்றவர்களாகி சிறந்த நடிகர்களாக பிரகாசிக்க தொடங்கினார்கள்,உருவாகும் நாடகங்களுக்கான நடிகர் பற்றாக்குறை என்பது இல்லாத நிலை உருவானது. முன்றத்தின் உறுப்பினர்கள் அனைவருமே நாடகத்தில் இருக்கக்கூடிய பலதரப்பட்ட பாத்திரங்களையும் ஏற்று நடிக்கக்கூடியவகையில் பயிற்றுவிக்கப்பட்டார்கள் மன்றத்தின் ஆரம்ப காலப்பகுதியில் பெண்வேடம் ஏற்று நடிப்பதற்கு யாரும் முன்வராத நிலையிருந்தது ஆனால் காலப் போக்கில் குறித்த பெண் வேடம் ஏற்பதற்கு பல இளைஞர்கள் முன் வந்தனர் அவ்வாறு முன்வந்தவர்களை வரிசைப்படுத்துகையில் சண்முகம் சித்திரவடிவேல், பா. கணேசலிங்கம், செ.தவநாயகம், அ. தேவதாசன் ஆகியோரை குறிப்பிடலாம். அத்துடன் முதன் முதலாக கலாமன்றத்தின் நாடகத்தில் தங்கை பாத்திரம் ஏற்று நடிக்க முன்வந்த சிறுமி இளையதம்பி பூங்காவனம் என்ற நம்மூர் சிறுமியின் கலையார்வத்தினை நினைவு கூர்ந்து இவ் ஆவணத்தில்

பதிவு செய்வதில் மகிழ்ச்சியடைகின்றோம். இவர்கள் தவிர வேலணை வடக்கு சேளாவத்தை என்னும் இடத்தைச் சேர்ந்த நவரெத்தினமும் அவரது நண்பரும் கவர்ச்சியான பெண்கள் வேடத்தில் தோன்றி எமது நாடகங்கள் அனைத்திலும் நடனமடி நாடகங்களை சிறப்பித்தமையினை இங்கு நன்றியுணர்டன் நினைவு கூருகின்றேன். இவர்கள் இருவரும் எமது கலாமன்றத்தின் கௌரவ உறுப்பினர்களாக இருந்து வந்தார்கள். மேலும் எமது நாடகங்களின் முதல் காட்சியில் நடனமாடி அரம்பத்திலேயே நாடகத்துக்கு பரபரப்பூட்டும் குழந்தை நட்சத்திரமான செல்வி கந்தசாமி சோதிமலரும் மன்றத்தின் வளர்ச்சியில் அவரது பங்கின் முக்கியத்துவத்துவமும் மறக்கப்பட முடியாதவை. அவரது பங்களிப்பினை நினைவு கூரும் அதே வேளையில் அவரது தீரத்தினையும் உதிப்பாட்டினையும் வெளிப்படுத்திய சம்பவம் ஒன்றினை இங்கு விவரிப்பது பொருத்தமாக இருக்கும். 1977ம் ஆண்டென்று நினைக்கின்றேன் வேலணைக்கிராமத்தினை அண்மித்த நாரந்தனை என்னும் கிராமத்தில் நடைபெற்ற நாடக விழாவொன்றில் எமது நாடகமான உடன் பிறப்பு நாடகத்தையும் அரங்கேற்றுமாறு வந்த அழைப்பிற்கிணங்க நாம் அங்கு சென்றிருந்தோம் இரவு 10 மணியிருக்கும் மேடையில் பிறிதொரு நாடகம் அரங்கேறிக் கொண்டிருக்க அடுத்த அரங்கேற்றம் எமது நாடகமாக இருந்ததால் எமது கலைஞர்கள் செல்வி சோதிமலர் உட்பட அலங்காரத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர் திடீரென ரசிகர் கூட்டத்தினால் மேடையினை நோக்கி கற்கள் வீசப்பட்டன மேடையில் நடித்துக் கொண்டிருந்த நாடக நடிகர்கள் சிதறி ஓடினர் சாரமாரியாக வீசப்பட்ட கற்கள் எம்மை காயப்படுத்துவதை தவிர்ப்பதற்காக மேடையின் கீழ்ப்பகுதியில் ஒதுங்க முயற்சித்தோம் துரதிஸ்ட்டவசமாக வீச்சாக வந்த கல் ஒன்று 7 வயதான சிறுமி சோதிமலரின் தலையில் தாக்கியது இரத்தம் வழியத் தொடங்கியது சிறுமி வீரிட்டு அழத் தொடங்கினாள் உடனடியாக நாம் விரைந்து செயற்பட்டு இரத்த ஓட்டத்தினை கட்டுப்படுத்த சிறுமியின் தலையில் கட்டுப் போட்டதுடன் அவளை தேற்றினோம் கல்வீச்சுக்கான காரணம் முழுதாக எம்மால் அறியப்படவில்லை. நடந்தேறிய நாடகம் முடிவுற்றதாக அறிவிக்கப்பட்டது. எமது நாடகத்தை அரங்கேற்றுமாறு ஏற்பாட்டாளர்கள் கேட்டுக் கொண்டனர். சிறுமி சோதிமலலரின் முதல் நடனக்காட்சியினை ரத்து செய்ய யோசித்த போது சோதிமலர் தானே முன்வந்து ரத்து செய்ய வேண்டாம் நான் ஆடுகின்றேன் என்றாள் இரத்தம் கசிந்த தலைக்கட்டுடன் சோதிமலர் முதல் காட்சியில் மேடையில் தோன்றவும் என்னடி ராக்கம்மா பாடலுக்கு சுற்றி சுழன்று ஆடத் தொடங்கவும் குழப்பத்தால் நிலை குலைந்திருந்த மக்கள் அரங்கத்தின் கரகோசம் வானைப்பிளந்தது எங்கள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் முட்டியது தொடர்ந்த உடன்பிறப்பு நாடகத்தின் பிரமிக்க வைக்கும் காட்சிகளால் நாடகம் முடியும் வரையிலும் மக்களது ஆதரவுக் கரகோசம் தொடர்ந்த வண்ணமிருந்தது .சிறுமி சோதிமலரின் துணிச்சல் துறையூர் கலாமன்றத்தின் வரலாற்றுப் பதிவில் வாழ்ந்துகொண்டேயிருக்கும்.

கலா மன்றத்தின தோற்றம் வளர்ச்சி சாதனை போன்ற படி நிலைகள் ஒவ்வொன்றிலும் திரு கா இராசரெத்தினத்தினம் (கலையன்பன்) அவர்களது அர்ப்பணிப்புக்கள் என்றென்றும் மறக்கப்பட முடியாதவை. எனது வாழ்வின் கணிசமான காலப்பகுதி அவரது கலைப்பயணத்துடன் இணைந்ததாக இருந்தது. அந்த பயணத்தில் எத்தனையோ இடையூறுகள் தடைகள் துனபங்கள் நெருக்கடிகள் அத்தனை தடைகளையும் உடைத்துக் கொண்டு சாதனையினை குறி வைத்து பயணித்தோம். தோல்விகள் எம்மைத் தூண்டி விட்டன வெற்றிகள் எம்மைத் தூக்கி விட்டன. அந்த கால கட்டத்தில் யாழ் குடா நாட்டில் இருந்திருக்கக்கூடிய கலாமன்றங்களின் நாடகங்களுக்கு எமது நாடக மன்றத்தின் படைப்புக்களும் நடிகர்களின் திறமைகளும் பெரும் சவாலாக அமைந்திருந்தன என்றால் அது மிகைப்படுத்தப்படாத உண்மையாகும். குறிப்பாக எமது வெற்றிப் படைப்பான உடன்பிறப்பு என்னும் நாடகம்(1976 பிற்பகுதியில் உருவாக்கப்பட்டது ) எழுதுமட்டுவாள் ஊரில் (ஒவ்வோர் ஆண்டும்) மற்றும் நவாலி கோண்டாவில் ஓட்டிசுட்டான-

அல்லைப்பிட்டி ஆகிய பிரதேசங்களில் நிகழ்தேறிய அகில இலங்கை நாடகப் போட்டிகளில் பல் வேறு பட்ட சிறந்த நாடகங்களுடன் போட்டிக்களத்தில் பல தடவைகள் அரங்கேறி சிறந்த நாடகத்துக்குரிய விருதுகளையும் சிறந்த நடிகருக்குரிய விருதுகளையும் வென்றெடுத்து சாதனைகளை நிகழ்த்தியது. போட்டி அரங்குகளுக்கு எமது உடன் பிறப்பு நாடகத்தை கொண்டு சென்று அரங்கேற்றும் வரை நாம் சந்திக்கும் மிகக் கடினமான வலிகளுக்கு ஈடு சொல்ல என்னால் முடியவில்லை, ஆனால் அத்தகைய அரங்குகளில் கிடைக்கின்ற வெற்றிகளிலும் பாராட்டுதல்களிலும் அந்த வலி எல்லாம் பறந்து போய்விடும் அந்த நேரத்தில் எமக்கு கிடைக்கின்ற வெற்றிகளையும் பாராட்டுதல்களையும் மலையளவு பொன் குவியலை விட மேலாகவே எமக்குத் தெரிந்தது. அந்த நிகழ்வுகளையும் நினைவுகளையும் உள்ளடக்கிய வரலாற்றினை இந்த அறிக்கையின் மூலம் இன்றை எமது கிராமத்து இளைய தலை முறையின் அறிதலுக்கு கொண்டு வருவதில் நாம் பெருமிதம் அடைகின்றோம். உடன்பிறப்பு நாடகம் வேலணை கிழக்கு பஸ் கம்பனியடி பெருங்குளத்தடியில் அப்பகுதியினை சேர்ந்த இளைஞர்களது வேண்டுதலுக்கிணங்க மேடையேற்றப்பட்ட வேளை நிகழ்ந்த மறக்க முடியாத சம்பவமொன்றை இங்கு பதிவு செய்ய விரும்புகின்றேன். பெரும் திரளான மக்கள் நிறைந்த அரங்கில் பிற்பகல் 7 மணிக்கு ஆரம்பமான உடன்பிறப்பு நாடகம் பார்வையாளர்களின் பலத்த ஆதரவுக் கரகோசத்தின் மத்தியில் விறுவிறுப்பாக காட்சிகள் போய்க் கொண்டிருந்தன அப்போதைய காலத்து இரசிகர்களை அதிகமாக ஈர்க்க வல்ல சண்டைக்காட்சி ஆரம்பமாகியது நடிகர்களான திரு செ.சிவராசன் அமரர் திரு.பொ.சம்பந்தன் ஆகிய இருவரும் மோதுதுகின்றார்கள் தீரம், சகாசம் நிறைந்ததாக விறுவிறுப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்த அகோரக் காட்சியில் தவறுதலாக திரு செ.சிவராசனின் தலையின் கதிரை முனை தாக்கியதில் காயம் ஏற்பட்டது குருதி வழியத் தொடங்கியது உடனே மேடையின் ஓரம் வந்த சிவராசன் அவர்களை உள்ளெடுத்து அவசரமாக துணியினை தலையில் கட்டிக்கொண்டு மீண்டும் மேடையில் தோன்றினார் துணிக்கட்டினையும் மீறி குருதி கசிந்த நிலையிலும் அந்த மோதல் காட்சியில் அதே விறுவிறுவிறுப்புடன் இயங்கினார் அவ்வேளை மக்கள் அரங்கத்தில் இருந்து எழுந்த கரகோசம் வானைப்பிழந்தது. நாடக முடிவில் மக்களது பாராட்டுதல்கள் எம்மை பூரிக்கச் செய்தன.நெஞ்சிலிருந்து நீங்காத இந்த நினைவுகளை இங்கு பதிவு செய்வதில் பெருமிதம் அடைகின்றோம். இவ்விதமான துணிச்சலும் ஆற்றலும் நிறைந்த தோழர்களின் தொடர்ச்சியான உழைப்பினால் தீவகத்தில் ஒரு சிகரமாக துறையூர் ஐயனார் கலாமன்றம் ஓங்கி உயர்ந்து ஒப்பற்ற ஒரு சிகரமாக நின்றிருந்த நாட்களை நினைக்கின்றேன். அந்த சிகரத்தினை கட்டமைத்த நடிகர்களான எனது தோழர்களை அவர்களது கடுமையான உழைப்பை நினைத்துப் பார்த்து பெருமிதம் அடைகின்றேன். எல்லாவற்றிற்கும் மேலாக எமது கிராம மக்கள் எமக்கு வழங்கிய ஆரவத்துடன் கூடியதான ஒத்தாசைகள் ஊக்குவிப்புக்கள் அவற்றையெல்லாம் நினைத்துப் பார்க்கும் போது நெஞ்சு நெகிழ்கின்றது.

துறையூர் கலாமன்றத்தின் வெற்றி தனிப்பட்ட எவருக்கும் சொந்தமானதல்ல அந்த வெற்றியானது உருக்குறுதியுடன் மேற் கொண்ட நீண்ட நெடிய பயணத்தில் ஒன்றுபட்டு நின்ற அனைத்து கலைஞர்களுக்கும் அந்தக் கலைஞர்களை ஊக்குவித்த துறையூர் மக்களுக்கும் உரித்தானது .அதே வேளையில் எம்மை ஊக்குவித்த மூத்தவர்களில் திரு மு.வினாசித்தம்பி நிதி உதவி தந்து ஊக்குவித்தமையினையும் திரு இ.வேலாயுதபிள்ளை அவர்கள் போக்கு வரத்து வாகன வசதி செய்து தந்து ஊக்குவித்தமையினையும் உள்ளூர் மேடையேற்றங்களின் போதெல்லாம் மேடை அமைப்பில் முன்னின்று உதவிய கதிரவேலு சுப்பிரமணியம், செல்லத்துரை சாந்தலிங்கம், தர்மதேவன், சி. மனோகரன் ஆகியோரது அபாரமான ஒத்தாசையினையும், மேடை அமைப்பிற்கு தேவையான ஓலைத்தட்டிகள் பலகைகள் போன்றவற்றை மனதொத்து தந்துதவிய எமது கிராம மக்கள் அனைவரையும் இந்தப் பதிவின் மூலம் நன்றியுணர்வுடன் நினைவு

கூருகின்றோம். மேலும் நாடக அரங்கேற்த்தின் போதெல்லாம் ஒலி ஒளி அமைப்பு மற்றும் காட்சித்திரை போன்றவற்றை குறித்த நேரதில் கொண்டு வந்து உதவி எமது மன்ற வளர்ச்சிக்கு துணை போன நவாலி பிச்சையப்பா சவுண்ட்சேவீஸ், அரியாலை லிங்கம் சவுண்ட் சேவீஸ், யாழ் தோட்டக்காடு பென்சமின் அன்ட சன்ஸ் ஆகியோரையும் எமது நினைவுகளிலலிருந்து மறக்கப்பட முடியாதவர்களாக இங்கு பதிவு செய்கின்றோம். அத்தகைய கூட்டு முயற்சியில் பங்கெடுத்துக் கொண்ட ஒவ்வொரு கலைஞனும் மன்றத்தின் உயர்வுக்காக பல தியாகங்களையும் அர்ப்பணிப்புக்களையும் செய்திருந்தார்கள் அத்தகைய அவர்களது தியாகங்களும் அர்ப்பணிப்புகளுமே துறையூர் கலா மன்றத்தின எழுச்சிக்கும் வெற்றிக்கும் சாதனைக்கும் பிரதான காரணமாக அமைந்திருந்தன. .எமது கூட்டுப் பயணத்தில் பங்கெடுத்துக் கொண்ட அனைத்துக் கலைஞர்களது பெயர்ப்பட்டியல் இக்கட்டுரையின் கீழ் இடம் பெற்றுள்ளது முன்னைய வரலாறு பற்றிய போதுமான அறிதலின்றி எதிர்காலத்துக்கானன நமது இலக்குகளை நிர்ணயத்துக் கொள்ள முடியாது. நாடகத்துறையில் ஈடுபட்டிருக்கக்கூடிய எமது கிராமத்து இளஞர்கள் அந்தத் துறையில் புதிய புரட்சிகரமான அத்தியாயங்களை புரட்டவேண்டும் என்ற விருப்பின் உந்துதலின் காரணமாக நாம் நடந்து வந்த பயணத்தின் பதிவுகளை உங்கள் அறிதலுக்காக சமர்ப்பித்தேன்.

வலியின்றி வெற்றியில்லை

சோதனைகளின்றி சாதனைகள் இல்லை

அன்புடன்

உங்கள்

துறையூர் காசி

இயக்குநர் துறையூர் ஐயனார் கலாமன்றம்

## <u>துறையூர் ஐயனார் கலாமன்றம் அத்தியாயம் -2</u>

----- வேலணையூர் தாஸ்--

# இனிய நினைவுகளிலிருந்து……….

நாடகம் தியாகச்சுடர் 1979ல் ஓர் பனிவிழும் இரவு ஐயனார் சனசமுக நிலைய அரங்கு இன்னமும் அமைக்கப்படவில்லை பிரதான வீதியோரமாய் போடப்பட்ட மேடையில் அரங்கேறுகிறது. கலயன்பனின் கதை வசனம் நெறியாழ்கையில் உருவான தியாகச்சுடர் திருவாளர்கள் காசிலிங்கம், சிவராசா, நாகராஜா போன்ற முத்தகலைஞ்சர்களின் வழிவந்த இளய தலைமுறை கலைஞர்களின் படைப்பு இது அவர்கள் போல் அனுபவம் செறிந்த நடிப்பாக இல்லாது விட்டாலும் இளமை வேகம் தெரிகிறது. ரவியும் க.இராசரத்தினமும் (பிள்ளையான்) பிரதான பாத்திரங்களில் நடிக்கிறார்கள் சோமன் வில்லனாக வந்து ரஜனியை நினைவுறுத்துகிறார். மாம்பழம் ரவியின் காதலில் ஆடுகிற அந்த இடைக்கால பாடல் இன்று நினைவில் அழிந்தாலும் காட்சிகள் ஊமையாய் நகர்கிறது அந்த பனியிரவு இன்றும் குளிர்கிறது.---

விடுதலைப்பறைவைகள். பொன்- நகுலதாசன் கலையன்பனுக்க பின் கலாமன்ற நாடகங்களை நெறிப்படடுத்தியவர்களுள் குறிப்பிட தக்கவர் பொன் நகுலதாசன் சமுகத்தில் இடம்பெறும் ஊழல்கள் அதிகாரம் என்பவற்றிற் கெதிரான குரலாக இவரது நாடகங்கள் அமைந்தன. பல நாடகங்கள் இளம் தலைமுறையினரை வைத்து தயாரிக்கபட்டன அவற்றில் ஒன்று தான் விடுதலைப்பறவைகள் ஐயனார் சனசமுக நிலையத்தின் புதிய அரங்கில் மேடை ஏறுகிறது ஒரு குடும்பத்தின் கதை காலத்தின் போக்கிற்கேற்ப விடுதலைநோக்கி நகர்வதாக கதை அமைகிறது இந்திய சினிமாவின் தாக்கம் இந்த நாடகத்தில் இருந்தாலும் காட்சி நகர்வுகளில் ஏற்படுத்தப்பட்ட விரைவும் விறுவிறுப்பும் இளைஞர்களிடையே மனக்கிளர்வை ஏற்படுத்துகிறது கைதட்டலில் அரங்கு அதிர்கிறது இது குறும் படமாக பின்பு தாயாரிக்கப்பட்டதாக அறிகிறேன்

தேவன் .ஜெயாசுந்தரம் வசந்தன் வரதராஜன் போன்றோர் நடித்த இந்த நாடகம் மறக்க முடியாத கலை பதிவாக இன்றும் மனதில் நிற்கிறது.

புதிய பாதை - கதை இயக்கம் -வேலணையூர்தாஸ் இந்திய திரைப்படங்களின் நகலாக நாடகங்கள் வெளிவந்த காலச்சூழலில் யாழ்ப்பாண மக்களின் சாதாரண பேச்சுமொழியில் இது எழுதப்பட்டது. திரைப்படப்பாடல் பின்ணணி இல்லாமல் நேரடியாக பாடல் பாடப்பட்டதும் முதன்முதல் பெண்களின் பாத்திரத்தை பெண்களே நடித்ததும் இந்நாடகம் இன்று வளர்ந்திருக்கின்ற நாடக மரபின் தொடக்கமாக அமைந்தததில் முக்கியம் பெறுகிறது. வேலணை கலை இலக்கிய வட்டத்தின் தயாரிப்பாக வந்த இந் நாடகம் இதுவரை இருந்து வந்த சமூகப் பிற்போக்குத்தனங்கள் சாதி மத அடக்கமுறைகளிலிருந்து விடுபட புதிய புரட்சிகர கருத்துக்களோடு சமூகத்தில் தயாராகும் இளைஞர் போராட்டத்தை பதிவு செய்தது. சித்திர வடிவேல் கதாநாயகனாக நடித்தார். இவரது ஜோடியாக அல்லைப்பிட்டி யசிந்தா நடித்தார். முற்றும் சிவநாதன் புவனேஸ்வரி ஆகியோரும் நடித்தனர். சோமசுந்தரம் கலா பின்னணி பாடினார். என்னுடன் சேர்ந்து சிறிபாமா நாடக பாத்திரங்களை அறிமுகம் செய்தார். கலைமுயற்சிகளில் ஆண்களும் பெண்களும் சேர்ந்துழைக்கின்ற ஒரு மரபை சிவராத்திரி தினமொன்றின் சனசமூககலையரங்கில் இந்நாடகம்

ஆரம்பித்து வைத்தது. இந்த நாட்களில் புதிய வடிவம் பெருவரவேற்பை பெறவில்லையாயினும் வந்த நாட்களில் பலரால் இது நினைவுகூரப்பட்டு பாராட்டப்பட்டது.

இக்கட்டுரை வளமான வேலணையின் நாடக வரலாற்றில் ஒரு சிறு பகுதியையே வெளிக்கொண்டு வருகிறது.

இந்த வளமான காலங்களின் பின் நாட்டில் நடந்த போர் எம்மூரின் இருப்பை குலைத்து வேர்களை பிடுங்கி எம்மை அகதியாய் எறிந்தது சிலர் புலம் பெயர்ந்தார்கள். ஆளுக்கொரு ஊராக நாங்கள் பிரிந்தோம். அங்கு வேருன்றினோம். இருந்தாலும் நினைவுகளும் கனவுகளும் எம்மூரைச்சுற்றி அலைகிறது. அந்த நாட்களின் கலை படைப்புக்களின் வாசம் எம்மூரின் உப்புக் காற்றில் இன்றும் கலந்திருக்கிறது.

## துறையூர் நாடகக் கலை வளர்ச்சி தொடரபில் மேலதிக தகவல்கள்

நமது துறையூர் ஐயனார் கலாமன்றத்தின் தோற்றம், வளர்ச்சி தொடர்பான் கட்டுரை இந்த நூலில் முடிந்த அளவு விபரமாக எழுதப்பட்டடிருக்கிறது ஆயினும் அக்கட்டுரையின் உள்ளடக்கம் முழுக்க முழுக்க துறையூர் ஐயனார் கலாமன்றத்தை சுற்றியதாக அதனோடு சம்பந்தப்பட்டதாகவே இருப்பதை காணலாம். துறையூர் நாடக வளர்ச்சியின் வரலாறு துறையூர் கலா மன்றத்தின் முன்னெடுப்புகளோடு ஒன்றியதாக மட்டும் நின்றுவிடவில்லை மன்றத்தின் பிரகாசமான வளர்ச்சியின் விளைவாக மன்றத்துக்கு வெளியே சில இளைஞர்னளது தனிப்பட்ட நாடக தயாரிப்புக்களும் அரங்கேற்றங்களும் துறையூர் நாடகத்துறை வரலாற்றோடு சேர்க்கப்பட வேண்டியவையாகும்.

அந்த வகையில் வேலணை செட்டிபுலம் பகுதியில் இருந்திருக்ககூடிய கில இளைஞர்கள் மத்தியில் நாடகம் ஒன்றை தயார் செய்து மேடையேற்ற வேண்டும் என்ற ஆவல் காணப்பட்டது .துறையூர் கலாமன்றத்தை அணுகிய குறித்த இளைஞர்கள் தமது கன்னி முயற்சிக்கு உதவும்படி கேட்டிருந்தார்கள் . அவர்களது நாடகத்துறை மீதான ஆர்வத்தினை மதித்து வரவேற்றுதுடன் அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவர்கள் பகுதிக்குச் சென்று நடிப்பு பயிற்சியும் ஆலோசனையும் வழங்கயிருந்தோம். ஆயினும் துரதிஸ்ட்டவசமாக அவர்களது முயற்சி இடை நடுவில் கைவிடப்பட்டது. இந்நிகழ்வானது நமது கலா மன்றத்தின் வளர்ச்சியும் சாதனைகளும் தீவகத்தின் ஏனைய பகுதி இளைஞர்கள் மத்தியிலும் நாடகத்துறை மீதான ஆர்வத்தினை தூண்டி விட்டிருந்தது என்பதற்கான சாட்சியாக அமைகிறது.

இதே போன்று துறையூரில் மன்றத்துக்கு வெளியே இருந்த சில இளைஞர்கள குழுக்களாக இணைந்து தாமும் நாடகங்களை தயாரித்து உருவாக்கி மேடையேற்ற வேண்டும் என்ற ஆர்வத்தில்

அத்தகைய முயற்சிகளில் ஈடுபட்டார்கள் அதன் விளைவாக **கந்தன் கருணை** நாடகம் 1978 ல் சிவன்ராத்திரி விழாவில் ஐயனார் கோவில் வீதியில் மேடையேறியது. ஏ.பி நாகராஜன் அவர்களது திரைப்படம் நாடகவடிவில் அரங்கேற்றப்பட்டது. இந்த நாடகத்தினை மேடையேற்ற பெருமயற்சி எடுத்தவர்களில் திரு மு.முத்தையா (கட்டிடத் தொழிலாளி) திரு ஆ செல்வராசா (கட்டிடத் தொழிலாளி) திர க.ஐயாத்துரை ஆகியோரை முதன்மையானவர்களாக குறிப்பிடலாம். இவர்களுடன் கலாமன்ற நடிகர் திரு கி.நாகராசா- மற்றும் திரு இ.தியாகராசா -திரு த.சின்னக்கிளி திரு ச.அருட்சோதி திரு சி.தவச்சோதி திரு செ.சீவரெத்தினம் ஆகியோரும் இந்த கந்தன் கருணை நாடகத்தில் நடிகர்களாக பங்கெடுத்திருந்தார்கள்.

மேலும் அதே காலப்பகுதியில் இதே போன்று இன்னுமொரு தனிநபர் முயற்சியாக துறையூர் ஐயனார் கலா மன்றத்தின் நகைச் சுவை நடிகரான திரு சி.தணிகாசலம் அவர்களது இயக்கத்தில் தயாரான **இருண்ட உலகம்** என்னும் நாடகம்1978ம் ஆண்டு வேலணை அம்மன் கோவில் 7ம் தீருவிழவின் போது மேடையேற்றப்பட்டது் இந்நாடகத்தில் திரு சி. தணிகாசலத்துடன் சிரு நா. செல்லத்துரை, திரு சி.பரமு (கடடை பரமு) கா.குணரெத்தினம் ஆகியோர் நடித்திருந்தனர் .....

துறையூர் இளைஞர்களிடையே நாடகத்துறை மீதான ஆர்வம் நீண்ட நெடுங்காலமாக மேலோங்கி காணப்பட்டதற்கான் ஆதாரங்களாக இந்த நிகழ்வுகளை இங்கு பதிவு செய்யப்படுகிறது.

அன்புடன்

துறையூர் காசி



## எமது தாயகம

எஸ் பாலச்சந்திரன் டீ.யு (உநல)ந.ந.த.டி முன்னனாள் அதிபர் கொ- கலைமகள் வித்தியாலயம்-நீயுசிலாந்து

நீலக் கடல் சூழ் இலங்கையின் வடக்கே

ஆழக்கடலற்ற ஆனந்த சாகரம்

எல்லைகளாக ஏழு தீவுகள்

சூழ்வரித்திவை சுற்றி யமைந்திட

தலைம்தீவாம் தாயது வேலணை

பனைவளம் பயிர் வளம் தெங்குமா மரவளம்

கடல்வளம் தொழில் வளம் கலைவளம் தனவளம்

மனிதரின் மன வளம்  மகிழ்வெனும் திருவளம்

எனறும் விளங்கும் என்னகம் வேலணைத்

துறையூர் எனப் பெயர் தொன்மை மிக்கது

கேரளமாநிலக் கேண்மை கொண்டது

ஐயனார் வழிபாட்டுடன்படு மதம்சார்

மொழிகலை தொழில்துறை தொடர்புகள் துய்த்திட

வெடியரசன்புகழ் வீரனின் மரபில்

விளைந்த வேலணைத் துயூர் “பழமை”

எம்மை வளர்த்த என்னக மண்ணே

நேர்ந்த கலவர நெட்டூர நிலையால்

உறவைத் துறந்தோம் உற்றரைத் துறந்தோம்

நண்பரைத் துறந்தோம் நலன்களைத் துறந்தோம்

கடலைத் தொட்டு வீசிய தென்றலை

காலம் காலமாய் கண்ட நற்காட்சியை

பனம்பழம் பனாட்டுடன் ஒடியல்மீன் கூழையும்

தினம் தினம் உண்ட நம் தெவிட்டாத சுவைகளை

பலராய் கூடிநாம் பந்தடித்தாடிய

பால்மணல் பசுமைகொள் தரையினைத் தாண்டி

புலம்பெயர்ந்துற புமகன் ஆயினும்

மண்ணை எண்ணி மகிழ்ந்து வாழ்கின்றேன்

நல்லதோர வாழ்வை நலம் பெறத்தந்த

ஊரே உன்னை உவப்புடன் நினைக்கின்றேன்

எந்தையும் தாயும் எழிலுற வாழ்ந்து

எம்மைத்த தந்த என்னுயிர் ஊரிலே

பிறந்ததால் நான் பல பேறுகள் பெற்றேன்

அம்மன் கோவிலின் ஆரம்பப் பள்ளியில்

ஐயனார் வித்தியா சாலையாம் தாயிடம்

விந்தைகள் கற்ற விழுமிய நாட்களில்

நாக நாதியாம் நல்லதோர் உபாத்தியார்

அதிபராய் இருந்த நல்லதோர்காலம்

திருமேனி வாத்தியார் தந்த நற் கல்வியால்

சரஸ்வதி வித்தியாசாலையில் சேர்ந்தேன்

முதன்முதலாக துயைூர் மகிழ்ந்திட

புலமைப் பரீட்சையில் தேறித்திகழ்ந்தேன்

ஐயனார் வித்தியா சாலையே தந்த

அடிப்படைக்கல்வியியின் ஆற்லப் பேறும்

காலம் பிரிப்பினும் கலவரம் பிரிப்பினும்

ஐயனார் தெய்வத்தருள்தனை மறவேன்

சிற்றூர் எனினும் சிறப்புகள் தந்தவென்

பற்றூர் துறையூர் வேலணை வளம்பெற ஆசிகள்

அத்துடன் அன்புடை மண்ணே

மீண்டும் பிறப்பு மீளவும் உண்டேல்

ஆங்குன் மடியில் அணைத்தருள் செய்வாய்

## என்பாட்டன

சின்னப் பொடியன் என்பது அவன்பெயர்

குட்டியப்பாவெனக் கூறுமென்னூர்

எழுதவும் படிக்கவும் பாடவும் வல்ல

ஆற்றல் மிக்க அறிஞன் அன்னவன்

வேலணைத் துறையில் விழுமிய கலையாம்

நாடக மேடையை நலமுற நாட்டி

கூத்துக் கலையினை நேர்த்தியாய் நடாத்திய

பெரியோன் விதைத்த பேறுமைக்கலையே

தொடர்ந்து வளர்ந்து துணை செய்தனவாம்

**<u>ஐயனார் கலாமன்றத்தின் 1980களுக்கு பின்னரான அரங்கப் பதிவுகள்</u>.**

ஔவையார் விநாயகரிடம் பால், தேன், பாகு, பருப்பு என்ற நான்கைக் கொடுத்து இயல், இசை, நாடகம் என்ற மூன்றையும் பெற்று கொண்டதைப் போல வேலணைத் துறையூர் சமூகத்தினரும் பல கலை ஆர்வம் கொண்டவர்களாக காணப்படுகின்றனர், இக் கலைகளில் தம்மால் இயன்றவற்றை வேலணைத் துறையூர் ஐயனார் கலாமன்றம் வளர்த்தெடுக்க அரும்பாடுபட்டு வருகின்றது.

1965ம் ஆண்டுகளின் ஆரம்பத்தில் இருந்து இக் கலாமன்றம் ஆரம்பிக்கப்பட்டு வளர்த்தெடுக்கப்பட்டு படிப்படியாக வளர்ச்சியடைந்த இவ் அரங்க மரபானது **உடன் பிறப்பு, உரிமைக்காக, யாருக்காக, அவனா இவன, இராசகுமாரன், பாசப்பறவைகள்** எனப் பல படைப்புக்களை பெற்றெடுத்தது.

ஆரம்பகால இம் மன்றத்தின் ஆர்வலர்களான செல்லத்துரை காசிலிங்கம் அ.தேவதாசன் போன்ற பலர் நாட்டின் போர்ச்சூழல் காரணமாக வெளிநாடுகளுக்கு சென்று விட இம் மன்றத்தின் செயற்பாடுகளும் செயலிழந்து போனது.

இதன் பிற்பாடு இம் மன்றத்திற்கு புத்துயிர் ஊட்டுவதற்காக 1980 களின் ஆரம்பத்தில் நடிகராக காலடி பதித்தவர் கந்தையா கந்தவனம் (பாலன்) இவர் எண்பதுகளில் இருந்து இன்று வரை நடிகராகவும் இயக்குனராகவும் செயற்பட்டு வருகின்றார். இவர் எழுதி நடித்த நாடகங்களாக சரித்திர நாயகன், வாழ்வே மாயம், மற்றும் (ரஞ்சன்)பா.சித்திரவடிவேல் அவர்களுடன் இணைந்து **தாலி, கண்கள்** போன்ற நாடகங்களையும் இவற்றை விட என் பார்வையில் அவள் விழிகள் என்ற இசையும் கதையும் போன்றவற்றை நடித்தும் புதிய இளம் கலைஞர்களை செதுக்கிய பெருமை இவருக்குண்டு.

மேலும் 1984ம் ஆண்டுகளில் பொன்.நகுலதாசன் **விடுதலை பறவைகள்** எனும் நாடகத்தை திரைப்படமாக்கியும் 2011ல் இருந்து 2014 வரை **கிழக்கு வெளிக்குமா?, தீருமா? சோதனை, தம்பி வருவானா?** போன்ற நாடகங்களையும் **கண்ணாடி உறவுகள்** என்ற இசையும் கதையினையும் பிரசவித்தும் நடித்தும் சிறந்த கலைஞர் ஆனார்.

இவர்களுடன் கந்தையா இராசரெத்தினம் (பிள்ளையார்) அவர்கள் தண்டனை, ஏழில் செவ்வாய், சாத்திரியார் வீட்டு சம்பந்தம், மீண்டும் பல்லவி, தியாகச் சுடர், தேசத்துரோகி, போன்ற நாடகங்களை தயாரித்து நடித்துள்ளார். அத்துடன் இவரிடம் பலரையும் கவரும் நகைச் சுவை உணர்வுடன் கலந்த எழுத்தாற்றலும் நடிப்புணர்வும் அதிகமாக காணப்பட்டது.

மேலும் இவர்களுடன் இணைந்து கலைஞன் பா.சித்ரவடிவேல்(ரஞ்சன் ஆட்) அவர்கள் தூண்கள், கண்கள், தாலி, அரிச்சந்திரா, உடையாரின் உபத்திரவம் போன்ற நாடகங்களை உருவாக்கி சிறந்த நடிப்பாற்றல் கொண்டு விளங்கியதோடு மேடைப் பேச்சாளராகவும் காணப்படுகின்றார்.

இவ்வாறு இக் கலாமன்ற வளர்ச்சிக்கும் அதற்கு பாடுபடுபவர்களுக்கும் சிறந்த உரமாக பரமசாமி வடிவேல் அவர்கள் 2000ம் ஆண்டளவில் **இமையங்கள் இணைகின்றன** எனும் நாடகத்தை எழுதியும் தன் பங்கினை கலாமன்றத்தின் செழிப்பிற்கு வழங்கி வருகின்றார்.

1990 களில் கந்தையா சோதிதாசன் அவர்கள் **புதிய பாதை** எனும் நாட்டிய நாடகத்தையும் எழுதி பட்டி மன்றங்களையும் நடாத்தி இக் கலைஞர்களுக்கெல்லாம் உருவேற்றுவதைப் போல செயற்ட்டார்.

இவர்களுடன் கந்தையா வடிவேல் கவிதைகள் கட்டுரைகள் எழுதி நாடகங்களுக்கான பின்னணி பாடகராக பாடல்களை பாடியும் தன் பங்கினை கலாமன்றத்தின் செழிப்பிற்கு வழங்கி வருகின்றார். இக் கலாமன்றத்தில் முதன் முதலாக கதாநாயகனாக நடித்து பரிசில்களும் பதக்கத்தையும் பெற்று சிறந்த நடிகராக திகழ்பவர் செல்லையா சிவராசா ஆவார்.

இவ்வாறான கலை ஆர்வலர்களின் ஊக்கத்தினாலும் உந்துதலினாலும் 2014ம் ஆண்டில் பல்கலைக்கழக மாணவி செல்வி யாழினி அரியரட்ணம் கருகும் மொட்டுகள் எனும் குறியீட்டு யதார்த்த நாடகத்தை எழுதி மேடயேற்றியதோடு நடிகராகவும் காணப்படுகின்றார்.

**ஐயனார் கலாமன்றத்தின் நடிகர்கள்.(1980க்குப் பின்)**

| | |
|---|---|
| செ.சிவராச | கி.நாகராசா |
| க.பாலன் | பா.சித்ரவடிவேல் |
| சி.லிங்கருபன் | ப.தனபாலசிங்கம் |
| கி.அம்பிகைராசன் | ப.தம்பித்துரை |
| சு.தவநாயகம் | இ- இரத்தினகுமார |
| அ.அருட்பிரகாசம் | ப.கண்ணதாசன் |
| அ.ஜெயசுந்தரம் | சி.தயாளன் |
| அ.நிறோசன் | மா.மாரிமுத்து |

| | |
|---|---|
| அ.பாலசுந்தரம் | க.இராசரெத்தினம் |
| இ.வரதலிங்கம் | பா.கோபிநாத் |
| செ.கருணாகரன் | செ.செல்வன் |
| ச.சிறீதரன் | மு.சத்தியன் |
| லோ.இலட்சுமிகாந்தன் | மு.சிவநேசன் |
| லோ.இராஜன் | லோ.இன்பருன் |

**ஐயனார் கலாமன்றத்தின் இளம் கலைஞர்கள்**

| | |
|---|---|
| அ.ஆலசுந்தரம் | த.ஜனோச் |
| இ.பிரசாத் | ம.சடிமயூரி |
| அ.யாழினி | ந.ஜெயநிசா |
| இ.பிரதீபா | அ.லதாயினி |
| யே.மைதிலி | ந.ஜெசிந்தா |
| ந.குலதீபா | த.வதனிகா |
| சோ.தனீசன் | கு.வாகீசன் |
| சி.கரிகரன் | த.குபேரன் |
| த.சோபிகா | தி.கார்த்திகா |
| த.விதுசா | இ.விஜயசிறி |
| க.சோதிமலர் | ர.ஜனார்த்தனன் |

**<u>ஐயனார் கலாமன்றத்தின் தற்போதைய நிர்வாகத்தினர்</u>**

தலைவர் :- க.கந்தவனம்

உபதலைவர் :- செ.சிவராசா

செயலாளர் :- கு.வாகீசன்

உபசெயலாளர் :- சி.லிங்கருபன்

பொருளாளர் :- மு.பரமேவரன்

போசகர் :- ஆ.செல்வராசா

நிர்வாகசபை உறுபப்பினர்கள்

பா.சித்ரவடிவேல்

அ.இராசரெத்தினம்

அ.அருட்பிரகாசம்

ச.சிறீதரன்

அ.யாழினி

**<u>ஐயனார் கலாமன்றத்தின் கதாசிரியர்கள்</u>**

பொ.நகுலதாசன்

க -இராசரெத்தினம்

ப-வடிவேல்

பா- சித்ரவடிவேல்

க- பாலன

.







அ.யாழினி அ.ஜெயசுந்தரம அ.சோமசுந்தரம் திரு. க-பாலன க.குகனேஸ்வரநாதன்







.

க.வாகீசன் ம. பரமேஸ்வரன் பொ.நகுலதாசன் க-இராசரெத்தினம அ.அருட்பிரகாசம்







ப-சித்ரவடிவேல ப.வடிவேல இ.பிரதீபா எஸ்.லிங்கரூபன் ரி. விதுசா



நிமால்

# துறையூரின் முன்னாள் கலைஞர்கள்

சம காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்க்ககூடிய மூத்தவர்களிடமிருந்து அறியப்பட்ட தகவல்களின் அடிப்படையில் நமது முன்னைய சமூகத்தின் மத்தியில் கலைஞர்கள் பலர் தோற்றமெடுத்திருந்தார்கள் என்பதும் அவர்கள் பலதரப்பட்ட கலைத்திறன் கொண்டவர்களாக காணப்பட்டார்கள் என்பதும் தெரிய வந்திருக்கின்றது குறித்த கலைஞர்களது ஒன்றித்த முயற்சியினால் அரிச்சந்திரா, நல்லதங்காள், கருக்குமட்டை போன்ற நாடகங்கள் மேடையேற்றப்பட்டிருந்தமையும் ஆலயங்களில் இசைக் கச்சேரி நிகழ்வுகள் அரங்கேறியிருந்தன என்பதும் கோவில் திருவிழாக்காலங்களில் பல்வேறு வேஷங்களில் தோன்றி மக்களை மகிழ்விக்கும் நிகழ்வுகளையும் செய்து வந்தார்கள் என்பன போன்ற பல கலைத்துறை சார்ந்த தகவல்களை அறிய முடிகின்றது. அந்த வகையில் எமது விசாரிப்புக்குள் எட்டியமட்டில் முன்னாள் கலைஞர்களை பின்வருமாறு பட்டியலிடுகின்றோம்.

திரு முலகுடியர்

திரு நா. முத்துத்தம்பி

திரு பி. செல்லையா

திரு ஐ. சண்முகம்

திரு ச. கிருஷ்னன்

திரு ஐ. சின்னதம்பி

திரு செ. நரேந்திரம்

திரு மு. வினாசித்தம்பி

திரு கணபதி சின்னராசா

திரு நா முத்துலிங்கம

திருமதி பராசக்தி சின்னத்துரை( இசை வல்லுநர்)

.

இவர்களைத் தொடர்ந்து வந்த கலைஞர்கள்

திரு செ. சண்முகவடிவு

திரு ச. பாலச்சந்திரன்

திரு நா. சுப்பிரமணியம்

திரு க. சற்குணம்

திரு கா. இராசரெத்தினம் (கலையன்பன்)

இங்கு விபரிக்கப்பட்ட தகவல்களின்படி துறையூரில் கலைத்துறை மீதான நாட்டம் புதிதாக முளைவிட்ட ஒரு விடயமல்ல அது நம் மூத்தோர்களிடமிருந்து சந்ததி வழிவந்த கலை ஞானத்தின் வாசனையேயகும் என்பதில் ஐயமில்லை நமது காலத்தில் மெருகூட்டப்பட்ட கலை ஞானம் அடுத்து வரும் சந்ததியிடம் பக்குவமாக சென்றடைய வேண்டுமென்பதே எமது பேரவா என்பதனை வெளிப்படுத்தவதுடன் நமது மூதாதையர்களது கலை ஞானத்தை கௌரவப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டு இத் தகவலை இங்கு பதிவு செய்கின்றோம்.

தொபுப்பாளர்

துறையூர் காசி



# எமது சமூகத்தில் பெண்கள

*திருமதி சண்முகவடிவேல் மகேஸ்வரி—*

ஒரு சமூகம் என்கின்ற அமைப்புக்குள் ஆண்கள், பெண்கள், முதியோர், சிறுவர்கள் என்ற நான்கு தரப்பினரும் உள்ளடக்கப்படுகின்றனர். இதில் அங்கே காணப்படக்கூடிய அங்கத்தவர்களது எண்ணிக்கையின் அடிப்படையில் பெரிதும் சிறிதுமான குடும்பங்கள் காணப்படுகின்றன. துறையூர் சமூகத்தைப் பொறுத்த வரையில் பெருமபாலும் பெண்ணானவள் குடும்பத்தின் இயக்கத்துக்காக தன்னையே அர்ப்பணித்து செயற்பட்டு வருவதை மறைத்து விட முடியாது அந்த வகையில் பெண்கள் தமது குடும்பத்தில் ஏற்படுகின்ற வறுமை மற்றும் துன்பங்ளை நெருக்கடிகளை எதிர் கொள்ள வேண்டியவர்களாக இருக்கின்றார்கள். ஒட்டு மொத்தமாக எமது துறையூர் சமூகத்தில் குடும்பப் பெண்களது பாத்திரமானது மிகச் சுமை மிக்கதானதாக இருந்து வருகிறது. இதை மறு புறமாக கூறின் குடும்பத்தில் ஆண்களது பொறுப்பின்மை பெண்களின் மீதான குடும்ப பாரத்தை அதிகரிக்கின்ற நிலைமை காணப்படுகிறது இத்தகைய நிலைமைகள் மேலும் தவிர்க்க முடியாதபடி இளம் பெண்கள் கல்வி கற்கும் போக்கானது தடைப்படுகின்றது. இள வயதில் திருமணம் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. இவ்வாறான நிமைகள் சமூக வளர்ச்சிப் போக்கின் தடைக் கற்களாக இருந்து கொண்டிருப்பதை அவதானிக்கலாம். வறுமை போர்ச்சூழல் இடம் பெயர்வு நோய் நொடி போதிய வருமானமின்மை குடும்பத் தலைவனது அளவுக்கு மீறிய மதுபாவனை போன்ற காரணிகள் மேற் கூறியவாறான குடும்பங்களில் உள்ள பெண்களது வறுமைக்கும் துயரங்களுக்கும் வளர்ச்சியின்மைக்கும் காரணிகளாக அமைகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக 2009க்கு முந்திய போர்ச் சுழல்கள் பெண் சமூகத்தின் மீது அதிகமான பதிப்பை நிகழ்த்தியுள்ளது என்பது வெளிப்படையான உண்மை. துறையூர் கிராமத்தை பொறுத்த வரையில் மீளக்குடியமர்வு நிகழந்த பின்னால் பெண்கள் சமூகம் தொடர்பில் பலதரப்பட்ட பிரச்சனைகள் இருந்து கொண்டுதானிருக்கின்றன. பெண்களின் பிரச்சனைகள் தொடர்பில் அவர்களது வாழ்வாதார மேம்பாட்டுக்காக தொண்டாற்றிய சாந்தீக நிறுவனத்தினர் நமது சமூகத்தில் பல பிரச்சனைகளை இனம் கண்டு கொண்டுள்ளதாக குறிப்பிடடிருந்தார்கள். அவற்றில் குறிப்பாக மனைவி மீதான ஆண்களின் வன்முறை, கணவன் மனைவியருக்கிடையிலான புரிந்துணர்வின்மை,அளவுக்கு மிஞசிய மது பாவனை, பிள்ளைகளின் மீதான பெற்றோரின் அக்கறையின்மை, பெண்களுக்கான தொழில் வாய்ப்பின்மை, இளம் வயது திருமணங்கள், வறுமை போன்றவை பிரதான காரணிகளாக இனம் கண்டனர். குடும்பத்தில் பெண்கள் சுயதொழில் செய்வதற்கு அனுமதிக்கப்படாத நிலைமைகள் குடும்பத்தில் வறுமை நிலவுவதற்கான காரணிகளில் ஒன்றாக காணப்படுகிறது. ஆண்களின வருமானத்தில் மட்டும் தங்கி வாழும் காலாவாதியாகிப்போன குடும்ப அமைப்பு முறைகள் நவீன பொருளாதாரம் விளைவிக்கும் சுமைகளை தாங்கிக் கொள்ளமுடியாமல் வறுமையின் கோரப்பிடியில் சிக்கித்தவிக்கின்றன. இவ்வாறான பெண்கள் சமூகத்தில் இருக்க்ககூடிய பின்தங்கிய நிலைமைகளை வென்று கொள்வதற்கான வேலைத்திட்டங்களை சமூகத்தின் முன்னோடிகள் என்று இருக்க்கூடியவர்கள் முன்னெடுக்கவேண்டும். பெண்கள் மத்தியில் சமூக பொருளாதார மற்றும் கல்வி தொடர்பான விழிப்புணர்வுகளை விதைக்க வல்ல கலந்துரையாடல்கள் கருத்தரங்கங்கள் விவாத மேடைகள்

போன்றவற்றினுடாக பெண்கள் மத்தியில் நவீன சமூகம் பற்றிய புரிந்துணர்வினையும் தமக்கு எதிராக மேற்கொள்ளப்படும் அனைத்து வடிவங்களிலுமான வன்முறைகளை எதிர்த்து நிற்க்ககூடிய மனோ தையிரியத்தையும் தமது குடும்பம் மற்றும் தாம் சார்ந்த சமூகத்தின் முன்னேற்றத்தில் அவர்களுக்கு இருக்கக்கூடிய பங்களிப்பின் கட்டாயத்தன்மையினையும் அவர்கள் மத்தியில் ஊன்றி வளர்ப்பதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படுவது அவசியமாகும்.

இறுதியாக 1976- 1980 காலப்பகுதியில் சமூக வளர்ச்சிப் போக்கில் பெண்கள் கொண்டிருந்த ஈடுபாடு சமூக நலன் சார் அமைப்புக்களில் அவர்களது பங்களிப்பு ஆரவம் தம்மை முன்னெடுத்துச் செல்வதில் அவர்கள் காட்டிய அக்கறை துணிச்சல் தம்மை வளர்த்துக் கொள்வதற்கான துடிப்பு அந்தக் கால இளைஞர் யுவதிகளின் ஒன்றுபட்ட உழைப்பில் அழகாக பூத்தெழுந்த அந்த சமூக வடிவம் மீண்டும் தனது முகத்தை காட்டி வாசத்தை வீசவேண்டும் என்ற எனது ஆதாங்கத்தை இங்கு பதிவு செய்வதில் மன மகிழ்ச்சியடைகின்றேன்.

நன்றி

திருமதி சண்முகவடிவேல் மகேஸ்வரி—

## <u>நினைவில் மிதக்கும் நினைவலைகள்</u>

- *வேலணையூர் லிங்கா*

பனைவளம் குடைபிடிக்க.!!...

கடல்வளம் பணம் கொடுக்க...!

தென்றல்க் காற்று அரவணைக்க..!!

தென்னை மரங்கள் புன்னகைக்க ...!!

வேல் வந்து அணைந்ததினால் ..

வேலணை என்று பெயர் பொறிக்க..!!

மேற்குத் திசை நோக்கி பறக்கும் கிளிகளும்...!!

கிழக்குத் திசையை அலங்கரிக்கும்

ஆதவனின் கதிர்களும்....!!

தெற்குத் திசையில் தேன்றும்..!! எம்

மீனவ உறவுகளின் பாய்மர வள்ளங்களும்..!!

வடக்குத் திசைநோக்கி வளைத்து செல்லும்..

பேரூந்துகளின் வடிவங்களும்....

தோழமை கொண்ட துறையூர் ....

வேலணை மண்ணுக்கு பேரழகல்லவா !!

என்றும் நினைத்தால்...உள்ளம் இனிக்கிறது..

அங்கு உறவுகள் பரிமாறும் ..உணவுகளும் ருசிக்கின்றது !!!



**எழுந்து நிமிர்நத எமது துறையூர்**

அப்போது நாங்கள் எமதருமை துறையூர் மண்ணில் வாழ்ந்து கொண்டிருந்த காலம். எமது கிராமத்தின் சனசமூக நிலையம் சார்பாக இவ்வாறனதொரு மலர்த் தொகுப்பு வெளியிடப்பட்டது. அதனை திரு.சீவரத்தினம், திரு.அருள்சோதி மற்றும் திரு.கனகசபாபதி போன்றோர் முன்னின்று வெளியிட்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். அந்தமலரில் பல சமய கட்டுரைகளும் சிறுகதை,கவிதைகள் போன்ற ஒரு சில இலக்கியங்களும் மட்டுமே எழுதப்பட்டிருந்ததாக ஞாபகம். எமது கிராமம் பற்றிய வரலாற்று பதிவுகளை அதில் காணக்கிடைக்கவில்லை. அந்த மலருக்கு பின்னர் எமது மண்ணின் கதைகளை நாம் வாழ்ந்த வரலாறை எமது இளமைக்கால நினைவுகளை மீட்டு எமது புதிய சந்ததிகளுக்கு கையளிக்கும் ஒரு வாழ்வியல் கடமையாக இம்மலர் தொகுக்கப்படுவது முக்கியமானதொன்றாகும்.

அந்த வகையில் நானும் சுமார் முப்பது வருடத்துக்கு முன்னரான எமது துறையூர் கிராமத்தின் விளையாட்டுக்கள் அபிவிருத்தி பணிகள் இளைஞர் குழாத்தின் முன்முயற்சிகள் பற்றி எனது நினைவுகளை மீட்டு இம்மலரூடாக பதிவு செய்ய முனைகின்றேன்

யாழ்.குடாநாட்டுடன் இணைந்தும் பிரிந்தும் கிடக்கின்ற தீவு கூட்டத்திலே வேலணைத் தீவு என்பது முக்கியமானதொன்றாகும். இந்த வேலணைத்தீவின் தென்முனையில் அமைந்திருப்பதே துறையூர் என்னும் எமது கிராமமாகும். கடலும் கடல்சார்ந்த சுவாத்தியமுமாக இயற்கையின் அழகு குவிந்து நிற்பது துறையூர். நானிலங்களில் ஒன்றான நெய்தலின் வடிவம் இதுவன்றோ என்று காண்போர் வியந்து நிற்கும் வண்ணம் கண் கொள்ளா காட்சிகள் கொண்டது இந்த துறையூர். கல்வியுடன் செல்வமும் கடவுளார் கோயில்களும் எமது துறையூரின் கிராமிய சூழலுக்கு மேலும் அழகு சேர்ப்பன. எமது கிராமத்தின் முன்னேற்றத்திற்கு எமது முன்னோர்கள் பலவித பங்களிப்புகளை வழங்கி சென்றிருக்கின்றனர். எங்கள் ஊரில் இருக்கின்ற பழமை வாய்ந்த ஐயனார் ஆலயம் முக்கியத்துவம் வாய்ந்ததொன்றாகும். அதன் பெயருடன் இணைந்தே ஐயனார் சனசனசமுக நிலையம், ஐயனார் விளையாட்டுக்கழகம், துறையூர் ஐயனார் கலாமன்றம் போன்ற அனைத்தும் அழைக்கப்படலாயின. 1970ம் ஆண்டின் பின்னரான காலப்பகுதியில் நானும் இவ்வமைப்புகளில் இணைந்து செயற்பட்ட நினைவுகள் என்றும் என் நெஞ்சை விட்டகலாதவை.

அதேபோன்று எமது கிராமத்துக்கு ஒரு பாடசாலை அமைக்க வேண்டி காணித்தேவை ஏற்பட்டபோது திரு.ஐ.கார்த்திகேசு ஆசிரியர் அவர்கள் தனது சொந்த காணியொன்றை கொடுத்து அத்தேவையை பூர்த்தி செய்தார். அதுமட்டுமன்றி அவரே முன்னின்று கட்டிட பணிகளை முன்னெடுத்ததோடு ஐயனார் வித்தியாசாலை என பெயரிட்டு அவரும் அவரது சகோதரர் திரு ஐ. நாகநாதன் ஆசிரியர் அவர்களும் பெரும் பணியாற்றினார்கள். இவர்களைப் போன்றே திருவாளர்கள் இராமலிங்கம், வேலாயுதபிள்ளை, ஆ.சண்முகம், விநாசித்தம்பி, சாந்தலிங்கம், சிவசம்பு சண்முகவடிவு, சி.தணிகாசலம், செ.காசிலிங்கம் கலையன்பன் இராசரெத்தினம், செ. நடேசன் போன்ற பலர் எமது கிராமத்தின் அபிவிருத்திக்கு அந்தந்த காலங்களில் பெரும் பணியாற்றி உள்ளனர். இவர்களை நாம் என்றும் மறந்து விட முடியாது.

உதைபந்தாட்டத்தில் துறையூர் ஐயனார் விளையாட்டுக்கழகம் பல வெற்றிகளை ஈட்டி வந்தது. தொடக்க காலங்களில் உதைபந்தாட்டத்திற்கான பந்து ஒன்றை வாங்குவதற்கு கூட எமது இளைஞர்களுக்கு வசதி இருக்கவில்லை. அப்படியான வேளையில் எமது கிராமத்து வள்ளல் மனம்கொண்ட பெரியவரான திரு.செல்லதுரை சாந்தலிங்கம் அவர்கள் முதல் பந்தை வாங்கித்தந்து எமது இளைஞர்களை ஊக்குவித்தார். பின்பொரு தடவை பெரியவர் சின்னத்தம்பி தணிகாசலம் அவர்களும் பந்தினை வாங்கி தந்ததோடு மட்டுமல்ல விளையாட்டு கழகத்தோடு தொடர்புகளை ஏற்படுத்தி தொடர்ச்சியான ஊக்குவிப்புகளை வழங்கி வந்தார். எங்களது காலத்தில் நன்றாக உதைபந்தாட்டம் விளையாடக்கூடியவர்களாக பலர் வளர்ந்திருந்தனர். அவர்களில் திரு பே.ஸ்ரீஸ்கந்தராஜா, ராசன், நாதன், பாலேந்திரன்(பந்து காப்பாளர்), பொன்னம்பலம்(பந்து காப்பாளர்), இராமலிங்கம் மகேந்திரன், தேவதாசன், மனோகரன், திரு செ.காசிலிங்கம், திரு.ஐ.பாலச்சந்திரன், திரு த. இராசரெத்தினம்(வேவி), திரு.இ.தியாகராஜா, திரு.செ.சீவரெத்தினம் திரு.வே.கனகசபாபதி ,திரு.ச.அருள்சோதி ,திரு க.சாந்தலிங்கம் திரு.சி.ராதாகிஸ்ணன், திரு..கசந்திரசேகரம் அமரர் செ. செல்வலிங்கம், தீ ஆ..ராசா, திரு.செ.செலவரெத்தினம், திரு.சு.செலவராஜா என்பவர்கள் ஞாபகத்துக்கு வருகின்றனர். இன்னும் பலரின் பெயர்கள் என் நினைவுகளில் இருந்து மீட்க முடியாதுள்ளனர். அவர்கள் என்னை மன்னிக்க.

ஐயனார் சனசமுகநிலையத்தின் சார்பில் கிராமத்து மக்கள் எல்லோரையும் பங்குபெற செய்வதற்காக வருடாந்த இல்ல விளையாட்டுப்போட்டியையும் நடத்தினோம். அவை 1978-1979ம் ஆண்டுகளில் நடந்ததாக எண்ணுகின்றேன். முதலாவது வருடத்தில் சண்முகவடிவு மாஸ்டர் தலைமையிலும் நடேசன் அவர்கள் அனுசரணையுடனும் அவை இடம்பெற்றன. இரண்டாம் முறை கனகசபாபதி மாஸ்டர் சிவரெத்தினம் மாஸ்டர் மற்றும் நடேசன் ஆசிரியர் போன்றோர் தலைமையில் இல்லவிளையாட்டுபோட்டி இடம்பெற்றது. இப்போட்டிகளில் எமது துறையூர் கிராமத்து மக்கள் மட்டுமன்றி அக்கம் பக்கத்து கிராம மக்களும் இணைந்து கொண்டார்கள். ஒரே வீட்டில் வசிக்கும் தாய் தகப்பன் பிள்ளைகள் எல்லோரும் வெவ்வேறு இல்லங்களில் பங்களித்து மிகவும் கோலாகலமாக இவ் இல்லவிளையாட்டு போட்டிகள் நடந்தன. இவ்வில்லங்களுக்கு தலைவர்களாக சி.பாலச்சந்திரன், இ.தியாகராஜா வேவி என்றழைக்கபடும் த. இராசரெத்தினம் போன்றோர் இருந்தனர். அந்த காலங்களுக்கு பின்னர் அதுபோன்ற தொரு நிகழ்வு மீண்டுமொருமுறை எமது கிராமத்தில் நிகழ்ந்ததை அறியமுடியவில்லை.

இங்கு குறிப்பிடவேண்டிய ஒரு முக்கிய தகவல் என்னவென்றால் சனசமுக நிலைய பணிகள் ஆகட்டும் விளையாட்டுக்கள் ஆகட்டும் அனைத்திலும் துறையூர் பெண்கள் முன்னின்று செயட்பட

தவறவில்லை. அவர்களில் இராசேஸ்வரி, மகேஸ்வரி, லோகேஸ்வரி ஆகியோர் மிகவும் முக்கியமானவர்களாயிருந்தனர்.

சனசமுக நிலையத்துக்குள் இருக்கும் நூல் நிலையத்துக்கு புதிய புத்தகங்களை வாங்க வேண்டும் என நானும் இராசரெத்தினம், தவசோதி போன்றோர் முயற்சி எடுத்தோம். அந்த முயசிக்கு சி.கார்த்திகேசு அவர்கள் தன்னுடைய சொந்தமான வீட்டு அலுமாரியில் இருந்த புத்தகங்களை எமக்கு மனமுவந்து தந்து பெரும் ஊக்கமளித்தார்.

அதே போன்று துறையூரின் அபிவிருத்திக்காக பல சங்கங்கள் பல சமூகநல வேலைகளை முன்னெடுத்து வந்தனர். அவற்றில் காசியண்ணன் தலைமையிலான நல்லொழுக்க வாலிபர்சங்கம் சர்வோதயம் போன்றன முக்கியமானவையாகும். நல்லொழுக்க வாலிபர் சங்கம் ஊடாக கடல் தொழில் செய்பவர்களுக்கு கடன் உதவி சிலசெய்தோம். அதே போன்று பெண்களுக்கான தையல் பாடசாலைகளை உருவாக்கி தையல் மெசின்கள் சிலவாங்கியும் உதவிகள் செய்தோம். இதனால் பல பெண்கள் பயனடைந்தனர் என்பதுவும் உண்மை. சர்வோதயம் கிராமத்து வீதிகளை அகலப்படுத்தியும் ஓரங்களில் மரங்களை நட்டும் இளம் சமுதாயத்தினர் மத்தியில் சூழல் பாதுகாப்பு பற்றிய விழிப்புணர்வுகளை ஏற்படுத்தினர். அத்தோடு சிறுவர் பாடசாலைக்கான கட்டிடம் ஒன்றையும் துறையூர் பாலகர்களுக்காக உருவாக்கினர். இப் பாடசாலையை அமைப்பதற்காக ஆயுர்வேத வையித்தியர் வி.நாசித்தம்பி அவர்கள் தனது காணியினை அன்பளிப்பு செய்தார். சர்வோதயத்தில் லோகேஸ்வரி, இராஜேஸ்வரி போன்றோர் பொறுப்பளர்களாக இருந்தனர் அவர்களோடு இணைந்து மஞ்சுளாதேவி (பட்டு) போன்றோருடன் தேவதாஸும் நானும் செயற்பட்டோம். சர்வோதயத்துக்கான கட்டிடத்தினை அமைப்பதற்கு திரு.வினாசித்தம்பி அவர்கள் காணியினை வழங்கியிருந்தார்.

எங்களது சனசமுக நிலையத்து கட்டடம் மிகவும் மோசமான நிலையில் இருந்தமையால் அதனை திருத்துவது அல்லது புதியதாக கட்டுவது அவசியமாயிருந்தது. எனவே புதியதொரு கட்டம் கட்டுவதற்காக கிராமத்து மக்களிடையே நிதி சேகரிப்பில் ஈடுபட்டோம். அவ்வேளை பொருளாளராக இருந்த நான் வெளிநாடு செல்லும் பயணம் சரிவந்தது. எனவே நிர்வாகத்திலிருந்த கா.இராசரெத்தினம், சி.தவச்சோதி போன்றோரிடம் எனது பொறுப்புக்களை ஒப்படைத்தேன்.

நான் பிரான்ஸ் வந்தடைந்த பின்னரும் எனது நினைவலைகள் எமது ஐயனார் சனசமுக நிலைய கட்டிடத்தை சுற்றிய வண்ணமே இருந்தன. புதிய கட்டடம் கட்டப்பட்ட பின்னர் சந்திரசேகரம், செல்வரெத்தினம், ராதாகிருஸ்ணன் ஆகியோரை கொண்ட புதிய நிர்வாகமும் உருவாக்கப்பட்டு சனசமுக நிலையம் சிறப்பாக இயங்குவதை அறிந்த போது மிக மகிழ்ச்சியுற்றேன். அவர்களை தொடர்ந்து தில்லை சிவம் சோமசுந்தரம் கிறிஸ்ன மூர்த்தி ( மாம்பழம் ) ஆகியோர் நிர்வாகத்தை பொறுப்பேற்று நடாத்தினர்.

வெளிநாடு வந்து சேர்ந்த நீண்டகால இடைவெளிக்கு பின்னர் பிரான்சில் வாழும் துறையூர் கிராமத்து மக்கள் எல்லோரும் ஒன்றிணைந்து காசி அண்ணன் தலைமையில் துறையூர் அபிவிருத்தி அமைப்பு ஒன்றை உருவாக்கினோம். ஆசிரியர் திரு செ.சண்முகவடிவேல் அவர்கள் பொறுப்பாயிருந்த சனசமூக நிர்வாகத்துடன் தொடர்பு கொண்டு ஒரு வருட காலம் சிறுவர் பாடசாலை ஆசிரியர்களுக்கான மாதாந்த வேதனத்தினை அனுப்பி வந்தோம். எனினும் எமது இந்த சமூக நலத்திட்டத்தில் தமிழீழ விடுதலைப் புலிகள் குறுக்கிட்டதன் விளைவாக குறித்த வேலைத்திட்டத்தினை எம்மால் தொடர முடியாமல் போனது..எனவே தொடர்ந்து பணம்

அனுப்புவதை நிறுத்திக்கொண்டோம். ஏனெனில் எமது பணம் மக்களின் அபிவிருத்திக்காக செலவிடப்படும் என்கின்ற நம்பிக்கை எமக்கிருக்கவில்லை.

பின்னர் சிறிது காலத்தின் நாங்கள் சண்முகம், இரங்க நாயகம், செல்லத்துரை புனையன் பாலச்சந்திரன் போபிநாத் என்பவர்களுடன் தொடர்புகளை மேற்கொண்டு விளையாட்டு மைதான புனரமைப்பு வேலைகளை செய்தோம். அத்தோடு கல்வி வளர்ச்சி கருதி ஏதாவது செய்ய எண்ணினோம். அதற்காக 2005ம் ஆண்டு சந்திரசேகரம் இலங்கை சென்று திரு யோ.நந்தரூபன் மாஸ்டருடன் ஆலோசனை செய்து பகுதி நேர கல்வியகம் ஒன்றை அமைப்பது பற்றி முடிவெடுக்கப்பட்டது. அதனடிப்படையில் அந்த கல்வியகம் உருவாக்கப்பட்டு சுமார் ஐந்து வருடங்கள் அத்திட்டத்தை செயல்படுத்தினோம். அதுமட்டுமன்றி துறையூருக்கு வெளியே வேறு கிராமங்களில் இருந்து கல்வியகத்துக்கு வரும் மாணவர்களுக்கும் பண உதவிகள் செய்தோம். பின்னர் கல்வியகத்தை பொறுப்பாக நின்று நடத்தியவர்கள் துறையூரை விட்டு வேறு இடங்களுக்கு சென்று விட நேர்ந்ததால் அந்த செயல்பாடு நின்று போனது.

ஆனாலும் இன்றும் எமது ஐயனார் வித்தியாலய அதிபருடன் தொடர்பு கொண்டு பாடசாலையிலேயே மாலைநேர வகுப்புகளை நடாத்துவதற்கு உதவி செய்து கொண்டேயிருக்கிறோம். இன்றைய நிலையில் எமது துறையூர் கிராமம் பல கல்வியாளர்களையும் வசதிபடைத்தவர்களையும் கொண்டிருக்கிறது. ஆனாலும் கிராமத்தின் அபிவிருத்தியென்பது மந்த கதியிலேயே இருக்கிறது. எமது விளையாட்டு கழகங்களுக்கு கடல் தொழில் சங்கமே ஒரு சில உதவிகளை செய்து வருகிறது. ஆனால் எமது காலங்களில் இதுபோன்ற உதவிகள் எமக்கு கிடைக்கவில்லை. இப்போது உலகம் சுருங்கி விட்டது. இன்று உள்ள தொடர்பாடல் வசதிகள் எமது கிராமத்து குழந்தைகளையும் எட்ட செய்ய வேண்டும்.கணணி துறையில் பயிற்சிகளும் தேர்ச்சிகளும் மிக்கவர்களாக எமது குழந்தைகள் உருவாக நாம் ஆவன செய்ய வேண்டும் விளையாட்டு மற்றும் சனசமுக வேலைத்திட்டங்களில் பெண்களின் ஈடுபாட்டை அதிகரிக்க வேண்டும்.

கடந்த முப்பது ஆண்டு கால யுத்தம் எமது மக்களின் வாழ்வில் பெரும் துன்பங்களையும் துயரங்களும் தந்து விட்டு சென்றிருக்கிறது. நாம் எமது மண்ணை விட்டு புகலிட தேசங்களுக்கு இடம்பெயர்ந்த போதிலும் எமது மக்களுக்கு எம்மாலான உதவிகளை செய்துவந்துள்ளோம், செய்து வருகின்றோம். அதே போன்று உலகின் பல்வேறு நாடுகளிலும் வாழுகின்ற எமது கிராமத்து உறவுகள் எல்லோரும் ஒன்றிணைந்து நமது மண்ணில் வாழும் மக்களுக்கு எம்மாலான உதவிகளை நமது கடமைகளாக எண்ணி தொடர்ச்சியாக செய்யவேண்டும்.

இறுதியாக எங்களுடன் இணைந்து பழகி எமது கிராமத்தின் அபிவிருத்தி பணிகளில் எம்மோடு கைகோர்த்து இன்று சுகவீனமுற்றிருக்கும் நண்பர் கணபதி சண்முகம் அவர்களையும் எங்களை விட்டு மறைந்துவிட்ட நண்பன் கந்தையா நாகராசா (பிரபா) அவர்களையும் நினைவு கூர்ந்து இக்குறிப்புகளை

முடிக்கின்றேன்.

துறையூர் அன்பன்

செ.சுந்தரலிங்கம்(தங்கம்)




துறையூரில் வரட்சிக்காலத்தின் போது சிறி லங்கா கிராமிய மக்கள் ஒன்றியம் மேற்கொண்ட இலவச குடி நீர் விநியோகத்தின் போது 2012




## <u>துறையூர்-- பெயர் வந்த கதை</u>

வேலணைக் கிராமத்தின் எல்லைக்குட்பட்ட ஒரு கரையோரப்பகுதி துறையூர் என பெயர் பெற்ற வரலாற்றினை இங்கு சொல்லிவைக்கப்பட வேண்டிய கடமைப்பாடுடையவனாகின்றேன். ஒரு கால கட்டத்தில் மேல் சாதிக்காரர்கள் என தம்மை அடையாளப்படுத்தியவர்களால் துறையுர் மீனவர் சமூகம் அடக்கி ஆளப்பட்டு வந்திருந்தது என்பதை எமது முன்னோர்களது வாய் மூல வரலாறுகளில் கேட்டறிந்த செய்திகளாகும். தொடர்ச்சியான போராட்டங்கள் மூலமே அத்தகைய மேலாதிக்கத்திலிருந்து நமது சமூகம் விடுபட்டது என்பது தான் உண்மையான வரலாறு. குறித்த வரலாற்றுப் போக்கில் எனது காலத்தில் நிகழ்ந்த மாற்றத்துக்கான முன்னெடுப்புக்கள் தொடர்பில் எனது அறிதலுக்கு எட்டிய வரை எழுத விரும்புவதுடன் இந்த மாற்றங்களுக்கான நிகழ்வுப் போக்கில் துறையூர் என்ற பெயர் ஏன் வந்தது, எப்படி வந்தது என்பதை எழுத்து வடிவத்தில் வைக்க வேண்டிய கடமையும் எனக்கு உள்ளதாலும் தற்கால மற்றும் எதிர்கால இளைஞர்களுக்கும் யுவதிகளுக்கும் இத்தகைய தகவல்கள் தேவை என கருதுவதாலும் அவை பற்றி சுருக்கமாக விபரிக்கின்றேன்.

வேலணைக்கிராமத்தின் தெற்கு கரையோரமாக அமைந்துள்ள நாம் வாழும் பிரதேசம் வேலணை தெற்கு, வேலணை மேற்கு, வேலணை கிழக்கு ஆகிய முகவரிகளுடன் 4ம், 6ம் வட்டாரங்களுக்குள் அடங்கியதாக அமைந்துள்ளது. எமது 4ம் வட்டாரத்தின் ஒரு பகுதியும், 6ம்

வட்டாரத்தின் ஒரு பகுதியும் உள்ளடங்கியதாக இருந்து வருகின்றது. எமது பகுதிக்குள் ஒன்றிணைந்த பகுதியாக பனம் பொருள் உற்பத்தியினை பாரம்பரிய தொழிலாக கொண்டு வாழும் சமூகமும் காலாகாலமாக சுமுகமான உறவுகளுடன் கூடி வாழ்ந்து வந்ததே வரலாறாகும். என்னைப் பொறுத்த வரையில் துறையூர் கிராமத்து எல்லைக்குள் இவர்கள் வாழும் நிலப்பரப்பும் அடக்கப்படுகின்றது. கடற்றொழிலை பாரம்பரிய தொழிலாக கொண்டிருப்பவர்களாகிய நாமும் பனம் பொருள் உற்பத்தியினை பராம்பரிய தொழிலாக கொண்டிருப்பவர்களும் துறையுர் கிராம வாசிகளேயாகும். இந்த இரண்டு சமூகமும் நீண்ட நெடிய காலமாக சகோதரத்துவத்துடன் வழ்ந்து வந்தது, வாழ்ந்து வருகிறது தொடர்ந்தும் இந்த சகோதரத்துவமும் அந்நியோன்னியமும் நிலைத்திருக் வேண்டும் என்பதே எனது பெரு விருப்பாகும். சாதிய குறியீட்டை முதன்மைப்படுதி நாம் வாழும் பிரதேசத்தினை குறியிட மேல் சாதியினர் என அழைக்கப்படுபவர்கள் முயற்சித்து அந்தக் குறியீட்டினை வழமைப்படுத்தி வந்தனர். முகவரிகளைப் பொறுத்த மட்டில் வேலணை தெற்கு 4ம் வட்டாரம், வேலணை மேற்கு 6ம் வட்டாரம் என வழக்கத்தில் இருந்த போதிலும் போச்சு வழக்கில் சாதிய குறியீட்டை அடையாளப்படுதும் போக்கு விரிசல் அடையத் தொடங்கிய நிலைமைகள் எனது அவதானத்துக்குள்ளானது . காலம் காலமாக குறித்த அடையாளப் பெயர் வழக்கில் நிலைத்து விடுமோ என்ற அச்சம் என் மனதில் உருவெடுத்தது அப்படியான சாதிய அடையாளம் எமது ஊரினை அடையாளப்படுத்துவதை அடியோடு வெறுத்தேன் இதை அடியோடு அழித்து விட வேண்டுமென்ற எண்ணம் என் அடி மனதில் உரம் பெறத்தொடங்கியது அப்போது என் எண்ணத்தில் மின்னலென தோன்றியதுதான் துறையூர் என்ற அழகானதும் அர்த்தமுள்ளதுமான பெயர்ச்சொல் துறையூர் என்ற பெயரை ஏன் நமது ஊருக்கு பெயரிடக்கூடாது என்ற சமூக அக்கறையோடு கூடிய எண்ணம் என்னுள் இருந்து வீச்சுடன் எழுந்தது. மிகவும் பொருத்தமானதும். அழகானதுமான துறையூர் என்ற பெயர் எமது ஊருக்கு மிகவும் பொருத்தமாக இருக்குமென தீர்மானித்தேன். அந்தக் கணம் தொட்டு குறித்த துறையூர் என்ற பெயரினை நமது சிற்றூருக்கு நிலைப்படுத்தும முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டேன். அந்த கால கட்டத்தில் துறையூர் ஐயனார் சன சமூக நிலையத்தின் செயலாளராகவும் துறையூர் ஐனார் கலாமன்றத்தின் செயலாளராகவும் இருந்ததன் பயனாக நிலையத்தில் இருந்து வெளியேறும் கடிதங்கள் யாவும் வேலணை தெற்கு துறையூர், வேலணை மேற்கு துறையூர் என விலாசமிடப்பட்டு அனுப்பப்பட்டு வந்தது தொடரச்சியான இந்த முயற்சியின் விளைவாக உள்வரும் கடிதங்களும் துறையூர் என விலாசமிடப்பட்டவையாக வரத் தொடங்கின. துறையூரில் இருந்த பொது அமைப்புக்கள் யாவும் துறையூர் என்ற பெயரினை தாங்கிக் கொண்டன. அந்நாளில் துறையூர் ஐயனார் கலாமன்றம் யாழ் மாவட்டம் எங்கும் பிரபல்யம் அடைந்த மன்றமாக இருந்தமையால் துறையூர் என்ற பெயரும் பிரபல்யம் அடைந்தது. தொடர்ந்து 1977 ன் முற்பகுதியில் ஊர்காவற்றுறை கடற்றொழிலாளர் சங்கத்தில் பணியாளராக நான் இணைந்ததும் அச சங்கத்தின் கடித தெடர்பு பொறுப்பாளராக இருந்ததும் துறையூர் என்ற பெயரை நிலைப்படுத்த பெரும் வாய்ப்பாக அமைந்தது. இவ்விதமாக எமது கிராம மக்களது பூரணமான ஒத்தாசையுடன் மேற்கொண்ட கடும் கூட்டுப் பிரயத்தனத்தின் விளைவே துறையூரின் தோற்றமும் எழுச்சியுமாகும்.

## <u>அன்று அழகிய சிற்றூரான துறையூரில் என் கண்கள் நோக்கியவை</u>

அழகிய பரந்த கடல் மாதா அன்னை போன்று ஊர்மக்கள் உழைப்பதற்கு ஒத்துழைத்தாள். ஊர் மக்கள் செய்யும் தொழிலின் தெய்வமாக விளங்கும் கடல் அன்னை ஊருக்கு அழகு சேர்க்க,

தொடர்ந்து ஓங்கி வளர்ந்த பனை மரங்களும் அழகிய தென்னை மரங்களும் பாதி மக்களின் பசிபோக்கியது. அழகிய கடல்மாதாவும் பங்குகெடுத்து காத்து வந்தாள் துறையூர் நன்மக்களை

இயற்கை வளத்திலும் வனப்பிலும் கல்வியிலும் குறைவின்றி சிறந்து விளங்கியது வேல்கிராமம். இருப்பினும் கொழுத்தும் வெய்யிலில் குடுகுடுவென பாதணிகளின்றி கல்வி பயில விரையும் சின்னஞ் சிறுவர்கள்.

விழுதுகள் தாங்க கிளைபரப்பி நிழல்தரும் ஆலமரத்துடன் அழகாக காட்சிதரும் வசகர்சாலை. எழிமையான மைதானம் முன்னே எழில்மிகுந்த முருகன் ஆலயம். அருகே அரசமரமும் புன்னமைரமும் சாமரம் வீச குழிர்ந்த கேணியின் அருகே ஐயப்பன் ஆலயம். சேமிப்புக்கும் வாசிப்புக்கும் வழிகாட்டும் சிறு சர்வோதயம் இடையே சுகாதாரம் விசாரிக்க தாதி பாலா பிரவேசிப்பதை நோக்குகிறேன்.

சுள்ளென்று சுடும் வெய்யிலை பொருட்படுத்தாது துவிச்சக்கர வன்டியில் வேலை முடிந்து வீடுதிரும்பும் மேசன் தொழிலாழர்கள் காட்சி மறக்கமுடியாதவை!

இருபது ஆண்டுகளுக்கு முன்னால் வீசிய அந்த உப்புக்காற்றை சுவாசிக்க மீண்டும் என் இதயப் பறவை என் ஊர்க் கூரைகளை நோக்கி பயணிக்கிறது. எட்டுமணியானால் தொட்டால் ஒட்டிக்கொள்ளும் இருட்டு தூரத்து வெளிச்சம். புல் வளராமல் கல் வளரும் அந்த மைதானம் அதில் உதிரம் கசியும் கால்களோடு ஓடியிருக்கிறேன். தேன்கொள்ளப்போகும் எறும்புகளுக்கு தேனே சமாதியாகிவிடுவது மாதிரி என் கால்களையும் உடைத்திருக்கிறேன். ஆனால் சந்தோசத்தின் உச்சிகளை எட்டியிருக்கிறேன் நிற்க

கடலில் குழித்துவிட்டு தென்னந்தோப்பில் தலையுலர்த்தும் தென்றல். தென்னங்கீற்றில் அணில்களின் சடுகுடு விளையாட்டு!

ஆர்மோனியம் இல்லாமலேயே சுதியோடு பாடும் குயிலிகள். தன்வாயில் கூழாங்கற்களை போட்டு பேசிக்கொன்டாலும் குரல்வளம் மாறாத காக்கைகள். அருகே பூவரசு அதன் அருகே ஆடம்பரமாக அருழிச்செடி அணிவகுத்துநிற்கும் கோரை புற்கள்.

வழிமாறாமல் அணிவகுக்கும் கண்ணாக்காட்டு கடலலை ஓசைகள். இந்த இயற்கை தந்த சீதனங்களோடு அமைந்த அந்த பாடசாலை இவைகளெல்லாம் என் சுவாச அறையின் சுதந்திரக்காற்றை நிரப்பியவை அன்று.

இதையும்தாண்டி என் இதயம் வலித்துக்கொண்டே நினைக்கும் சிலநினைவுகள். தோழர்கள் தோழிகளாய் ஆனந்தமாக கதைபேசிக்கொண்டே கோயிலுக்கு போகும் போது வாசலில் தோழர்கள் நிற்க்க நான் மட்டும் உள்ளே நுழைந்த ஞாபகம். குளிக்கும் கிணற்றிலும் குடிநிர் எடுக்கும் இடத்திலும் என் நண்பர்களை பிரிந்து சென்றது என் மனதை உலுப்பியது.

கடந்த காலத்துக்கு சொடுக்கெடுக்கும் இந்த கசப்பான அனுபவத்தின்போது கண்களில் பாதியும் இதயத்தில் மிகுதியும் மூடிக்கொள்ளும் வருகிறேன்!.

நாம் வறுமைக்கோட்டிற்கு கிழே இருப்பதை பற்றியே வருந்ததெரியாத சில மனிதர்கள் கோயில் மணலில் என் தோழர்களுக்கு கோடு கிழித்ததை நினைத்தால்! அப்போது அழுத கண்ணீருக்காய் இப்போது சிரிப்பு வரும்! அப்போது சிரித்த சிரிப்புக்காய் இப்போதும் கண்ணீர் வரும்!.

எம் ஊரில் நோயால் மரித்தவர்களை விட அறியாமையால் செத்தவர்களே அதிகம். இவ் அறியாமை நிங்கவேண்டும் என்பதே எனது ஆவல் காலகாலமாக அழுத்தி கிழிக்கப்பட்ட இக்கோடுகளை அழிக்க முனைவோம்.

இப்படிக்கு

சன்முகம் வரதராசன்.



## செல்லையா சிவராசன் அவர்கள்

துறையூர் ஐயனார் கலா மன்றத்தினை தூக்கிப்பிடித்திருந்த பிரதான தூண்களில் ஒன்றாக விளங்கி அதன் ஆரம்பம் தொட்டு இன்று வரை மன்றத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் தலை சிறந்த நடிகன் செல்லையா சிவராசன் தனக்குப் பின்னான காலத்திலும் துறையூர் கலாமன்றம் ஓங்கி வளர வேண்டும் என்ற எண்ணப்பாட்டோடு இன்று வரை அதனோடு தன்னை இணைத்துக் கொண்டும் உழைத்துக் கொண்டுமிருப்பவன். தனது சிம்மக்குரலாலும் எடுப்பான பாவத்துடன் கூடிய கம்பீரமான நடிப்பாலும் கலாமன்றத்தின் அனைத்து படைப்புக்களிலும் முத்திரை

பதித்தவன் என்பதை எவருமே மறுக்க முடியாத உண்மையாகும் . இவரது நடிப்பாற்றலின் பயனாக துறையூர் கலாமன்றத்தின் உடன் பிறப்பு நாடகம் அகில இலங்கை நாடகப் போட்டிகளில் பல தடவை சிறந்த நடிகருக்கான விருதுகளை தனதாக்கிக் கொணட வரலாற்றுப்பதிவுகள் மறக்கப்பட முடியாதவை



## கிருஷ்னன் நாகராசன் அவர்கள்

துறையூர் கலாமன்றத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தவர்களது பட்டியலில் கிருஷ்னன் நாகராசா அவர்களும் ஒருவராக இருக்கிறார். தனது கம்பீரமான நடிப்பினால் ஏற்கும் பாத்திரங்களுக்கு உயிருட்டி துறையூர் கலாமன்றத்தின் படைப்புக்களை பிரகாசிக்க செய்த சிறந்த நடிகன். இயற்கையாகவே இவரிடம் அமையப்பெற்ற நடிப்பாற்றல் எமது வீச்சான வளர்ச்சிக்கு ஒரு காரணியாக விளங்கியது என்பதை இப்பதிவின் மூலம் வெளிப்படுத்துவதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

## திரு நா செல்லத்துரை அவர்கள்

எனது பாலிய நண்பர்களில் ஒருவர் நாடக உருவாக்கத்தின் மீது ஆர்வம் ஏற்பட்டிருந்த கால கட்டத்தில் அத்தகைய எண்ணப்பாட்டிற்கு வடிவம் அமைக்க முற்பட்ட காலத்தில் எனக்கு தோள் கொடுத்து நின்ற நல்ல நண்பர். எமது முதல் நாடகமான யார்குற்றவாளி நாடகத்தில் மாயாண்டி பாத்திரமேற்று சிறப்பாக நடித்திருந்தார். எமது கலைப்பயணத்தின் தொடக்க காலத்தில் எம்முடன் கூட இருந்த அவரை இந்த பதிவின் மூலம் நினைவு கொண்டு கௌரவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

## திரு பா கணேசலிங்கம் அவர்கள்( மகேந்திரன்)

...துறையூர் கலாமன்றத்தின் நாடகங்கள் அனைத்திலும் பெண் வேடத்தில் நடித்த பல நடிகர்களில் முதன்மையானவர் என்று திரு பர் கணேசலிங்கம் அவர்களை குறிப்பிடலாம். ஒரிரு அரங்குகள் தவிர உடன் பிறப்பு மேடையேறிய அரங்குகள் அனைத்திலும் தங்கை பாத்திரம் ஏற்று நடித்து வந்தவர். தனது திறமையான நடிப்பினால் தங்கை பாத்திரத்திற்கு மெருகூட்டி நாடகங்களது வெற்றிக்கு காரணமாகவிருந்தவர். பாரிய குடும்ப பொறுப்புக்கள் மத்தியிலும் நாடக ஒத்திகைக்கென ஒதுக்கப்படும் நேரம் காலம் எதுவானாலும் தவறாமல சமூகம் தந்து பாத்திரத்தை திறம்பட செய்ய வேண்டும் என்பதில் அக்கறை காட்டுவார். அது மர்திரமல்ல திடீர் மேடையேற்றம் என்று வரும் போதெல்லாம் தாராளமான ஒத்துழைப்பை வழங்கி உதவுவார். துறையூர் கலாமன்றத்தின் வளர்ச்சிக்கு பெறுமதியான பங்களிப்பினை வழங்கிய கலைஞர்களில் கணேசலிங்கம் அவர்களை துறையூரின் நாடக வளர்ச்சி தொடர்பான இந்த வரலாற்றுப்பதிவில் பதிவு செய்து கௌரவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றோம்.



## திரு பொன்னையா ஞானசம்பந்தன் அவர்கள்

அரங்கில் தோன்றும் போதெல்லாம் பார்வையாளர்களது பலத்த கரகோஷத்தை ஈர்க்கின்ற ஒரு ஸ்டன்ட் நடிகர் துறையூர் கலாமன்றத்தின் உடன்பிறப்பபு நாடகத்தில் துணை வில்லன் பாத்திரத்தில் சில நிமிடங்கள் மாத்திரம் நடக்கும் நடிகர் சிவராசனுடன் மோதும் சண்டைக்காட்சியில் அவரது வீர தீர சகாசங்கள் மெய் சிலிர்க்க வைக்கும் பார்வையாளர்களது கரகோஷம் ஓயாத அந்த சில நிமிடங்கள் உடன் பிறப்பு நாடகத்தினை உச்சத்தில் தூக்கி வைத்துவிடும். பல சமயங்களில் குறித்த சண்டைக் காட்சியின் போது உடல் காயங்கள் ஏற்பட்டு இரத்தம் சிந்திய போதும் காட்சிகளை இடைநிறுத்தாமல் எந்த விதமான தொய்வுமின்றி நடித்து முடித்த வரலாற்று சம்பவங்கள் சம்பந்தன் அவர்களையும் நடிகர் சிவராசன் அவர்களையும் என்றென்றும் மறக்கப்படமுடியாதவர்களாக்கி விட்டிருக்கின்றது. திரு பொ. திருஞான சம்பந்தன் அவர்கள் இன்று எம்மத்தியில் இல்லாவிடாலும் கூட துறையூர் கலாமன்றத்தின் வளர்ச்சிப்போக்கின்

வரலாற்றில் அவரது பதித்த தடங்கள் அழியாத சுவடுகளாக எப்போதுமே உயிர்ப்போடு வாழ்ந்து கொண்டிருக்கும்.



## அமரர் திரு செல்லர் சோமசுந்தரம் அவர்கள்

துறையூர் கலாமன்றத்தின் நாடகங்கள் அனைத்திலும் நகைச்சுவை பாத்திரமேற்று நடித்து மன்றத்தின் விசாலமான வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து வந்த மதிப்புக்குரிய கலைஞர் திரு சோமசந்தரம் அவர்களது கலைப்பணி மறக்கப்பட முடியாதவை முன் ஒத்திகையின்றி அரங்கினில் நகைச்சுவை தெறிக்கும் வசனங்களாலும் தனக்கே உரித்தான அங்க அபிநயங்களாலும் ரசிகர்களை விழுந்து விழுந்து சிரிக்கவைத்த சிறந்த கலைஞராக திகழ்ந்தார்- எமது கலா மன்றத்தின் மற்றைய நகைச்சுவை நடிகர்களான திரு செ. சுந்தரலிங்கம், திரு சி.தணிகாசலம் திரு சி.மா.மாரிமுத்து போன்றவர்களுடன் இணைந்து இவர் வெளிப்படுத்திய நகைச்சுவைக் காட்சிகள் ரசிகர்கள் மத்தியில் அமோக வரவேற்பை பெற்றிருந்தது. ஒரு நடிகராக மட்டுமல்லமல் ஆன்மீகத்தில் மிகுந்த ஈடுபாடுள்ளவராக வாழ்ந்து வந்தார். தேவாரம்,திருவாசகம்,புராணம் போன்ற திருப்பதிகங்களில் தேர்ந்தவராக விளங்கினார். அவரை நினைவு கூரும் அந்த இனிமையான காலங்ளும் அவரது கலைப்பணியும் என்றென்றும் போற்றுதற்குரியது. துறையூர் கலா மன்றத்தின வளர்ச்சியில் திரு சோம சுந்தரம் அவர்கள் ஆற்றிய பங்களிப்பானது மறக்கப்பட முடியாதவை. இப்பதிவினை எழுதும் பொழுது அன்னார் எம்மத்தியில் இல்லை அவர் எம்முடன் வாழ்ந்த நாட்களில் அவர் ஆற்றிய கலைத் தொண்டானது அழியாத சுவடுகளாக எம்மிடையே வாழ்ந்துகொண்டிருக்கின்றது. அன்னாரை நினைவு கூர்ந்து அவரது உயர்ந்த கலைப்பணியினை இங்கு பதிவு செய்வதில் மனநிறைவடைகின்றோம்.



## திரு மா.மாரிமுத்து, திரு சி.தணிகாசலம், திரு செ.சுந்தரலிங்கம் நகைச்சுவை நடிகர் குழாம.

துறையூர் கலாமன்றத்தின் நாடகங்கள் அனைத்திலுமான நகைச்சுவைக்காட்சியில் பங்கேற்று நடித்து நாடகங்களின் சிறப்புக்கு மிகவும் உறுதுணையாக இருந்து வந்தார்கள். திரு மா.மாரிமுத்து, திரு சி.தணிகாசலம், திரு செ.சுந்தரலிங்கம் ஆகியோர்

இவர்கள் மேடையில் தோன்றும் போதெல்லாம் அரங்கம் சிரிப்பொலியில் அதிரும். ஓவ்வொரு அரங்கிலும் வெவ்வேறுபட்ட சமூக சீர் திருத்த கருத்துக்களை நகைச்சுவை ததும்பும் வார்த்தைகள் மற்றும் அபிநயங்கள் மூலமாக வெளிப்படுத்தி வந்தார்கள். இவர்களது திறமையான நடிப்பாற்றல் இன்றுவரை பேசப்பட்டுக் கொண்டிருக்கின்றது. இவர்களில் பிரான்ஸ் நாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற திரு செ.சுந்தரலிங்கம் அவர்கள் துறையூர் கலா மன்றத்தின் நடிகராகவும், பாசப்பறவை நாடகத்தின் இயக்குநராகவும் செயல்பட்ட திரு அ. தேவதாசன் அவர்களுடன் இணைந்து தமது நகைச்சுவை சார்ந்த நடிப்பாற்றலை ஐரோப்பிய நாடுகளில் இன்றும் வெளிப்படுத்திய வண்ணமிருக்கின்றார்கள். துறையூர் கலா மன்றத்தின் வளர்ச்சியில் இவர்கள் அனைவரினதும் உயரிய பங்களிப்பினை நினைவு கூர்ந்து இங்கு பதிவு செய்வதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

## சிறிலங்கா கிராமிய மக்கள் ஒன்றியமும் துறையூரில் அபிவிருத் திட்டங்களும்

1990ம் ஆண்டளவில் பிரான்ஸ் நாட்டில் அன்றைய கால கட்டத்தில் வாழ்ந்து கொண்டிருந்த துறையூரைச் சேர்ந்தவர்களால் தமக்கிடையே ஒரு ஒருமைப்பாட்டினை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணப்பாட்டின் விளைவாக தோற்றமெடுத்ததுதான் துறையூர் அபிவிருத்தி அமைப்பு. 2004ம் ஆண்டளவில் அதன் பெயர் சிறி லங்கா கிராமிய மக்கள் ஒன்றியம் என பெயர் மாற்றம் பெற்றது. குறித்த அபிவிருத்தி அமைப்பு பிரான்ஸ்சில் இருந்த துறையூரவர்களுக்கிடையிலானதான ஒன்றாக மட்டுப்படுத்திவிடாமல் ஐரோப்பிய அமெரிக்க நடுகளில் வாழ்ந்து கொண்டிருக்கக்கூடிய துறையூரவர்களையும் இணைத்துக் கொண்டு பரந்து விரிந்த அமைப்பாக செயல்படுவது என்ற அடிப்படை நோக்கத்தினை கொண்டதாகவே இருந்து வருகின்றது

### துறையூர் அபிவிருத்தி திட்டங்கள்

1993 இடம் பெயர்வுக்கு உள்ளாக்கிய காலத்தில் பல்வேறு சிரமங்களை எதிர் கொண்டனர். இந்தக் கால கட்டத்தில்.. துறையூர் கடற்றொழிலாளர் கூட்டுறவுச்சங்கம் 25.02.1993 ம் திகதியிடப்பட்ட கடிதத்தின் மூலம் கேட்டுக்கொண்டதற்கிணங்க உதவித் தொகையாக ரூபா 50,000 எமது அமைப்பினால் அனுப்பிவைக்கப்பட்டது இந்நிதி தொழிலாளர்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டது.

2004 ம் ஆண்டில் நிகழ்ந்த சுனாமிப் பேரழிவினால் பாதிபுக்குள்ளான எமது தேச மக்களுக்கு எமது பங்களிப்பு

2004ம் ஆண்டு சுனாமி அனர்த்தத்தின் போது உடனடியாக விரைந்து செயற்பட்டு விசேட நிதி வசூல் செய்து எமது அமைப்பின் துறையூர் பிரதிநிதிகள் ஊடாக தேசத்தில் பாதிக்கப்பட்ட கிராம மக்களுக்கு நிதியாகவும மற்றும் பொருள் பொதிகளாகவும் உதவி வழங்கி உதவினோம்.

**<u>மீளக் குடியமர்வின் போதான நிவாரண நிதி 2006</u>**

2006ம் ஆண்டு துறையூர் கிராமத்தவரின் மீள குடியமர்வின் போது அடிப்படை வாழ்வாதாரங்கள் பற்றாக்குறை நிலைமைகள் காணப்பட்ட போது துறையூர் கடற்றொழிலாளர் கூட்டுறவுச்சங்கத்தின் அக்கால கட்டத்தில் இருந்த நிர்வாகத்தினரது கோரிக்கையினை ஏற்றுக்கொண்டு மக்கள் நிவாரண நிதியாக 2,28,500 ரூபா அனுப்பிவைக்கப்பட்டது. மீளக்குடியமர்ந்த துறையூர் மக்களுக்கு அவரவர் குடும்ப நிலைமைகளுக்கேற்ப பகிர்ந்தளிக்கப்பட்டது.

**<u>துறையூர் விளையாட்டரங்கு புனர் நிர்மாணத்துக்கான நிதி உதவி 2002</u>**

2002ம் ஆண்டு காலத்தின் போது துறையூர் ஐயனார் விளையாட்டுக்கழகத்தின் வேண்டுதலுக்கிணங்க மைதானத்தின் தாழ்வான பகுதிகளில் மழை வெள்ளம் தேங்கி நிற்பதால் விளையாட்டு மைதானத்தினை எல்லாக்காலத்திலும் பயன்படுத்த முடியதா நிலைமைகள் இருப்பதாக அன்றைய விளையாட்டுக்கழக நிர்வாகத்தினரால் எமக்கு தெரியப்படுத்தப்பட்டதன் நிமித்தம் குறித்த மைதானத்தின் தாழ்வான பகுதிகளுக்கு மண் பரப்பி மைதானத்தில் மழை வெள்ளம் தேங்கி நிற்காதவாறு சமப்படுத்தி சரி செய்யும் திட்டத்தினை பொறுப்பேற்று திட்டத்தினை செயல்படுத்த ரூபா இரண்டு இலட்சத்து ஐம்பதினாயிரம் (2,50,000) குறித்த துறையூர் விளையாட்டுக் கழகத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டு குறித்த திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டது.

**<u>ஐயனார் வித்தியாசாலை முன் மதில் வேலைத்திட்டத்திற்கான உதவியும் சுற்று வேலி வேலைத்திட்டமும்-2001</u>**

துறையூர் ஐயனார்வித்தியாசாலை முன் மதில் அமைக்கும் வேலைத்திட்டத்துக்காக ரூபா 90,000 வழங்கப்பட்டது. இத்தொகையின் மூலம் 100 அடி நீளத்துக்கு மதில் அமைக்கப்பட்டது. தொடர்ந்து சுற்று மதில் வேலைத்திட்த்துக்கு கென தேவைப்பட்ட 10,000,000 பத்து இலட்சம் ரூபா நிதியினை முழுவதுமாக வழங்க எமது அமைப்பால் முடியாத நிலையில் பாடசாலையினைச்சுற்றி வேலி போட்டுக் கொடுக்கப்பட்டது இத்திடடத்தினை எமது கிளை அமைப்பின் பொறுப்பாளராக இருந்த திரு பா.கோபிநாத்தின் மேற்பார்வையில் திரு ச.இரங்கநாதன் அவர்கள் வேலைத்திட்டத்தினை பொறுப்பேற்று செய்திருந்தார்.

## மாலை நேரக் கல்வி நிலையம் 2005-2007

பா. போபிநாத் தலைமையிலான துறையூரில் உள்ள எமது கிளை அமைப்பினரது ஏகோபித்த வேண்டுதலுக்கிணங்க ஆசிரியர் யோ. நந்தரூபனை இயக்குநராகக் கொண்ட மாலை நேர கல்வி நிலையம் ஒன்று 2005ம் ஆண்டு முற்பகுதியில் துறையூரில் ஆரம்பிக்கப்பட்டது. குறித்த கல்வி நிலைய இயக்குநர் மற்றும் எமது கிளை அமைப்பினரது கருத்துக்களுக்கும் அமைவாக மாணவர்களது வகுப்பு தரவரிசைக்கேற்ப (1-தொடக்கம் 11ம் வகுப்புவரை) கட்டண உதவித் தொகை எமது அமைப்பால் மாதாந்தம் வழங்கப்பட்டு வந்தது. திரு யோ.நந்தரூபன் அவர்களது கடினமான உழைப்பும் எமது அமைப்பின் துறையூர் பிரதிநிதியான திரு பா.கோபிநாத் அவர்களது ஆர்வத்துடன் கூடிய ஈடுபாடும் குறித்த திட்டம் வெற்றிகரமாக நடைபெற காரணிகளாக அமைந்தன. குறித்த கல்விநிலையத்தின் சிறப்பான கல்வியூட்டல் காரணமாக 2005ம் ஆண்டு புலமைப்பரிசில் பரீட்சையில் 3 துறையூர் மாணவர்கள் சித்தியெய்தியிருந்தனர். துறையூரில் 3 மாணவர்கள் குறித்த பரீட்சையில் சித்தியெய்தியமை இதுவே முதல் தடவையாகும்.

### துறையூர் ஐயனார் வித்தியாசாலை பிரத்தியோக வகுப்புக்கான உதவி 2010-2014

2010ம் ஆண்டு தொடக்கம் ஐயனார் வித்தியாசாலை மாணவர்களை ஊக்குவிக்கும் வகையில் 2 மணி நேர பிரத்தியோக வகுப்பு நடாத்தப்படுகின்றது இதற்காக கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு 2012ம் ஆண்டு வரையில் மாதாந்தம் ரூ15000ம் (5ஆசிரியர்களுக்கு தலா 3000 ரூபா வீதம்) பின்னர் 2012ம் ஆண்டு தொடக்கம் தலா 2000ரூபா வீதம் 10,000ரூ மாதாந்த வேதனமாக வழங்கப்பட்டு வருகிறது இத்திட்டம் 2010ம் ஆண்டு தொட்டு நடைபெற்று வருகின்றது.

இது தவிர 2013ம்ஆண்டு பங்குனி மாதம் தொடக்கம் சிறுவர் பாடசாலை ஆசிரியர்கள் மூவருக்கு மாதாந்தம் தலா 1000ரூ வீதம் மொத்தமாக மாதந்தம் 3000ரூபா வழங்கப்பட்டு வருகின்றது.

மேற்படி எமது அமைப்பினால் துறையூரில் நிறைவேற்றப்பட்ட கல்வி மறும் பிற அபிவிருத்தி வேலைத்திட்டங்கள் எமது அமைப்பிற்கு ஒத்தாசையாக இருந்து அனைத்து செயற்பாடுகளும் நேர்த்தியான வகையில் நிகழ்வுறச் செய்யும் நடவடிக்கையில் தம்மை ஈடுபடுத்தியவர்கள் பலர் அந்த வரிசையில் மிகவும் நெருக்கடியான கால கட்டத்தில் எமது ஆரம்ப வேலைத்திட்டங்களான (1998) சிறுவர் பாடசாலை இயக்கியமை கடற்றொழிலாளர்களுக்கு வலைக்கடன் வழங்கியமை ஆகிய வேலைத்திட்டங்களை எமது நிதி உதவியுடன் செயல்படுத்தியவர் காலம் சென்ற ஆசிரியர் திரு செல்லையா சண்முகவடிவேல் அவர்கள் அன்னாரது சமூக அக்கறை மறக்கப்பட முடியாததாகும் அவரது நற்பணியினை நினைவு கூர நாம் கடமைப்பட்டிருக்கின்றோம்.

மேலும் இதே போன்று விளையாட்டுத்திடல் மண் பரவி சமப்படுத்தல் வேலைத்திட்ம் (2002) தொடர்பில் எமக்கு ஒத்தாசையாக இருந்தவர்கள் துறையூர் ஐயனார் விளையாட்டுக்கழக நிர்வாகத்தினர் என்பதை நாம் இவ் ஆவணத்தின் மூலமாக அறிவிக்கின்றோம்.

இன்னும் ஐயனார் வித்தியாசாலை முன்மதில் அமைப்பு மற்றும் சுற்று வேலி அமைத்தல் வேலைத்திட்டத்துக்கு எமது செயல்திட்ட நிறைவேற்றாளர்களாக எமது கிளைப் பொறுப்பாளர் திரு பா.கோபிநாத் மற்றும் திரு ஆ.செல்வராசா, திரு சி.இரங்கநாயகம் ஆகியோர் பங்காற்றியிருந்தனர் அவர்களது அத்தகைய சமூகப் பொறுப்பினை மதிக்கும் வகையில் இக்குறிப்பினை இங்கு பதிவு செய்கின்றோம்.

மேலும் எமது அமைப்பினால் மேற்கொள்ளப்பட்ட அவசர கால நிவாரண நிதி உதவித்திடடத்தினை (2006) நேர்த்தியான முறையில் செயல்படுத்திய திரு சி.கார்த்திகேசு அவர்களதும் அவர் தலைமையிலான கடற்றொழிலாளர் கூட்டுறவுச் சங்க நிர்வாகத்தினதும் சமூக அக்கறையினை மதித்து குறித்த தகவலை இங்கு பதிவு செய்கின்றோம்

தொடர்ந்து நடந்த எம் பயணத்தில் எமது நிதி பங்களிப்புடன் இயக்கப்பட்ட துறையூர் மாலை நேரக் கல்வி நிலையம்(2005-2007) தொடர்பில் அக்கல்வி நிலைய இயக்குநராகவும் ஆசிரியராகவும் அர்ப்பணிப்புடன் செயலாற்றிய திரு யோ.நந்தரூபன் அவர்களது உயர்வான எண்ணங்களுடன் கூடியதான சமூக அக்கறையினையும் இவருடன் இணைந்து குறித்த நிலைய நிர்வாக பணிகளிலும் எம்முடனான தொடர்புகளையும் நேர்த்தியாக கையாண்டு வந்த எமது அமைப்பின் துறையூர் கிளையின் இயக்குநர் திரு பா.கோபிநாத் ஆசிரியை இராசநாயகம் புவனேஸ்வரி மற்றும் கிளை அமைப்பின் உறுப்பினர்கள் அனைவரினதும் சமூக பொது நலன் மீதான மேலான ஈடுபாட்டடினை பெருமையுடன் நினைவு கூர்ந்து இத் தகவலை இங்கு பதிவு செய்கின்றோம்.

இத்திட்டத்தினை தொடர்ந்து எமது அமைப்பின் நிதி உதவியுடன் (2010-2014) நடாத்தப்பட்டு வரும் துறையூர் ஐயனார் வித்தியாசாலை மாலை நேர வகுப்புக்களை நடைமுறைப்படுத்துவதில் எம்முடன் விசுவாசத்துடன் ஒத்துழைத்து வந்த திரு பா.கோபிநாத், ஆசிரியை திருமதி இராசநாயகம் புவனேஸ்வரி அவர்கள் மற்றும் அவருடன் இணைந்து பணியாற்றிய குறித்த பாடசாலை ஆசிரியர்கள் அவைரினதும் சமூக அக்கறையுடன் கூடியதான பங்களிப்புகள் ஆவணப்பதிவில் இருப்பதன் அவசியம் உணரப்படுவதால் இத்தகவலை இங்கு பதிவு செய்கின்றோம்.

## <u>வேலணை துறையூர் கண்ணபுரம்குடியிருப்பும் அதன் தோற்ற வரலாறும்</u>

வேலணை மேற்கு துறையூரின் கரையோரமாக அமைநதுதுள்ளதும் 6ம் வட்டாரத்துக்குள்ளடங்கியதுமான இன்று கண்ணபுரம் என அழைக்கப்படுகின்ற அரச குடியேற்றத்திட்டத்தின் கீழான குடியிருப்பின் தோற்றம் தொடர்புடையவையாக இருந்த சம்பவங்களையும் மனிதர்களையும் இன்று இருக்க்க்கூடிய சமகால எத்தீர்கால சந்த்தியினரின் அறிதலுலுக்கு கொண்டுவருவதன் தேவை உணரப்பட்டதால் அவ்விடயம் தொடர்பில் முக்கியமான சில் தகவல்களை இங்கு பதிவு செய்கினறோம்

வேலணைக்கிராமத்தின்4ம்6ம் வட்டாரங்களடங்கிய தென்பகுதி துறையுராக பரிணாம்ம் பெற்ற வரலாற்றினை இவ் ஆவணத்தில் பதிவாகியுள்ளது அந்த துறையூர்துறையு+ரின் கடலோரத்தை அண்டிய மேற்குப்பகுதியும் யாழ் புங்குடுதீவு பிரதான வீதியில் தொடங்கி அம்பாள் நகர் சுருவில் புளியங்கூடல் ஊடாக ஊர்காவற்றுறை யினை நோக்கிய வீதியின் தெற்குப்பகுதியாகவும் குறித்த பிரதான வீதியிலிருந்து சுமார் 700 மீற்றர தொலைவில் அமையப்பெற்றிருக்கும் இந்தக் குடியிருப்பு 1978ம் ஆண்டுக்கு முற்பட்ட காலத்தில்

வெறுமனே ஒரு ஈச்சம் காடாகவே இருந்து வந்த்து அரசுக்குரிய இந்தக்காடுகளில் ஈச்சமரங்களின் ஆதிக்கம் மேலோங்கியிருந்த்து இக்காட்டின் கடலோரமாக தாழை மரங்கள் நிறைந்து காணப்பட்டன துறையு+ரைச்சேர்ந்த அன்றைய வாலிபர்கள்( நன் உட்பட) ஈச்சம் பழம் பறிப்பதற்காக கூட்டமாக வந்து போவதை வழக்கமாக கொண்டிருந்தார்கள். அமர்ர் மு. வினாசித்தம்பி அவர்களால் வாங்கிவிடப்பட்ட குதிரையும் குறித்த ஈச்சங்காட்டிலேலயே மேச்சலுக்காக விடப்பட்டிருந்த்து அந்த காலத்து இளைஞர்கள ; நானுட்பட குறித்த குதிரையில் சவாரி செயது விளையாடிய நாட்களை நினைவு கூருகின்றேன்.

பெரிதான வீதி இருக்கவில்லை வெறும் நடைபாதைகளே இந்த காட்டுப் பகுதியினை மேற்கும் தெற்குமாக பிரித்துக்காட்டிக் கொண்டிருந்த்து. இதன் மேற்குப்பகுதி நிலங்கள் வேலணை மேற்கைச் சேரந்தவர்களுக்கு சொந்தமாக இருந்த்ன தென்பகுதி மாத்திரம் அரசுக்குரிய காணியாக இருந்தன. இந்த நிலங்களை மக்கள் குடியிருப்புகளாக மாற்றும் முயற்சியில் நாம் ஈடுபட்டேடாம் அந்தக்காலப் பகுகுதியில் அரச காணிகள் மக்கள் குடியிருப்புக்களுக்காக வழங்கும் திட்டம் அமுலில் இருந்த்து ; குறித்த திட்டத்திற்கு அமைவாக அரசுக்குரிய காணியென அடையாளம் காணப்பட்ட மேற் குறித்த நிலப்பகுதியக்குதியினை சொந்தக் காணியற்ற மற்றும் சிறு காணி மட்டும் சொந்தமாயுள்ள எமது மக்களுக்கு பகிர்தளிக்கும் முற்சியில் இறங்கினோம் (எனது இந்த முயற்சியில் திரு சின்னத்தம்பி தணிகாசலம் அவர்கள் உறுதுயணயாக நின்று செயல்பட்டார் என்பதும் அப்போதைய காரியதிகாரி செயலகத்தில் பணிபுரிந்த சின்னத்தம்பி துரைராசா என்பவர் இது விடயம் வெற்றிபெற பாரிய பங்களிப்பினை நல்கினார் என்பதும் மறைக்கப்பட முடிடியாத உண்மைகளாகும். ) அப்போதைய பாராளுமன்ற உறுப்பினரான திரு கர்பெர் இரத்தினம் அவர்களின் கவனத்துக்கு இது விடயத்தை கொண்டு சென்றோம் அவர் உடனடியாகவே காரியதிகாரி அவர்களுளுடன் தொடர்பு கொண்டு இது விடயம் தொடர்பில் தேவையான முன்னெடுப்புக்களை மேற்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டார்ர் மறு நாள் மதியம் தலைமைக்காரயதிகாரி திரு காரத்திகேசு அவர்கள் குறித்த நிலப்பகுதியினை ப◌ர்வையிட்டார் நானும் தணிகாசலம் அவர்களும் அங்கு பிரசன்னமாக இருந்தோம். மறுதினம் காரியதிகாரி தலைமையகத்துக்குகு நாம் அழைக்கப்பட்டு குறித்த காணிவழங்கல் திட்டம் நடைமுறைப்படுத்தப்படும் என தலைமைக்காரியதிகாரியால் உறுதியளிக்கப்பட்டதுடன் குறித்த விடயம் தெதாடர்பான மேல் நடவடிக்கைகளை கவனிக்கும் பொறுப்பு துறையு+ரைச் சேர்ந்த வரும் காரியதிகாரி அலுவலகத்தில்ன் பணியாளருமான திரு சின்னத்தம்பி துரைராசா அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது தொடர்ந்து துறையு+ர் மற்றும் அம்பாள் நகரைச் சேர்ந்த காணியற்ற மக்களிடம்மிருந்து விண்ணப்பங்கள் கோரப்பட்டன மக்கள் குடியேற்றத்திட்டத்திற்கான குறித்த நிலப்பகுதி தலா 2 பரப்பு என்ற அடிப்படையில் பிரித்து படம் வரையப்பட்டது விண்ணப்பித்தவர்களிடையே தேர்வு நடைபெற்றது தேர்வுக் குழுவில் சி.துரைராசா காரியதிகாரி 6ம் வட்டார கிராமவேகர் பாராளுமன்ற உறுப்பினர் கா பொ இரத்தினம் -யே

பி ஆறுமுகம் ஆகியோர்ர் உள்ளடங்கியிருந்தனர் விண்ணப்பதாரிகள் ஒவ்வொருவரும விசாரிக்கப்பட்டு (ஒவ்வொருவரது தகுதிபற்றி என்னிடம் மற்றும் அமபாள் நகரைச்சேர்ந்த திரு கந்தசாமி அவர்களிடமும் கருத்து கேட்கப்பட்டது) உண்மையிலேயே காணியற்றவர்கள் அடையாளம் காணப்பட்டு தேர்வுசெய்யப்பட்டனர். இதனைத் தெடர்ந்து தெரிவான விண்ணப்பதாரிகளுக்கு காணிகள் அடையாளம் காட்டப்படும் நிகழ்வு நடந்தேறியது இதன்போது நானுட்பட பாராளு மன்ற உறுப்பினர் கா பொ இரத்தினம் அவர்கள் தலைமைக்காரியத்திகார்ரி கார்த்திகேசு அவர்கள் சி துரைராசா அவர்கள் திரு சி கந்தச்சாமி ஆகியோர் பிரச்சன்ன்னமாக இருந்தனர் அம்பாள் நகர பகுதி மக்களுக்கு குறித்த நிலப்பரப்பின் மேற்குப் பக்கமாகவும் துறையூரவர்களுக்கு கிழக்குப் பக்கமாகவும் கொடுப்பதென சமரசம் காணப்பட்டு குறித்த காணிப்பங்கீடு இனிதே நிறைவெய்தியது..

குறித்த குடியேற்றத்திட்டம் தடைகளின்றி நிறைவேற காரியதிகாரி அலுவலக்கத்தில் பணியாற்றிய திரு சி துரைராசா அவர்களது அக்கறையுடன் கூடிய பங்களிப்புக்கு நானும் இப்பதிவும் சாட்சியம் கூறி நிற்கிறது

குறித்த கண்ணபுர குடியேற்றத் திட்டத்தில் முன்னின்று உழைத்தவர்கள் யார் யார் என்பது இன்று(2016) 50 வயதுதுக்கு மேற்பட்ட பெருமபாலான கண்ணபுரத்து வாழ் மக்களால் நன்றே அறியப்பட்ட ஒரு விடயமாகும். இருந்த போதிலும் மக்கள் நலன் சார் விடயங்களில் ஒரு கூட்டு முயற்சி அவசியம் என்பதையும் அது தொடர்பில் அயராது தியாக உணர்வுடன் பாடுபட வேண்டும் என்பதையும் வலியுறுத்தவே இப்பதிவு இங்கு பதிவு செய்யப்படுகிறது

துறையூர் காசி

மாசி 2016

**இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தினால்துறையூரில் மரங்கள் நாட்டப்பட்ட வேளையில்**

**02.10.2014**



**<u>சம காலத்தில் நம்முடன் இல்லாதவர்களும் நினைவில் கொள்ளப்பட வேண்டியவர்களுமான சமூக நலன் விரும்பிகள்</u>**

திரு வ. இராமலிங்கம்

திரு மு. வினாசித்தம்பி

திரு இ.வேலாயுதபிள்ளை

திரு செ. சண்முகவடிவேல்

திரு செ.சாந்தலிங்கம்

திரு கா.இராசரெத்தினம் (கலையன்பன்)

திரு ஆ.சண்முகம்

திரு வை.காங்கேசு

திரு ஐ.கந்தையா

திரு கா.இராசரெத்தினம

**உடன்பிறப்பு நாடக நடிகர் வட்டம் 19880 வரை**





கலையன்பன் துறையூர் காசி

கா. இராசரெத்தினம் - மூலக் கதை-உதவி இயக்குநர்

கதை வசனம்-இயக்குநர்



திரு செ.சிவராசன



திரு பொ.திருஞானசம்பந்தன்



திரு **செ.சுந்தரலிங்கம்**



திரு பா.மகேந்திரன்



திரு.கி நாகராசன்



திரு அ.தேவதாசன்



திரு.சு.செல்வராசா



**திரு சு.தவநாயகம்**



திரு மா .மாரிமுத்து



திருசெ.சோமசந்தரம



திரு க. குமாரன்



திரு ச. சித்திரவடிவேல்





திரு சி. தணிகாசலம் செல்வி க சோதிமலர்

## நன்றி நவிலலும் முடிவுரையும

துறையூர் பதிவுகள் என்ற ஆவணப் பதிவேடொன்றினை வெளிக் கொண்டு வரவேண்டுமென்ற எண்ணக்கருவானது எமது அமைப்பினைச் சேர்நத உறுப்பினர் சிலரது கூட்டு சிந்தனையின் விளைவேயாகும். குறிப்பாக துறையூர் காசி (காசிலிங்கம்), திரு அ. தேவதாசன் போன்றோரிடம் உருவாகிய இக்கருத்தானது திரு சி .தணிகாசலம் திரு.சுந்தரலிங்கம் போன்றோரால் வலியுறுத்தப்பட்டு முழமையடைந்தது என்பதை முதற்கண் இங்கு தெரியப்படுத்த விரும்புகின்றேன். பல சகாப்தஙகளை கடந்து வந்த நமது பகுதிக்கிராம மக்களது வாழ்வியலின் படிப்படியான மாறுதல்கள் தொடர்பான தகவல்கள் தடயங்கள் எதனையும் இதுவரை அறிந்துகொள்ள முடியாதிருந்தது . இதற்கான காரணம் அந்தந்தக் கால கட்டங்களில் இது போன்ற ஆவணப்பதிவுகள் வெளிக் கொண்டுவருவதிலோ அல்லது வேறெந்த விதத்திலாயினும் தரவுகள் பதியப்படவேண்டுமென்பதிலோ அக்கறை காட்டப்படாமையேயாகும். எனவேதான் அது போன்ற தவறுகளை நாமும் இழைத்துவிடக்கூடாது என்ற நோக்கில் நாம் வாழுகின்ற காலத்திலும் நமக்கு முந்திய சமூகத்தினதும் வாழவியல், அந்தந்த கால சமூக கட்டமைப்பு மற்றும் அவற்றின் முன்நோக்கிய நார்வுகள் தொடர்பான பதிவுகளை நாம் அறிந்த வரையில் எழுத்து வடிவத்தில் கொண்டுவரும் அவசியமான பணியினை நாம் பொறுப்பெடுத்க் கொண்டோம்.

எம்மவரின் அமைப்பான இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியத்தின் முற்று முழுதான ஒப்புதலுடன் மேற்கொள்ளப்பட்ட முயற்சி நிறைவடையக் கண்டு மகிழ்ச்சியடைகின்றோம்.

முந்திய சமூகம் தொடர்பான அனைத்து தரவுகளையும் விடுபாடின்றி இதில் ஆவணப்படுத்தியுள்ளோம் என்று நாம் மார்தட்டிக்கொள்ள முடியவில்லை எனினும் இப்பதிவில் காணப்படக்கூடிய பலதரப்பட்ட ஆக்கங்கள் வழியாக கணிசமான தரவுகளை ஆவணப்படுத்தியுள்ளோம். இவ் ஆவணமானது சமகால மற்றும் எதிர்கால சந்ததியினரின் மத்தியில் சமூக அக்கறையினை தூண்ட வல்ல ஒரு உந்து சக்தியாக இருக்கும் என்பதை நாம் உறுதியாக நம்புகின்றோம்.

மேலும்  எமது வேண்டுதலுக்கு மதிப்பளித்து இவ் பதிவேட்டிற்கான வாழ்த்துரை மற்றும் ஆசியுரை வழங்கி உதவிய நமது துறையூரின் முன்னோடிகளுக்கும் சமூக அக்கறையின் நிமித்தம் இந்த பதிவேட்டை முழுமைப்படுத்த ஆக்கங்களை தயாரித்து உரிய காலத்தில் தந்துதவிய அனைத்து அன்பர்களுக்கும் சிரம் தாழ்த்தி நன்றிகளை வெளிப்படுத்துகின்றோம்.

மேலும் தூர தேசத்தில் இருந்த வண்ணம் கணணி மற்றும் தொலைபேசித் தொடரபாடல்கள் மூலம் எமது நினைப்புகளுக்கேற்ப இவ் ஆவணப்பதிவேட்டினை அழகாக வடிவமைத்து அச்சேற்றி உருக் கொடுத்த அருமைத்தம்பி யோகராசா இன்பரூபன் அவர்களது பெறுமதிமிக்க பணி மறக்கப்பட முடியாதது. இப்பதிவேட்டின் உருவாக்கத்தில் அவர் நல்கிய பெறுமானமான பங்களிபிற்காக அவருக்கு ஏராளமான நன்றிகளை தெரிவித்துக் கொள்கின்றோம். மேலும் குறித்த பதிவேட்டினை உருவாக்குவதில் எதிர் கொண்ட நிதிச் செலவீனங்களில் பஙகளிப்பு நல்கிய திரு செ.இராமலிங்கம், திரு மு.யோகேவரன் ஆகியோருக்கு மனம் நிறைந்த நன்றிகளை வெளிப்படுத்துகின்றோம்.

இறுதியாக இப் பதிவேட்டினை நமது கிராமத்தில் வெளியீடு செய்யும் நடவடிக்கைகளுக்கு எம்முடன் ஒத்தாசையாக இயங்கி வெளியீட்டு விழா தொடர்பான அனைத்துப் பணிகளிலும் செயலூக்கத்துடன் உழைத்த துறையூர் நூல் வெளியீட்டுக் குழுவினர் உட்பட ஏனைய துறையூரை மையமாகக் கொண்ட அனைத்து சமூக நிறுவனங்களின் பிரதிநிதிகள் மற்றும் எம்மினிய துறையூர் மக்கள் துறையூரின் அயல் சமூக மக்கள் அனைவருக்கும் எமது பணிவுடன் கூடிய நன்றிகளை வெளிப்படுத்துகின்றோம்.

நன்றியுடன்

நூல் வெளியீட்டு குழு

இலங்கை கிராமிய மக்கள் ஒன்றியம்